

# ஆத்திசூடி

## நீதிக்கதைகள்

கணேஷ் கம்பெனி
சென்னை



துருவனும் திருமாலும்.

ஆத்திசூடி யமர்ந்த தேவனை
யேத்தி யேத்தித்தொழுவோம் யாமே.

# ஆத்திசூடி

## நீதிக் கதைகள்

(படங்கள் அமையப்பெற்றது)



ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புஸ்தக சாலை
நெ. 3-32 கயினியப்ப நாய்க்கன் வீதி
பார்க்டவுன் சென்னை.

சென்னை

கணேஷ்கம்பெனி

# முகவுரை.

---

பலராலும் புண்ணிய பூமி யென்று கொண்டாடப்
பெற்ற நமது பரதகண்டத்தில் பண்டைக் காலந்தொட்டு
நீதிநூல்களைப் பெருமைப்படுத்திப் பொன்னேபோற்
போற்றிக் கொண்டாடுவது வழக்கம். ஒவ்வொருவனும்
தருமம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்னும் நான்கு புரு
ஷார்த்தங்களையும் அடைய முயற்சித்து ஒழுகவேண்டு
மென்பது நம்மனோருடைய கொள்கைகளுள் முதன்மை
யானது. இந்நான்கு உறுதிப் பொருள்களையும் பெறு
தற்குக் கருவியாய் விளங்குவது நீதிநூலாதலின் நமது
பெரியோர்கள், கற்றோரேயன்றி மற்றோரும் எளிதினு
ணர்ந்து நல்வழிப்படவும் எக்காலத்தும் யாவருக்கும்
பயன்படவும் கருதியே நீதிநூல்களை மிகச் சுலபமான
நடையில் சுருங்கச் சொல்லன் முதலிய அழகுடன் இய
ற்றியுள்ளார்கள். இப்படிப்பட்ட நீதிகளைக் கதைரூப
மாகப் போதித்தால் கல்விகற்கும் இளஞ் சிறுவர்களும்
சிறுமிகளும் அவற்றை நன்கு உணர்வதுடன் அந்நீதிக
ளும் அவர்களுடைய மனத்திற் பசுமரத்தாணிபோற்
பதியும்; இவ்வுண்மை இந்நாட்டிலேயேயன்றி மற்
றைய நாடுகளிலும் அறிந்து கையாடப்பெற்று வருகி
றது. இதுபற்றியே நமது நாட்டுப் பெரியோர்களும்
நீதிகளை நன்குபுகட்டப் பலகதைகள் எழுதியுள்ளார்கள்.

நீதிநூல்களிற் பார்வைக்கு மிகச் சிறியதாயிருப்பினும் விஷயத்தில் மிகப் பெரியதான 'ஆத்திசூடி' என்னும் நூலில் உள்ள நீதிகளை விளக்கிக்காட்டப் பெரும்பாலும் நமது இதிகாச புராணங்களில் உள்ள கதைகளையும் சிறுபான்மை கர்ண பரம்பரையாக இந்நாட்டிலும் ஏனைய நாடுகளிலும் வழங்கும் கதைகளையும் சேர்த்துச் சுருக்கமாக ஒருநூலியற்றினால் தமிழ்கற்கும் மாணவர்களுக்குப் பயன்படுமென்று கருதி இந்நூல் எழுதப்பெற்றுள்ளது. நீதிகளை விளக்கப் பொருத்தமான கதைகளைத் தேர்ந்தெடுப்பதிற் பலரும் பலவிதமாக அபிப்பிராயப்படக் கூடுமாதலின், இந்நூலின்கண் எழுதப்பெற்றுள்ளவைகள் பொருத்தக் குறைவுள்ளவைகளாக இருத்தலும் கூடும். அதற்காகப் பொருத்தருள் புரியுமாறு பெரியார்களைப் பெரிதும் வேண்டிக் கொள்ளுகிறோம். இங்குக் காட்டிய கதைகள் மிகச் சுருக்கமாய் வேண்டிய விஷயத்தை விளக்க அவசியமான அளவே எழுதப் பெற்றுள்ளன.

இந் நன்முயற்சியில் எமக்கு ஊக்கத்தைத் தந்து பல சமயங்களிலும் உதவிசெய்த நண்பர்களுக்கு வந்தனமளிக்க மிகவும் கடப்பாடுடையேம்.

கணேஷ்கம்பெனி.

# அட்டவணை

MR. Annamalai.
KARAIKUDI

# ஆத்திச்சூடி நீதிக் கதைகள்

---

## 1. அறஞ்செயவிரும்பு.

தருமத்தைச்செய்ய எப்பொழுதும் விரும்புவாயாக, என்பது இதன்பொருள். தருமஞ்செய்வதற்குப் பொருள் வேண்டுவது அவசியம். பொருள் இல்லாவிட்டால் தருமஞ்செய்ய முடியாதெனினும், ஒருவனுக்கு அறஞ் செய்யவேண்டுமென்னும் விருப்பமாத்திரம் இருக்குமானல் ஒரு காலத்தில் நல்வினைப்பயனல் பொருள் கிடைக்கின்ற சமயத்தில் அவன் தருமஞ்செய்வான் என்பது நிச்சயம். ஆதலால் அறத்தைச்செய்ய யாவருக்கும் விருப்பம் முதலில் இருக்கவேண்டும். விருப்பம் உண்டானல் வழியும் ஏற்படும். ஒவ்வொருவனும் கஷ்டப்பட்டானுலும் தருமத்தைச் செய்ய முயற்சிசெய்ய வேண்டும். ஏனென்றல், தருமம் நன்மையை உண்டாக்கும் சக்தியுடையது. 'தருமமே ஜயம்' 'தருமம் தலைகாக்கும்' என்னும் பழமொழிகளே தருமத்தின் சிறப்பை யாவருக்கும் எடுத்துக்காட்டும். தருமம் எப்படித் தலைகாக்கும் என்கிற விஷயம் பின்வருஞ் சரித்திரத்தால் தெரியவரும்.

முன்னொருகாலத்தில் குந்திபோசவம்ச ராஜனான சூரசேனனுக்குப் பேரழகுவாய்ந்த குந்தியென்ற பெண் ஒருத்தியிருந்தாள். அவள் தூர்வாசரிஷியின் அனுக்கிரகத்தால் கிடைத்த மந்திர சக்தியினால், தான் கன்னிகையாயிருக்கும்பொழுதே ஓராண் குழந்தையைப் பெற்றனள். இது தன் குலத்துக்குப் பழியைத் தருமென்று பயந்து பெற்றகுழந்தையை அவள் ஒரு பெட்டியில் வைத்துக் கங்கையில் விட்டுவிட்டாள். மிதந்து சென்ற பெட்டியை அத்தினாபுரி மன்னனுடைய தேர்ப்பாகன் கண்டெடுத்து, அந்தக் குழந்தைக்கு கர்ணன் எனப்பெயரிட்டுத் தன் குழந்தைபோல் வளர்த்து வந்தனன். அவனும் சுக்கிலபக்ஷத்துச் சந்திரன்போல் வளர்ந்து அரசர்களுக்கு உரிய வில்வித்தையிலும் யானையேற்றம் குதிரையேற்றம் முதலிய தொழிலிலும் மிகவும் சிறப்படைந்து விளங்கினான். இவனுடைய சாமர்த்தியத்திற்கு மெச்சின அத்தினாபுர அரசகுமாரனான துரியோதனனுக்கும் இவனுக்கும் மிகுந்த நட்புண்டாயிற்று. துரியோதனன் கர்ணனை அங்கதேசத்திற்கு அரசனாக்கினான். கர்ணன் எப்பொழுதும் தருமஞ் செய்வதிலேயே எண்ணமுடையவன்; யார் எதைக் கேட்டாலும் இல்லையென்னுமற் கொடுக்கும் சுபாவமுடையவன்; கொடையிற் கர்ணனே சிறந்தவன் என்று எவரும் பேசப் பெரும்புகழடைந்தான். இவன் பிறந்த காலத்தில் கவசகுண்டலங்களோடு பிறந்தவன். அந்தக் கவசகுண்டலங்கள் உள்ள அளவும் அவனை உலகத்தில் எவரும் ஜயிக்கமுடியாது. இந்திரன் ஒரு பிராமணனைப்போல் வேடம்பூண்டு கர்ணனிடம் வந்து

அவனுடைய கவசகுண்டலங்களை யாசிக்க, அவன் தன் உயிருக்குயிரான அவற்றையும் மனக்களிப்புடன் தானம் செய்தனன்.

துரியோதனனுக்கும் பாண்டவர்களுக்கும் உண்டான மகாபாரதயுத்தத்தில் கர்ணன் தனது உயிர்த்தோழனை துரியோதனனுக்குத் துணைவனாய் அவன் சேனைக்குத் தலைவனாய்ப் பேருதவி புரிந்தான். அப்பொழுது சேனாதிபதியான கர்ணனுக்கும் பாண்டவவீரனான அருச்சுனனுக்கும் பெரும்போர் நடந்தது. அருச்சுனன்விட்ட அம்புகளால் அடிபுண்டு மூர்ச்சித்து இரதத்தில் விழுந்துவிட்ட கர்ணனைக் காப்பாற்றும் பொருட்டு, அவன் இத்தனைநாளும் செய்த தருமத்தின் பலனாகத் தருமதேவதை அவனிருந்த இரதத்திற்குமுன் வெளிப்பட்டுநின்று அருச்சுனன் கணக்கில்லாமற் சொரியும் அம்புக்கூட்டங்களை யெல்லாம் கர்ணன்மேற் படவொட்டாமல் விழுங்கி நின்றது. அருச்சுனனும் கைசலித்தான்; கண்டு நின்ற பலரும் தருமந் தலைகாத்து நிற்கும் பெருமையை வியந்து கர்ணனைப் புகழ்ந்து கொண்டாடினார்கள். அப்பொழுது தருமஞ் ஜயித்து நிற்பதையும் அருச்சுனன் தோற்றலையும் அறிந்த கிருஷ்ணன் ஒரு பார்ப்பானைப்போலக் கோலங்கொண்டு இளைத்துக் கிடக்கும் கர்ணனிடம்போய் அவன் செய்துள்ள தருமத்தின் பலன் முழுவதையும் தனக்குத் தானமாகக் கொடுக்கவேண்டினன். சாகுந் தறுவாயிற் கிடக்கும் கர்ணன், இந்த நிலையிலும் தருமஞ்செய்யச் சமயம் வாய்த்ததே என்றும், தருமமாகக் கேட்கும் பொருளும் தன் கைவசமுள்ளதாயிருக்கிறதே என்

றும், மகிழ்ச்சியோடு கிருஷ்ணனுக்குத் தன் தருமத்தை யெல்லாம் தானம் செய்தான். பிறகு அவனை அருச்சுனன் சுலபமாய்க் கொன்றுவிட்டான். தருமம் உள்ள வரையில் அவனைக் கொல்லமுடியவில்லை. தருமமே ஜயம்.

## 2. ஆறுவது சினம்.

கோபத்துக்கு இடங்கொடுக்காமல் அடக்கவேண்டும் என்பது இதன்பொருள். கோபம் மனிதர்களிடத்தில் இயல்பாயுள்ள குற்றங்களுள் மிகவும் பொல்லாதது. ஒருவனுக்குக் கோபம் உண்டாகின்றகாலத்தில் அவன் பைத்தியம் பிடித்தவனைப்போலத் தன் வசம் தப்பி நடக்கிறான். அதனால் கோபமடைந்தவன் பழிபாவங்களுக்கு அஞ்சாதவனாய்க் கருணையற்றுக் கல்வியறிவு தொலைந்து தான்மேற்கொண்ட ஒழுக்கமும் தவறி மானமழிந்து பலராலும் வெறுக்கப்படுவான். இதனாலேதான் கோபம் சண்டாளம் என்று உலகத்தார் கூறுவதும். தன்னிலும் வலியுடையோர் மேலும் தனக்குச் சமானமானவர் மேலும் உண்டாகும் கோபத்தை அடக்குவது சிறந்ததில்லை; மேலானவன் மேல் ஒருவன் கோபித்தால் அவன் மலையின்மேல் மோதும் மட்கலம்போல் உடைந்தழிவான். ஆகவே சுயாபிமானத்தால் கோபத்தை அடக்குவது ஒரு பெரிய காரியமாகாது. தன்னிலும் தாழ்ந்தோர்மேல் உண்டாகும் கோபத்தை அடக்குபவனே மிகச் சிறந்தவன்.

கோபம் கொலைக்கு காரணமானது. கோபமடைந்தவன் பிறரைக் கொல்லுவதோடு தன்னையுஞ் சிலவேளை

கொன்றுகொள்ளுகிறான். இதனாலேதான் பெரியவர்கள் சினத்தைச் சேர்ந்தாரைக் கொல்லியென்று கூறினார்கள். பெருந் தீமையை விளைவிக்கும் இந்தக் கோபத்தை இளமை தொட்டே ஒருவன் அடக்க முயற்சிக்கவேண்டும். அப்படி அடக்கினவன் மனிதர்களுக்குள் உயர்ந்தவனாவதோடு தெய்வமாகவும் எண்ணப்படுவான்.

முற்காலத்தில் ஜடபரதரென்ற முனிவர் காட்டில் தவம் செய்துகொண்டிருந்தகாலத்தில் அவரைச் சில மறவர்கள் பிடித்துப்போய்க் காளிதேவிக்குப் பலிகொடுப்பதற்கு வெட்டத் தொடங்கினர். எல்லாம் தெரிந்தவராயிருந்தும் ஒன்று மறியாத ஜடனைப்போல இருக்கும் முனிவர் தமது சக்தியால் அம்மறவர்களை எரித்துவிடும் வல்லமை உடையராயினும் அவர்கள்மேல் ஒரு சிறிது கோபமுமின்றிச் சும்மாவிருந்தார். அதைப் பார்த்த காளிதேவி அந்த மறவர்களைக் கடிந்து விலக்கிச் சடபரதரைக் காப்பாற்றினாள். சினமற்றவனைத் தெய்வமுங் காத்தது.

பின்னொருநாள் சவ்வீர ராஜாவின் சேவகர்கள் ஜடபரதரைப் பிடித்துப்போய் அரசனின் பல்லக்கைச் சுமக்கச் செய்தனர். சுகதுக்கங்களை ஒன்றாக எண்ணும் அம்முனிவர் சிறிதும் கோபமின்றி அரசன் பல்லக்கைச் சுமந்து சென்றனர். வழக்கமில்லாத முனிவர் சுமக்கும் பல்லக்குத் தடைப்பட்டுச் செல்வதை உணர்ந்த அரசன் கீழிறங்கிப் பார்த்தபொழுது முனிவரின் பெருமை வெளிப்பட்டது. பிறகு அரசன் அவர் பாதங்களில் விழுந்து வணங்கித் தான் செய்த குற்றத்தைப் பொறு

க்குமாறு இரந்து வேண்டிக்கொண்டதுமன்றி அவரிடத்தில் ஞானோபதேசமும் பெற்று அவரைக் குருவாகக் கொண்டனன். கோபமில்லாதவனைத் தெய்வமாக உலகங் கொண்டாடும்.

ஒரு பிராமணன் மனிதர்களுள் அநேகர் ஒழுக்கங் குறைந்து தருமத்தைவிட்டுத் துஷ்டர்களாயிருக்கிறார்களென்று உலகத்தை வெறுத்து ஜனங்களில்லாத விடத்தில் இருக்கவிரும்பிக் கோதாவிரி நதிக்கரையில் தனிமையாய் ஒரு பர்ணசாலை அமைத்துத் தன்னுடைய விரதானுஷ்டானங்களைச் செய்துவந்தனன். இதனால் மோக்ஷத்தை அடையலாமென்பது அவன் எண்ணம். ஒருநாள் இவ்வேதியன் ஆற்றில் முழுகிக் கரையேறித் தன்னுடம்பெங்கும் விபூதியைப் பூசித் தன்மேல் உருத்திராக்க வடங்கள் பலவற்றை யணிந்துகொண்டு ஒருபுறமாயிருந்து ஜபஞ் செய்துகொண்டிருந்தான். அச்சமயத்தில் வெய்யிலில் விடாய்த்துவந்த பறையனொருவன் அங்கு வேகமாய் வந்து அந்தணனிருந்த நிலையை நோக்காதவனாய்த் தண்ணீரிலிறங்கி முழுகித் தன்னுடைய அழுக்கடைந்த கந்தைத் துணிகளை ஒரு கல்லின்மேலறைந்து தோய்த்தனன். அதனால் அப்பறையன் துணியிலிருந்து பலநீர்த்துளிகள் ஜபஞ் செய்துகொண்டிருந்த மறையவன்மேல் விழலும், அந்தப் பார்ப்பான் மிகுந்த கோபாவேசத்தோடு எழுந்தோடிச்சென்று பறையனைத் தன்கையோயுமளவும் அடித்து, "அடே! சண்டாளா! நீ சிறிதும் அச்சமின்றி இங்கே வந்ததுமல்லாமல் என்மேல் உனது அசுசியான அழுக்குத்துணித் தண்ணீரைத் தெறித்து என் விரதத்

திற்குப் பங்கம் செய்தாய். இனி இங்கு ஒரு கண மேனும் தாமதித்து நிற்பாயானல் உன்னைக்கொலை செய்து விடுவேன். ஓடிப்போ'' என்று அதட்டினன். அந்தப்பறையன் அந்தணன் காலில்விழுந்து “ஐயனே! நீங்களிருந்ததை அறியாமலிச்செயல்செய்தேன். பொறுத்தருளவும்; இதோ நான் தூரத் தொலைவிற் போய் விடுகிறேன்'' என்று வணக்கமானமொழி பகர்ந்து அப்புறம் போனன். சண்டாளன் தெறித்த நீர்த்துளிகளால் தீட்டடைந்த அப்பிராமணன் மீட்டும் நதியிலிறங்கி ஸ்நாநஞ்செய்து கரையேறினன். அப்பொழுது சிறிதுதூரத்தில் அந்தப்பறையனும் மீளவு மொருமுறை ஆற்றில் முழுகிக் கரைசேர்ந்ததைக் கண்ணுற்ற அவ்வேதியன் அவனைக் கூவியழைத்து “அடே சண்டாளா! நான் உன்னைத் தீண்டின தீட்டிற்காக மீட்டுந் தலைமுழுகினேன். நீ எதற்காக இன்னெருமுறை முழுகினய்?'' என்றுகேட்டான். அதற்கு அப்பறையன் “ஐயனே! சாதி சண்டாளனுகிய என்னைத் தீண்டிய தோஷத்திற்கு நீங்கள் முழுகினீர்கள். கோபமாகிய சண்டாளன் உங்கள்மேல் ஆவேசித்திருந்தபோது உங்களைத் தீண்ட நேரிட்ட பெருந்தோஷத்திற்காக நான் மீண்டும் தலைமுழுகினேன்'' என்று மறுமொழி சொன்னன். அப்பொழுதுதான் அந்தணன் கோபத்தின் சம்பந்தத்தால் சண்டாளத்தன்மை தனக்குண்டான விவரத்தை யறிந்து அப்பறையன் காலில் விழுந்து வணங்கி அவனையே குருவாகக்கொண்டு கோபத்திற் கிடங்கொடாமல் நன்னெறியில் நின்றனன். கோபஞ் சண்டாளம் என்பதையும் சினத்தைவிட்டவன் இழி

குலத்தானுயினும் உயர்ந்தோனே என்பதையும் இக் கதை தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது.

## 3. இயல்வது கரவேல்.

கையில் உள்ளதைக் கொடாமல் ஒளிக்காதே என்பது இதன் கருத்து. தேகி என்று கேட்ட ஒரு பிச்சைக்காரனுக்குக் கையிலுள்ள பொருளை இல்லையென்று ஒளித்து வையாமற் கொடுக்கவேண்டும் என்பது இதனுல் விளக்கப்பட்டது. இல்லையென்னுமற் கொடுக்கும் பெருமை உலகத்தில் அழியாமல் நிலைபெறும்.

முற்காலத்தில் இயற்பகை நாயனுர் என்ற பெயருடைய ஒரு சிவபக்தர் இருந்தார். அவர் சிவனடியார்கள் யார் எதைக்கேட்டாலும் இல்லையென்னுமற் கொடுப்பவர். இப்படி இடைவிடாமற் கொடுத்துக் கைப்பொருள் முழுவதையுமிழந்து மிகுந்த வறுமையடைந்தனர். அப்பொழுது கடவுள் அவருடைய மனவன்மையைப் பரிசோதிக்கும்படித் தான் ஒரு சைவ வேதியனைப்போல் வேடம்பூண்டு இயற்பகையார் முன் தோன்றினர். அப்பரமசிவ பக்தர் எதிர்வந்து அவரைத் தொழுது பலவித உபசாரங்களுஞ்செய்து "ஐயரே! எளியேன்மேற் கருணைகூர்ந்து இவ்வளவுதூரம் வந்தது என் தவப்பயனே. என்னுல் இயன்றது எதுவாயினும் உங்களுடையதே" என்று இனியமொழி கூறினுர். வந்தவேதியர் புன்னகை செய்து அவரை நோக்கி "பக்தரே! உம்மிடத்தில் உள்ள ஒரு பொருளை வேண்டி வந்தேன். அதை எனக்குத் தரவேண்டும்" என்றனர். இதைக்கேட்ட இயற்பகையார், "சுவாமி! தாங்

கள் விரும்பியபொருள் என்னிடத்துள்ளதாயின் நானே பாக்கியவான். தவறாமல் தருகிறேன்'' என்று வாக்களித்தனர். வேதியர், "ஐயா! உம்முடைய மனைவியை எனக்கு அளிக்கவேண்டும்'' என்றனர். உடனே இயற்பகையார் பெருமகிழ்ச்சியடைந்து தன்மனைவியை அந்த வேதியர்க்குக் கொடுத்ததுமன்றி, உலகத்தாரெவரும் ஒப்புக்கொள்ளத்தகாத இச்செய்கைக்காகக் கோபங்கொண்டெழுந்த தன் சுற்றத்தார்களால் அந்த மறையவனுக்கு ஒருவிதமான இடையூறும் உண்டாகாவண்ணம் காப்பாற்றி வழிவிட்டனுப்பினர். பெருங்கருணைப் பெருமானாகிய கடவுள் இயற்பகை நாயனார் எதிரில் பிரத்தியக்ஷமாய்த் தோன்றி நின்று பலவிதபாக்கியங்களையும் அவருக்கு அளித்தது மன்றிக் கடைசியில் மோக்ஷமுங் கொடுத்தனர்.

ஸர் பிலிப் ஸிட்னி என்ற பெயருடைய ஆங்கிலப் போர்வீரர் ஒருவரிருந்தார். அவர் தன் சத்துருக்களோடு யுத்தம் செய்தகாலத்தில் குண்டுபட்டு மரணகாயமடைந்து கீழே விழுந்துவிட்டார். மிகுந்த களைப்பால் அவருக்கு அளவிறந்த தண்ணீர்வேட்கை யுண்டாயிற்று. அதனைத் தீர்க்கும்பொருட்டு அவருடைய சேனைவீரர்களுட் சிலர் பல இடங்களிலும் தண்ணீர் தேடியும் காணாமல் கடைசியில் நெடுந்தூரத்திலிருந்து கொஞ்சம் தண்ணீர் ஒரு சிறு கிண்ணத்தில் கொண்டுவந்தனர். அவர் அந்நீரை அருந்தப்போகும் சமயத்தில் அருகே படுகாயப்பட்டுக் கிடக்கும் ஒரு சேனை வீரன் அந்த நீர்க்கிண்ணத்தை மிக்க ஆவலோடு பார்ப்பதைக் கண்டனர். உடனே யாணுவஸ்தையிற்கிடக்கும் ஸர்

பிலிப்ஸிட்னி தன்னுடைய தாகத்தை ஒரு பொரு ட்படுத்தாமல் அப்போர்ச் சேவகனுக்கு அந்நீரைக் கொடுக்க உத்தரவளித்தனர். தன்னுலியன்றதை ஒளி யாமலுதவின இவருடையபெருமை எக்காலத்திலும் இவ்வுலகத்தில் நிலைபெற்று நிற்கும் என்பதற்குச் சந் தேகமேயில்லை.

## 4. ஈவது விலக்கேல்.

ஒருவன் மற்றொருவனுக்கு ஒன்றைக்கொடுக்கின்ற காலத்தில் நடு நின்று தடுக்காதே, என்பது இதன் பொருள். ஒருவனுக்கு அவன் விரும்பினபொருளை மற்றொருவன் மனமொப்பிக் கொடுக்கின்றகாலத்தில் வேறொருவன் குறுக்கிட்டுத் தடுத்தால் அப்படித் தடுப் பவன் இரண்டு பாவங்கள் செய்தவனுகிறான். தருமஞ் செய்பவனுக்கு வரவேண்டிய புண்ணியத்தை வரவொ ட்டாமல் தடுத்தது முதல் பாவம். இரண்டாவது பாவம், ஒருவன் விரும்பினபொருளை அடையப்போ குங்காலத்தில் அது அவனுக்குக் கிடைக்கவொட்டா மல் தடுத்ததாம். இவ்விதம் தடுப்பவன் செய்தபாவம் அவனைச் சேர்வதோடுகூட அவன் சுற்றத்தாருக்கும் சேரும் என்று பெரியவர்கள் எழுதிய நூல்கள் முறை யிடுகின்றன. கொடுப்பதைத்தடுக்கும் கொடியவனும் அவன் சுற்றமும் உடுப்பதும் உண்பதுமில்லாமல் கவிப் பார்கள் என்றும் அந்தப் பாவத்தால் உண்டாகுந் தீமை யையும் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

முன்னொரு காலத்தில் மகாபலி என்ற சக்கிரவர்த்தி சுவர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் மூன்று லோகங்

களையும் அரசாண்டு வந்தனன். இவனால் துரத்தப் பட்ட தேவர்கள் மகாவிஷ்ணுவினிடத்திற்சென்று மகாபலியால் தங்களுக்கு உண்டான துன்பங்களைச் சொல்லி அவற்றை நீக்க முறையிட்டுக்கொண்டார்கள். தேவர்கள் வேண்டுகோளுக்கிரங்கிய விஷ்ணு தாம் ஒரு குட்டைப் பிரமசாரியாய் வாமனன் என்ற பெயருடன் பலியினிடம்வந்து தாம் இருந்து ஜபம்செய்வதற்காகத் தமது காலடியால் மூன்று அடி மண் யாசகம்கேட்டனர். அப்பொழுது பலியின் குருவாகிய சுக்கிராசாரியன் பலியை நோக்கி "ஐயா! உன்னிடத்தில் யாசிக்கின்ற இவரைச் சாமான்யராக நினையாதே. துஷ்டர்களைக் கண்டித்துச் சிஷ்டர்களைப் பரிபாலனஞ்செய்யும் கடவுளே உன்னை வஞ்சனையாக ஏமாற்ற வந்திருக்கிறார். அவர் கேட்டபடி தானம் செய்யாதே" என்று தடுத்தனன். பலி ஆசாரியன் சொன்னதைக்கேளாமல் "கடவுளே என்னிடத்தில் யாசிக்கின்ற காலத்தில் எனக்கு எப்படிப்பட்ட தீங்கு நேரிட்டாலும் அவர் கேட்டதைத்தருவேன்" என்ற மனவுறுதியோடு வாமனர் கேட்டபடி மூவடிமண் தானம்செய்யத் தீர்மானித்தனன். அப்பொழுது வாமனர் தம் கையிலுள்ள கெண்டியைப் பலிகையிற்கொடுத்துத் தமக்கு மூவடிமண் தானஞ்செய்யவேண்டினர். பலி கெண்டியிலுள்ள நீரை வாமனர்கையில் வார்த்துத் தத்தஞ்செய்யத் தொடங்குகையில் சுக்கிரன் சிறிய உருவத்தோடு கெண்டியின் மூக்கில் நுழைந்து நீரை வரவொட்டாமல் தடுத்தனன். வாமனர் மிகக்கோபங்கொண்டு தன்கையிலுள்ள தருப்பையொன்றால் கெண்டியின் மூக்கிற்குத்த அது சுக்கி

ரன் கண்ணிற்பட அவன் பொட்டையனுயினன். மேலும் வாமனர் சுக்கிரனுக்கு உடுப்பதும் உண்பதுமில்லாமல் வருந்தும்படி சாபமுங்கொடுத்தார். இதனுலே வருத்தத்தையடைந்த சுக்கிரன் ஒருபுறம் விலகி நிற்கப் பலி வாமனருக்கு மூன்றடிமண் தானஞ்செய்தான். வாமனர் திரிவிக்கிரமராய்ப் பெரிய உருவமெடுத்து ஓரடியால் மண்ணையும் ஓரடியால் விண்ணையும் அளந்து மற்ருேரடியால் மகாபலியைப் பாதாளத்திலழுத்திவிட்டனர். கொடுப்பதைத்தடுத்த சுக்கிரன் கண்ணிழந்து உடுப்பது முண்பதுமில்லாமல் வருந்தினுன்.

## 5. உடையது விளம்பேல்.

அருமையாகத் தன்னிடத்திலுள்ள ஒன்றை வெளியிட்டுச் சொல்லக்கூடாது. சொன்னுற் சிலவேளை சத்திருக்கள் அதனை யபகரித்துத் தீமையை யுண்டாக்குவார்கள்; மேலும் அந்த அருமையான பொருளும் தனது அருமைகுலையும். இந்தக் காரணத்தாலேயே நமது பெரியோர்கள் அருமையான மந்திரங்களைப் பெறத்தக்கவர்களுக்கு இரகசியமாய் உபதேசிக்கிருர்களேயல்லாமல் வெளிப்படையாகச் சொல்லுவதில்லை.

இராமன் தன் மனைவி சீதையோடு வனத்தில் வசித்து வந்தகாலத்தில் இராமனில்லாத சமயம்பார்த்து இராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டுபோனுன். அப்பொழுது சீதை கோவென்று கதறியழுதாள். அவள் அழுகுரலைக்கேட்ட ஜடாயு என்னும் கழுகரசன் அதிவேகமாகவந்து இராவணனை யெதிர்த்துப் பெரும்போர்புரிந்தான். நெடுநேரம் இருவரும் ஜயாபஜயம் தோன்ருமல்

யுத்தம் செய்தார்கள். இராவணன் ஜடாயுவை வஞ் சனையாகச் சொல்லநினைத்து அவனுடைய உயிர் நிலை எங்கிருக்கிறதென்று கேட்டான். ஜடாயு சத்தியவானு கையால் தன் உயிர் நிலை தன்னுடைய இறகிலிருப்ப தாக உண்மையைச் சொல்லிவிட்டு இராவணனுடைய உயிர்நிலையைக் கேட்டான். வஞ்சகனான இராவணன் தன் உயிர் நிலை தனது காற்கட்டைவிரலி லிருப்பதாகப் பொய்சொன்னான். பிறகு மீளவும் இருவரும் யுத்தஞ் செய்தபொழுது ஜடாயு இராவணன் காற்பெருவிரலைப் பிளந்தான்; இராவணன் ஜடாயுவின் இறகுகளையறுத் துத்தள்ளினான். ஜடாயு தன் உயிர் நிலை சிதறிக் கீழேவிழுந்து மாண்டான். இராவணன் ஒரு தீங்கு மில்லாமல் ஜயம்பெற்றுச் சீதையை யெடுத்துப்போ னான். ஜடாயு தன் அருமையான உயிர்நிலையைச் சத் துருவான இராவணனுக்குச்சொன்ன தோஷத்தால் உயிரையிழந்தான்.

முற்காலத்தில் ஸாம்ஸன் என்ற பெயருடைய ஒரு வீரனிருந்தான். அவன் அநேகமாயிரம் யானை பல முடையவன். அவனுடைய சத்துருக்கள் தங்கள் பெரு ஞ்சேனையோடெதிர்த்து யுத்தம்செய்த காலத்திலும் அவனைஜயிக்க முடியவில்லை. அவர்கள் ஸாம்ஸனை எப்படிஜயிப்பது என்று யோசிக்கலானார்கள். இந்த ஸாம்ஸன் ஒரு ஸ்திரீயினிடத்தில் மிகுந்த அன்பு பூண்டிருந்தான். அதையறிந்த அவன் சத்துருக்கள் அந்த ஸ்திரீக்கு அளவிறந்த செல்வத்தைக்கொடுத்து அவளைத் தமது வசப்படுத்திக்கொண்டு, ஸாம்ஸன் இவ் வளவு பலசாலியாயிருப்பதற்கு காரணம் யாதென்பதை

அவனிடத்திற் கபடமாயறிந்து சொல்லும்படி ஏற்பாடு செய்தார்கள். அந்த மூட ஸ்திரீயும் அதற்கொப்புக் கொண்டு ஒரு நாள் ஸாம்ஸனும் தானும் ஏகாந்தமாயிருக்கும் சமயத்தில் அவனுடைய அளவில்லாத வலிமைக்குக்காரணம் என்னவென்றுகேட்டாள். அவனும் அவள் மேலுள்ள ஆசையால் ஆலோசனையில்லாதவனைய்த் தன் வலிமைக்குக்காரணம் தனது தலையில் ஏராளமாயடர்ந்து வளர்ந்திருக்கும் தலைமயிரேயென்று உண்மையைச் சொல்லிவிட்டான். பின்னொரு நாள் அவனயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த சமயம்பார்த்து அந்தஸ்திரீ அவனுடைய தலைமயிரை மழுங்கக் கத்தரித்துவிட்டாள். ஆனைபோலிருந்த ஸாம்ஸன் பூனைபோலப் பலமொடுங்கிபோனான். காத்துக்கொண்டிருந்த அவன் பகைவர்கள் திடீரென்று அவன் மேல்விழுந்து அவனுடைய இரண்டு கண்களையும் குத்தி அவனைக் குருடனாக்கிக் கைகால்களில் விலங்குபோட்டுச் சிறையிலிட்டனர்.

கொஞ்சகாலஞ் சென்றபிறகு அப்பகைவர்கள் தங்கள் இனத்தார் யாவரையுஞ்சேர்த்து ஒரு பெருங்கூட்டமாகக்கூட்டி அந்தக் கூட்டத்திற்கு நடுவில் ஸாம்ஸனை விலங்குடன் கொண்டுவந்து நிறுத்தி அவனைப் பலவிதமாக அவமதித்துப்பேசியதுமன்றி அவனுக்குப் பகிரங்கமான கொலைத்தண்டனையும் விதித்தார்கள். சிறையிலிருந்த சில மாதங்களுக்குள் மீளவும் தலைமயிர் வளர்ந்துவிட்டகாரணத்தால் தனது பழைய வலிமையை அடைந்து நின்ற ஸாம்ஸன் குருடனாய்ப்போனதால் வேறொன்றுஞ்செய்ய வகையின்றி யாவருங் கூடி

யிருந்த மண்டபத்தின் நடுவில் அமைத்திருந்த இரண்டு பெருந்தூண்களையும் தனது இருகைகளையும் நீட்டிப் பற்றி மடமடவென்று ஆட்டினான். அப்பொழுது மண்டபத்தின் மேனிலை உப்பரிகையோடு இடிந்து அங்குக் கூடியிருந்த யாவர்மேலும் திடீரென்று விழுந்ததால் ஒருவர்கூடத் தப்பாமல் இறந்துபோனார்கள்; அவர்களுக்கு நடுவில் ஸாம்ஸனும் இறந்தான்.

ஸாம்ஸன் தன்னுடைய இரகசியத்தை வெளியிட்ட குற்றத்தால் இந்தக்கதியடைய நேரிட்டது.

## 6. ஊக்கமது கைவிடேல்.

ஒரு தொழில் செய்கின்றகாலத்தில் உண்டாகும் இடையூறுகளால் உற்சாகங்குறைந்துபோகாமல் அத்தொழிலில் இடைவிடாமல் கவனத்தைச் செலுத்த வேண்டும். சுகர், துருவன் முதலிய ரிஷிகள் தாம் தவம் செய்கின்றகாலத்திலுண்டான பெரும் தடைகளை லட்சியம்பண்ணாமல் தம்முடைய தவத்திலேயே ஊக்கத்தைச் செலுத்திவந்த காரணத்தால் முடிவில் பெரும் பதவிகளை அடைந்தனர்.

பதினாறுவயதினையே தனது ஆயுட்காலமாகப்பெற்ற மார்க்கண்டனும் தான் மேற்கொண்ட சிவபூஜைக்குண்டான பல இடையூறுகளையும் பொருட்படுத்தாமல் மேலும்மேலும் ஊக்கத்தைச் செலுத்திவந்த காரணத்தால் கடைசியில் யமனையும்வென்று என்றும் பதினாறுவயதுடையவனாகிச் சிரஞ்சீவியாயினான்.

ஸ்காட்லாண்டு தேசத்தில் ராபர்ட்டு புரூஸ் என்ற பெயருடைய அரசனொருவனிருந்தான். அவன் தன்

னுடைய பகைவர்களோடு பலதடவை போர்புரிந்து தோல்வியடைந்து கடைசியில் தான் ஒன்றியாக ஓடி ஒரு குடிசையில் ஒளிந்து வசிக்க நேரிட்டது. பல முறை முயன்றும் அபஜயமடைந்த ராபர்ட்டு புரூஸ் தன்னுடைய ஊக்கம் குறைந்து இனித் தன் முயற்சியால் ஒன்றும் பயனில்லை யென்று கருதித் தானடைந்த இழிந்தநிலையைக் குறித்துத் தினமும் வருந்தியிருந்தான். ஒருநாள் புரூஸ் தனது குடிசையில் மல்லாந்து படுத்துக் கவலையோடு இனியென்ன செய்வதென்று யோசித்துக்கொண்டிருக்கையில், ஒரு சிறு சிலந்தி அக்குடிசையின் ஒருத்தரத்திலிருந்து மற்றொருத்தரத்திற்குத் தன் வலையைக் கட்ட எண்ணி ஓர் உத்தரத்தில் தன் மெல்லிய நூலைக் கட்டிவிட்டு மற்றொருத்தரத்திற்குப் பாய்ந்தது. இடைவெளி அதிகமிருந்தமையாற் சிலந்தி மற்றொருத்தரத்தை யடையாமற் கீழேவிழுந்துவிட்டது. அதனாற் பின்வாங்காத அச்சிலந்தி மீட்டும் மேலேறி முன்போலப் பாய்ந்தது; அப்பொழுதும் கீழ் வீழ்ந்துவிட்டது. இவ்விதமாக ஆறுதடவை முயன்றும் சிலந்தி தன் காரியம் கைகூடாமற் கீழே விழுந்தது. தான் செய்த முயற்சியாற் களைப்படைந்த சிலந்தியும் தன்வசந் தப்பிக் கீழேகிடந்தது. இதன் செய்கையை உற்றுநோக்கிக்கொண்டிருந்த புரூஸ் பின்வருமாறு சிந்திக்கலானான். "இந்தச் சிலந்தியும் நாமும் ஒருநிலையி லிருக்கிறோம். நாம் நமது பகைவரோடு ஆறுதரம் போர்புரிந்து தோற்றுக்களைத்தோம். இச்சிலந்தியும் தனது முயற்சியில் ஆறுதரம் தோற்றுக் களைப் படைந்தது. இனி யதற்கும் வழியில்லை; நமக்

கும் வேறுவழி காணோம். இச்சிலந்தி இங்ஙனம் களைத்தபின் இன்னும் முயற்சிசெய்தல் அறிவீனமாகு மாறுபோல நாமும் இனி முயல்வோமானால் அதுவும் அறிவீனமாம். இருந்தாலும் இச்சிலந்தி இன்னும் முயன்று தன் தொழிலை நிறைவேற்றுமானால் இத னையே நமக்குக் கடவுளனுப்பிய நற்குறியாகக்கொண்டு நாமும் முயல்வோம்" என்று எண்ணமிட்டுக்கொண் டிருக்கையில், சிறிது நேரம் களைப்பாறின சிலந்தி முன் போல்மேலேறித் தன் ஊக்கம் குறையாமல் ஓர் உத்தரத் திலிருந்து மற்றோர் உத்தரத்திற்குத் தன் முழுவலியோ டும் பாய்ந்தது. இந்த ஏழாவது தடவை அச்சிலந்தி மறு உத்தரத்தை யடைந்தது. உடனே ராபர்ட்டு புரூஸ் தனது கவலையை ஒழித்து நாலாமூலையிலும் சிதறுண்டுபோன தன் சேனையை மீளவும்கூட்டி ஏழா முறை தனது பகைவரை எதிர்த்தனன். இம்முறை ராபர்ட்டு புரூஸ் தனது பகைவரை முறியடித்து ஜய மடைந்தான். ஊக்கமது கைவிடேல் என்னும் நீதி யைச் சிலந்தியின் செய்கையாலறிந்த ராபர்ட் புரூஸ் தானும் அவ்வழி நடந்து தன் கருத்தை முற்றுவித்த னன்.

## 7. எண்ணெழுத்திகழேல்.

எண் என்பது கணிதநூல்; எழுத்தென்பது இலக் கணநூல். கணிதநூலையும் இலக்கணநூலையும் இகழா மற் கற்கவேண்டும். இவற்றைப் பெரும் பயனில்லாத னவாகக் கருதி இகழக்கூடாது. இவற்றை நன்றாகக் கற்று அறிவடைந்தவனுக்கே ஞானநூல்கள் தெளிவாக

விளங்குமாகையால் கணிதமும் இலக்கணமும் ஒருவனுக்குக் கண்போல் முக்கியமானவை. 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்' என்று சொன்னதும் இந்தக் காரணத்தினாலேதான்.

முன் ஒருகாலத்தில் அவந்திதேசத்தில் இராஜவல்லபன் என்ற மன்னன் அரசாண்டு வந்தனன். அவன் மகன் இராஜலக்ஷணமுடையவனாயிருப்பினும் எழுத்து வாசனையில்லாத முழுமூடனாயிருந்தான். அதனால் இராஜவல்லபன் தன் மகனை அரசாட்சிக்கு யோக்கியன் அல்லனென்று தேசத்தைவிட்டு ஓடிப்போக ஆஜ்ஞாபித்தனன். இராஜகுமாரன் தனது சொந்த தேசத்தைநீங்கித் தென்னாட்டிற் சஞ்சரித்து வருகையில் ஒருநாள் சோழராஜன் தலைநகராகிய காவிரிப்பூம் பட்டினத்திற் புகுந்து இராஜவீதியிற் போய்க்கொண்டிருந்தனன். அப்பொழுது அரண்மனை உப்பரிகையின்மேல் உலாவிக்கொண்டிருந்த சோழன்மகள் அந்த அரசிளங்குமரன் பேரழகைக்கண்டு காமுற்றுத் தன் கருத்தை அவனுக்குத் தெரிவிக்கும்படி ஓரோலை நறுக்கில் அவனை அன்றுமாலை நகர்ப்புறத்துள்ள ஒரு வசந்தமண்டபத்திற்கு வரும்படியாக எழுதி அவனெதிரிற் போட்டனள். நிரக்ஷரகுக்ஷியான அரசகுமாரன் அந்த ஓலைச் சுருளில் எழுதியது இன்னதென்று அறியாதவனாய் அதனைத் தெரிந்துகொள்ள விரும்பி அவ்வூர்க்கு வெளியில் ஒரு பாழ்மண்டபத்தில் வசித்துவந்த மகாரோகியான ஒரு பண்டாரத்தினிடத்தில் அதனைக் காட்டினான். அப்பண்டாரம் அரசகுமாரனை வஞ்சித்து ராஜபுத்தி

ரியை அடைய விரும்பி அவனை நோக்கி, "இனி நீ இங்கிருந்தால் உன் தலைபோய்விடும்" என்று பயமுறுத்திவிட்டான். இதனை உண்மை என்று நினைத்த அரசகுமாரனும் உடனே ஊரைவிட்டு ஓடினான். அன்றிரவு ராஜபுத்திரி இவன்வரவை எதிர்பார்த்து வசந்த மண்டபத்திற்குவர, அங்கு அவனையன்றிக் குரூபியான ஒரு பண்டாரம் தன்னை வஞ்சித்ததை உணர்ந்து வெட்கத்தினாலும் துக்கத்தினாலும் தனது உயிரை மாய்த்துக் கொண்டனள். பிறகு சிலகாலம் கழித்து அந்த ராஜகுமாரன் மீண்டும் அங்குவந்து தனக்காக இராஜகுமாரி உயிர்மாய்த்த விருத்தாந்தத்தை அறிந்து தானும் அவள் பொருட்டு உயிரை மாய்த்தனன். கல்வி யறிவில்லாத தோஷத்தால் இவன் இங்ஙனமாயினான்.

இனி, எண்ணெழுத்திகழேல் என்பதில் எண் எழுத்து என்பதற்கு எட்டெழுத்து என்றும் யாவராலும் எண்ணுதற்குரிய எழுத்து என்றும் பொருள்கூறி கடவுளின் திருநாமமாகிய அஷ்டாக்ஷரத்தை இகழாதே என்று வேடிக்கைப்பொருள் சொல்வார்கள். இது ஆசிரியர் கருத்தில்லை.

## 8. ஏற்பதிகழ்ச்சி.

பிச்சையெடுத்தல் மிகவும் இகழ்ச்சியைத் தரும் என்பதற்குச் சந்தேகமே இல்லை. ஒரு பிச்சைக்காரன் ஒருவனிடத்தில் யாசிக்கின்றகாலத்தில் தன்னுடைய எண்சாணுடம்பும் ஒரு சாணாய்க் குன்றிவிடுகின்றான். பிச்சையெடுத்துப் பிழைத்தல் மானத்தைவிட்டு வயிறு வளர்ப்பவர் தொழிலாம்.

“ பல்லெலாந் தெரியக் காட்டிப் பருவரன் முகத்திற் கூட்டிச்
சொல்லெலாஞ் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி
மல்லெலா மகல வோட்டி மானமென் பதனை வீட்டி
யில்லெலா மிரத்த லந்தோ விழிவிழி வெந்த ஞான்றும் ”

என்றசெய்யுள் இரத்தற்றொழிலின் இழிதகைமையை நன்றாக எடுத்துக்காட்டுகின்றது.

மகாபலிச்சக்கிரவர்த்தியினிடம் மூன்றடிமண் தானம் வாங்கச்சென்ற திருமாலும் ஏற்பதினால் உண்டாகும் இழிவினால் தனது திருமேனி குன்றியே வாமனராயினர் என்று புலவர்களும் கற்பனை செய்கிறார்கள்.

## 9. ஐயமிட்டுண்.

இல்லையென்று வந்த ஏழைகளுக்குப் பிச்சையிட்டுத் தாமும் உண்ணவேண்டுமென்பது இதன் பொருள். வறிபவர்களுக்குப் பிச்சையிடுதல் தருமங்களுள் சிறந்தது. “ வறியார்க்கொன்றீவதேயீகை ” என்று பெரியவர்களும் இதனைப் பாராட்டிக் கூறியிருக்கிறார்கள். தரும சிந்தனையை மேலும் மேலும் வளர்ப்பதற்கு இச்செய்கை அவசியம்வேண்டும். நெடுங்காலமாக நமது நாட்டார் ஐயமிட்டுண்பதைத் தவறாமல் அனுசரித்து வந்ததால் நமது நாட்டில் மற்றை நாடுகளிற்போலப் பிச்சைக்காரர்களுக்கென்று விடுதி அமைக்கவேண்டிய அவசியமில்லாததாயிற்று. இது நம்மவருக்குப் பெரும் புகழே. உலகத்தைத் துறந்து தவத்தைச் செய்யும்

சந்நியாசிகளுக்கும் ஆதரவில்லாமல் தவிக்கும் ஏழை களுக்கும் செய்யப்பட்ட இந்த உபகாரத்தின் பெரு மையைப் பின்வரும் கதையால் அறியலாம்.

மகா பாரத யுத்தத்தில் ஜயமடைந்த தருமபுத்திரர் பிறரால் செய்வதற்கு அருமையான அசுவமேதமென்ற யாகமொன்று செய்தனர். பற்பலதேசத்து அரசர்களும் வேத ஆகம புராணங்களில் மேன்மை அடைந்த வேதி யர்களும் தவசிரேஷ்டர்களும் முனிவர்களும் அந்த யாகசாலையில் கூடியிருந்தனர். தருமபுத்திரர் வந்த அந்தணர் முதலியவர்களுக்கு அளவிறந்த செல்வங் களைத் தானஞ் செய்துகொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் ஒரு கீரிப்பிள்ளை தனது பாதி உடம்பு பொன்மய மாகப் பிரகாசிக்க அங்குவந்து தருமபுத்திரர் முன்னிலை யில் பெரிய வெள்ளமாயோடும் தானஜலத்தில் விழுந்து புரண்டது. இதைப்பார்த்த யாவரும் ஆச்சரியமடைந் தார்கள். தருமபுத்திரர் கீரிப்பிள்ளையை நோக்கி, "நகுலமே! உன் பாதி உடம்பு ஏன் பொன்னிறமாயிருக் கிறது? இங்குவந்து ஏன் இப்படிப் புரளுகிறாய்?" என்று கேட்டனர். இதைக்கேட்ட கீரி பின்வரும் சரிதத்தைச் சொல்லத்தொடங்கிற்று.

"ஐயா! அரச சிகாமணியே! நான் வசித்து வரும் காட்டில் ஒரு ஏழை அந்தணன் வானப்பிரஸ்தனாய் வந்து சேர்ந்து தழைக்குடிசை ஒன்று அமைத்து அதில் தனது மனைவி மகன் மருமகளோடு வாழ்ந் திருந்தனன். காட்டில் உள்ள காய் கனி கிழங்குகளே அவர்களுக்கு உணவு. ஒரு காலத்தில் மழை இல்லாமல் இவைகளும் கிடைப்பது அருமையாய் விட்டது. அப்

பொழுது காட்டில் உதிர்ந்து கிடக்கும் நீவார தானியங்களைச் சிறிது சிறிதாகசேர்த்து அதனை மாவாக அரைத்து உணவு கொள்ளுவார்கள். சில நாளில் அந்த நீவார தானியமும் குறைவுபட்டது; நான்கு தினங்களுக்கு ஒருமுறை உணவுகொள்ள நேரிட்டது. ஒரு நாள் இவ்விதமாக கிடைத்த மாவினை நான்கு தினங்களாகப் பட்டினி கிடந்த அந்த நால்வரும் நான்கு பங்காகக்கொண்டு உணவு செய்யப்போகும் சமயத்தில் ஒரு விருத்தாப்பியனுன அந்தணன் அதிதியாக அங்கு வந்து "பெரியோர்களே! நான் உணவு கொண்டு பத்து தினங்களாகின்றன; பசியால் மிகவும் வருந்துகின்றேன்; கண் பஞ்சடைகின்றது; காதடைக்கின்றது; களைப்பு மேலிடுகின்றது" தயைசெய்து உணவு சிறிது அளிக்கவேண்டும் என்று மிகவும் கெஞ்சிக் கேட்டனன். இதனை உணர்ந்த வேதியன் தன் பசியைப் பொருட்படுத்தாது வந்த அதிதிக்குத் தனது பங்கு மாவைக்கொடுத்து உபசரித்தான். அது அதிதிக்குப் போதாமையை அறிந்த மற்ற மூவரும் தத்தமது பங்கையும் கொடுத்தனர். அதிதியும் அவற்றை உண்டு அவர்களை வாழ்த்திச்சென்றனன். அப்பொழுது தேவர் உலகத்திலிருந்து விமானமொன்று அங்குவந்து அந் நால்வரையும் ஏற்றிச்சென்றது. ஆகாரத்தின் பொருட்டுப் பலவிடங்களிலும் அலைந்தும் கிடைக்காமையால் பசியால் வருந்துகிற நானும் இந்த ஆச்சரியத்தைக் கண்டேன். பிறகு அந்தத் தழைக்குடிசையின் உள்ளே புகுந்து கீழே சிந்திக்கிடந்த மாவை நான் உண்ணப் புகுந்த அளவில் அது என்மேலெல்லாம் ஒட்டிக்கொண்

டது. அந்த மா ஒட்டிக்கொண்ட என் தேகத்தின் பாக மெல்லாம் மாற்றுயர்ந்த பொன்போல் பிரகாசித்தது. இதைக்கண்டு மிகவும் ஆச்சரியமடைந்தவனாய் அந்தப் பிராமணன்செய்த தருமத்தின்பெருமையை வியந்து பாராட்டி மகிழ்ந்திருந்தேன். பொன்னிறமான எனது பாதியுடல் எனக்கு அந்தத் தருமத்தின் சிறப்பை எப்பொழுதும் நினைப்பூட்டுகின்றது. தருமபூபதியே! எனது உடம்பின் மற்றொருபாதியும் பொன்நிறமாக வேண்டி நீ செய்த தானஜலத்தில் விழுந்துபுரண்டேன். எனது வாலின் கடையிலுள்ள இரண்டொரு மயிரே பொன்னிறமாயின. ஆதலால் நீ செய்யும் அசுவமேதத்தினும் வேதியன்செய்த அதிதிபூஜை மிகவும் சிறந்தது'' என்று யாவரும்கேட்க உரைத்துத் தன்னிருப்பிடம்சென்றது.

## 10. ஒப்புர வொழுகு.

உலகத்தார் ஒப்புக்கொள்ளும்படியான ஒழுக்கத்திலிருக்கவேண்டும் என்பது இதன்பொருள். பலரும் நேர்மையுள்ளதாக எண்ணுவதை இல்லாததாக எண்ணுவதும் பிழையுள்ளதாக நினைப்பதை நேரிதாகக் கருதுவதும் பெரிதும் அவமானத்திற்கு உள்ளாக்கும். மேலும் பெரியோர்களால் நியாயமாய் ஆராயப்பட்டுத் தக்கதென்று மேற் கொள்ளப்பட்டதை அங்கீகரிக்காமல் நடப்பது பெருந்தீங்கினையும் விளைவிக்கும். அங்ஙனமிருப்பதால் இகழ்ச்சி யடைவதோடல்லாமல் யாவருடைய வெறுப்புக்கும் பாத்திரனாய்ச் சிலவேளைகளில் தீமையையும் அடைய நேரிடும்.

முற்காலத்தில் இளையான்குடி மாறர் என்ற பெயர் கொண்ட சிவனடியார் ஒருவரிருந்தார். அவர் தம் மிடத்துவரும் சிவனடியார்களைப் பெரிதும் உபசரித்து விருந்தளித்து அவர்களுடைய மகிழ்ச்சிகண்டு தாமும் மகிழ்ந்து வந்தனர். தம்முடைய செல்வமுழுவதையும் இவ்விதமாகச் செலவழித்துப் பிறகு வறுமையடைந்த னர். ஒரு நாள் சிவபெருமான் ஒரு சிவனடியாரைப் போல் வேடம்பூண்டு அவர் வீட்டிற்கு விருந்தாய் வந்தனர். அப்பொழுது மாறர் தமது வறுமை நிலை மைக்காக வருந்தி நிலத்தில் விதைத்திருந்த முளை நெற் களை வாரிவந்து தமது மனைவியாகையிற்கொடுத்து உணவு சமைக்கச்சொன்னார். அவ்வுத்தமியும் கிடைத்த கீரை யையும் நெல் முளைகளையுங்கொண்டு பாகஞ்செய்து சிவனடியாருக்கிட்டனள். வந்த சிவனடியாருக்குத் தக்க வாறு உபசரிக்கவேண்டிய செல்வம் இல்லையே என்று வருந்தினள்; தங்களுடைய முன்னிருந்த நிலைமையை எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணுபினள். ஒப்புரவு அறிந்தவர்கள் தாங்கள் பிறருக்குச் செய்யவேண்டிய உபசாரங்களில் குறைய நேரிட்டதற்காகவே தங்கள் வறுமை நிலைக்கு வருந்துவார்கள்.

## 11. ஓதுவ தொழியேல்.

எக்காலத்தும் அறிவினை வளர்க்கும் நூல்களைப் படிப் பதினின்றும் நீங்காதே, என்பது இதன்பொருள். ஒரு வனுக்குக் கல்விபோல் உறுதியைத்தருவது வேறொன்று மில்லை. ஒரு பிறப்பிற் கற்றகல்வி ஒருவனுக்கு எழு பிறப்பும்தொடர்ந்து உதவும் என்று பெரியவர்கள்

உறுதியாய்க் கூறியிருக்கின்றனர். தக்க கல்வியால் அறிவு வளர்தல் நிச்சயம்; ஆதலால் ஓதுவது ஒவ்வொருவருக்கும் இன்றியமையாதது.

இங்கிலாந்து தேசத்தில் விக்டோரியா மகாராணியார் அரசுபுரிந்து செங்கோல் நடத்தின காலத்தில் கிளாட்ஸ்டன் என்னும் பிரபு பிரதான மந்திரியாக இருந்தார். அவர் தனது வீட்டில் பெரிய புத்தகசாலை ஒன்று வைத்துத் தமக்கு ஏற்பட்ட பல தலைப்பட்ட வேலைகளுக்கிடையிற் கிடைத்த சாவகாசங்களில் இடைவிடாமற் படித்து வந்தனர். அவர் தினமும் இரண்டு மூன்று மணி நேரமாயினும் படித்தபிறகேதான் படுத்து உறங்குவது வழக்கம். இவ்விதம் இடைவிடாமற் படித்துவந்த காரணத்தால் எவரும் புகழும்படியான உன்னத நிலைமையை அடைந்து ஒப்புயர்வில்லாத களங்கமற்ற பூலோக சந்திரன்போல விளங்கினர்.

திருவள்ளுவர் புலைச்சி வயிற்றிலும் வேதவியாசர் வலைச்சி வயிற்றிலும் பிறந்தார்களென்றாலும் கல்வியின் மேன்மையால் யாவராலும் எக்காலத்திலும் கொண்டாடப்படும் பெருமையடைந்து விளங்கினர்.

சிறிது கல்விகற்ற மாத்திரத்தில் மிகுதியும் படித்ததாக எண்ணி அகந்தைகொண்டு சீரழிவார்கள் புத்தியீனர்களே. அறிவுடையோர் மேலும்மேலும் கற்பதைக் கைவிடார்கள். "பாடையேறினும் ஏடது கைவிடேல்" என்று இருபொருள் தரும்படி நமது நாட்டில் வழங்கும் பழமொழி இதன் கருத்தைத் தெளிவாய்க்காட்டும். கலைமகளும் இன்னும் கல்வி கற்பதாகக் கூறும் கருத்தும் இதுபற்றியேதான். ஆதலால் கிடை

த்த அவகாசங்களிலெல்லாம் இடைவிடாமற்படிக்க வேண்டும்.

## 12. ஔவியம்பேசேல்.

பொறாமையை மேற்கொண்டு பேசாதே என்பது இதன்பொருள். ஒருவனிடத்துள்ள கல்வி செல்வம் குணம் செல்வாக்கு முதலியவற்றைக் கண்டபோது அவன்மேற் பொறாமைகொண்டு அவனைச் சீரழித்து இழித்துப்பேசுதல் மிகுந்த தீமையை விளைவிக்கும். இச்செய்கையால் இம்மையிற்பாவமும் மறுமையில் நரகமும் உண்டாகும் என்பார்கள். பொறாமைப் பேய் பிடித்தவர்கள் பிறருக்குத் தீங்கிழைப்பதோடு தமக்கும் தீமையை உண்டாக்கிக்கொள்ளுவார்கள். 'ஔவியம் பேசுதலாக்கத்திற்கழிவு' என்று இதன் தீமையை ஔவையார் எடுத்துக்காட்டினர்.

அஸ்தினுபுரத்தரசனுன திருதராஷ்டிரன் மனைவி காந்தாரி பாண்டுவின் மனைவியாகிய குந்தி ஆண்குழந்தையைப் பெற்ற சமாசாரம் கேள்விப்பட்டுப் பொறாமை கொண்டு தான் பலவருடங்களாகச் சுமந்திருந்த கருப்பத்தை அம்மிக்குழவியால் வயிற்றிலிடித்துச் சிதைத்துக் கொண்டாள். அப்படி அவள் இடித்துக்கொள்ளாவிட்டால் அவள் வயிற்றில் பிறக்குங்குழந்தை ஏகசக்கிராதிபதியாய் மூன்று லோகங்களிலும் தன்னுண்மை செலுத்தி அரசாட்சிபுரியும் மகாசூரனுயிருப்பான். அப்படியின்றி அவ்விதமாகச் சிதைந்த கருப்பம் வேதவியாசர் அருளால் ஒருவாறு கூடபெற்றுப் பொறாமைக்கிருப்பிடமான துரியோதனன் பிறந்தான்.

துரியோதனன் செல்வத்திலும் சௌரியத்திலும் மிகுந்து விளங்கும் பாண்டவர்மேல் பொருமைகொண்டு அவர்களை வஞ்சகமாக அழைத்து மாயச்சூதாடி நாடுநகரம் முதலியவற்றைக் கவர்ந்துகொண்டதுமன்றி அவர்களுக்கு உரியபத்தினியாகிய திரௌபதியை நடுச்சபையில் இழுத்துவந்து துகிலுரிந்து மானபங்கமும் செய்தான். அதனுல் துரியோதனன் மகாபாரத யுத்தத்தில் புத்திர மித்திர பந்து வர்க்கங்களோடு மாண்டு போனதுமன்றிச் சகிப்பதற்கருமையான நரகவேதனைகளையும் அனுபவித்ததாக நூல்கள் கூறுகின்றன. இதனுல், பொருமையால் இம்மை மறுமை இரண்டிலும் கேடு உண்டாகும் என்பது தெளிவாய் விளங்குகிறது.

பொருமையுள்ள ஒருவன் தான் இரண்டு கண்ணிழந்தாலும் எதிரி ஒரு கண்ணிழந்தால் போதுமென்று முயன்றகதை யாவருக்குந் தெரிந்ததே.

இனி 'ஔவியம்பேசேல்' என்பதற்கு வீண்பெருமை பேசக்கூடாது என்று பொருள் கூறுவாருமுண்டு.

சூதாடி நாடிழந்த பாண்டவர்கள் பன்னிரண்டு வருஷம் காட்டில் வசித்து பிறகு ஒரு வருஷம் விராடநகரத்தில் மாறுவேஷம்பூண்டு தங்கியிருந்தனர். அப்படி மறைந்து வசிக்கிறகாலத்தில் அவர்களை இன்னுரென்று கண்டுபிடித்துவிட்டால் அவர்கள் திரும்பவும் காட்டிற்குப் போகவேண்டுமென்பது ஏற்பாடு. துரியோதனன் விராடநகரத்தில், பாண்டவர்கள் தங்கியிருப்பார்கள் என்ற சந்தேகம்கொண்டு அந்த ஊரிலுள்ள பசுக்கூட்டங்களைப் பிடித்துக் கைப்பற்றவேண்டித் தனது

சேனாதிபதிக்கு உத்தரவிட்டான். அவன் அவ்விதமாக விராட நகரஞ்சென்று எதிர்த்தனன். அப்பொழுது விராட ராஜனும் அவன் புதல்வர்களும் மாறுவேஷம் பூண்டிருந்த பாண்டவர்களுள் அருச்சுனன் ஒழிந்த மற்ற நால்வரோடும் நால்வகைப்படையும் சூழ்ந்துவரச் சென்று பகைவரை எதிர்த்து நின்றனர். இருதிறத் தாரும் பெரும் போர்புரிந்து நிற்கையில் துரியோத னன் சேனையோடு நகரத்தின் மற்றொருபுறத்தில் வந்து எதிர்த்தான். அப்பொழுது நகரத்தைப் பாதுகாக்க ஒருவரும் இல்லாமல் அரண்மனையிலுள்ள மாதர்கள் யா வரும் மிகுதியும் கலங்கினார்கள். அச்சமயத்தில் விராட ராஜன் கடைசிப் புத்திரனாகிய உத்தரகுமாரன் எழுந்து நின்று மாதர்களைநோக்கி தனக்குத் தேர்செலுத்தத் தக்க பாகனொருவன் கிடைப்பானானால் தான் ஒருவனே சென்று சுத்தவீரர்கள் பலர்பொருந்திய துரியோதனன் படையை முறியடித்து வெற்றிகொண்டு மீண்டும் வரு வேனென்று வீண்பெருமை பேசினான். அங்கே பேடி போல் மாறுவேடங்கொண்டிருந்த அருச்சுனன் விற் பிடிக்க அறியாத அச்சிறுவன் பேச்சைக்கேட்டுத்தான் அவனுக்கு இரதசாரத்தியம் செய்ய ஒப்புக்கொண்டு அவனைத் தேரின்மேலேற்றிப் பகைவருக்கு எதிராகச் சென்றான். இளம்பிள்ளையாகிய உத்தரன் கணக்கிலட ங்காத பெருஞ்சேனையைக் கண்டவுடன் மனங்கலங்கித் திடீரென்று தேரினின்று கீழேகுதித்து ஊரைநோக்கி ஓட ஆரம்பித்தான். அதைக்கண்ட அருச்சுனனாகிய பேடி அவனைத் தொடர்ந்தோடிப் பிடித்துவந்து தேரிற் கட்டிவைத்து அவனைத் தேற்றி தனக்குத் தேர்ப்பாக

ஞகக்கொண்டு தானொருவனே பகைவரை எதிர்த்து முறியடித்து வெற்றிகொண்டு திரும்பினுன். உத்தர குமாரன் இனி எக்காலத்திலும் வீண்பெருமை பேசக் கூடாதென்று தீர்மானம் செய்துகொண்டான்.

## 13. அஃகஞ் சுருக்கேல்.

தானியத்தைக்குறைத்து அதிக விலைக்குவிற்காதே என்பது இதன்கருத்து. ஜெர்மனிதேசத்தில் ஹாட்டோ என்ற பாதிரி ஒருவனிருந்தான். அவன் மிகவும் தீயகுணமுடையவன்; இரக்கம் சிறிதுமில்லாத கன் னெஞ்சுடையவன். ஒரு காலத்தில் பஞ்சமுண்டான போது ஹாட்டோ அளவிறந்த தானியங்களைச் சேகரி த்துக் களஞ்சியங்களில் வைத்துக்கொண்டு ஏழைகளு க்குச் சிறிதுங் கொடாமலும் அநியாய விலைக்குவிற் றும் வந்தனன். ஏழைகள் எலிகளைப்போலத் தானியங் களைத் தின்று அழித்து விடுகிருர்களென்றும் அவர் களைக் கொல்லுதல் பெரியதருமம் என்றும் பலமுறை யும் அவன் சினந்து கூறினுன். மேலும் ஒருநாள் ஏழைகள் பலரைத் தான் உணவளிப்பதாகக் கூறி அழை த்து ஒரு களஞ்சியத்தில் கூட்டமாகச்சேர்த்து நெருப்பு வைத்து அவர்களைக் கொன்றனன். ஏழைகளாகிய எலிகள் தொலைந்தால் தேசத்தில் பஞ்சமென்கிற பெய ரே இராது என்பது அவன் எண்ணம். இவ்விதமாக ஏழைகள் பலரைக் கொன்றுவிட்டுத் தேசத்தை பஞ் சத்தினின்றும் நீக்கிவிட்டதாக எண்ணிக் கவலையற்றுத் தூங்கினுன். அன்றிரவு பதினுயிரக்கணக்குள்ள எலி கள் அவன் வீட்டிற்புகுந்து அஸ்திவாரத்தை அறுத்து

விடவே வீடு இடிந்து விழுந்தது. ஹாட்டோ மிகுந்த கஷ்டத்தோடு தப்பிபோடி ரைன்நதிக்கு அக்கரையி லுள்ள தனது மலைக்கோட்டையொன்றில் புகுந்து வாயில்களையும் பலகணிகளையும் நன்ருக அடைத்துக் கொண்டு மேன்மாடியிலுட்கார்ந்திருந்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு பெரிய எலிப்படை ரைன் நதியை நீந்திக்கடப்பதை ஹாட்டோ கண்டு நடுநடுங்கி னன்; தான் செய்தவினை தன்னைச்சூழ்ந்ததென்று மனம் வருந்தினன். இப்பொழுதென்ன செய்வது. எலிகளோ, நதியை வேகமாகக் கடந்துவந்து எப்படியோ கோட்டைக்குட் புகுந்து ஹாட்டோவைச் சின்னபின்ன மாகக் கடித்துக்கொன்றன. ஹாட்டோ செய்ததீவினை க்குத் தக்கபடித் தண்டிக்கப்பட்டான்.

## 14. கண்டோன்று சோல்லேல்.

பார்த்ததை மறைத்துவேருென்றைச் சொல்லாதே என்பது இதன் பொருள். இது பெரும்பொய்பேசி வஞ் சிப்பவர்களின் செய்கையாகும்; நியாயஸ்தலங்களில் பொய்ச்சாட்சி சொல்பவருக்குப் பெருந்தண்டனை விதி ப்பது கண்டொன்று சொல்லுதலா லுண்டாகும் தீமை யை விலக்குவதற்கே.

மூன்று திருடர்கள் ஒரு நாள் ஒரு பிள்ளையார்கோ விலைக் கொள்ளையடிக்கப் போனர்கள். முதலிற்சென்ற திருடன் பிள்ளையார் வயிற்றில் சந்தனத்தின்மேல் வழ க்கமாய் ஒட்டவைத்திருக்கும் வெள்ளிக்காசொன்றை எடுப்பதற்காகக் கையைவைத்தபோது அங்கிருந்த தேளொன்று அவன் கையில் கொட்டிற்று. அவன் கை

யை எடுத்து உதற ஆரம்பித்தான். அதைக்கண்ட மற்ற இருவரும் அவனை ஏன் கையை உதறுகிறுயென்று கேட்க, அவன் சந்தனம் மிகுந்த வாசனையோடிருப்பதாகச் சொன்னுன். அதைக்கேட்ட மற்ற இருவரும் பிள்ளையார்வயிற்றில் கையைவைக்க அவர்களையும் தேள் கொட்டிவிட்டது. வஞ்சிக்கப்பட்ட இருவரும் வஞ்சித்தவனை நையப்புடைத்தார்கள்.

## 15. ஙப்போல்வளை.

தமிழ்ப்பாஷையிலுள்ள 'ங' என்னும் எழுத்து தன்னுடைய இனமாகிய ஙா, ஙி, ஙீ, முதலிய பதிஞேரு எழுத்துக்களைத் தாங்குவதுபோல ஒருவன் தனது இனத்தாரைத்தாங்கிக் காப்பாற்றவேண்டும் என்பது இதன்பொருள். 'ங' வர்க்கத்தில் 'ங' என்னும் எழுத்தொன்றே பாஷைக்குப் பயன்படுவது ; ஙா, ஙி முதலிய பதிஞேரு எழுத்துக்களும் உபயோகப்படுவதில்லை. அப்படி இருந்தும் பயன்படும் எழுத்தாகிய 'ங' வின் பொருட்டுப் பயனற்ற மற்றைப் பதிஞேரு எழுத்துக்களையும் பாஷையில் கூட்டிக் கணக்கிடலாயிற்று. அதனல் 'ங' என்னும் எழுத்தொன்று பயனற்ற தன்னுடைய இனத்தையும் தாங்கிக் காப்பாற்றும் பெருமையடைந்து விளங்குகிறது. அது போலக் குடும்பத்தில் உபயோகமில்லாத பலரையும் உபயோகமுள்ள ஒருவன் காப்பாற்றினல் அவனை உலகத்தார் புகழ்வார்கள். அப்படிக் காப்பாற்றினல் ஒருவனை 'சிறு துரும்பும் பல்லுக்குத்த உதவும்' என்ற பழமொழிக்கிணங்க அவர்களும் பயன்படுவார்கள்.

ஒரூரில் வியாபாரி ஒருவனிருந்தான். அவனுக்குக் கூன் குருடு செவிடு நொண்டி ஊமையாகிய ஐவர் சகோதரர் இருந்தனர். உடன் பிறந்த இவர்கள் குடும்பத்திற்குப் பாரமாயிருப்பினும் அந்த வியாபாரி இவர்களை அன்போடு பாதுகாத்து வந்தனன். ஒரு நாள் வியாபாரி தன்னுடைய வியாபார நிமித்தம் தன்னூரைவிட்டு அயலூருக்குப்போக நேரிட்டது. சமயம் பார்த்திருந்த சில திருடர்கள் வியாபாரி இல்லாதசமயத்தில் இரவில் அவன் வீட்டிற் கன்னமிட்டு உள்ளே புகுந்தார்கள். ஒன்றுக்கும் பயன்படாத கூனன் முதலிய ஐவரும் எழுந்து பேரிரைச்சலிட்டு ஆரவாரஞ்செய்யவே அக்கம் பக்கத்திலுள்ள அயலார்கள் ஓடிவந்து திருடர்களைப் பிடித்துவிட்டார்கள். மறுநாள் வியாபாரி தன்னூருக்கு வந்ததும் தன்னுடைய பொருள் பிரயோசனமில்லாதவர்களாக எல்லாராலும் எண்ணப்பட்ட தன் சகோதரர்களால் காப்பாற்றப் பெற்றதை அறிந்து மிகவும் அவர்களைக் கொண்டாடினன்.

## 16. சனிநீராடு.

சனிக்கிழமைதோறும் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்யவேண்டுமென்பது இதன் கருத்து. நம்முடைய சாஸ்த்ரப்பிரகாரம் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கிரகத்திற்கு உரியது. சனிக்கிழமைக்குரிய கிரகம் சனி: இந்தச் சனிக்குப் பிரீதியான தான்யம் எள். நாம் எண்ணெய்தேய்த்து அன்றையதினம் ஸ்நானம் செய்தால் அந்தக் கிரகத்தினல் நமக்கு நன்மை உண்டாகுமென்பது இந்துக்களுடையகொள்கை. மேலும்

உஷ்ணதேசங்களில் வசிப்பவர்களுக்கு எண்ணெய்தேய்த்து ஸ்நானம்செய்வது அவசியம்; அதை உத்தேசித்தே "வைத்தியனுக்குக் கொடுப்பதைக் காட்டிலும் வாணியனுக்குக் கொடுப்பது மேல்" என்று நம்மவர் சொல்வதும்.

## 17. ஞயம்பட வுரை.

நாம் இனிமையான வார்த்தைகளே சொல்லவேண்டுமென்பது இதன் கருத்து. இனிய வார்த்தைகளைக் கேட்க யாவருக்கும் சந்தோஷமுண்டாகும். கடுமையான சொற்கள் கூறினல் கேட்பவர் காதில் நாராசம்போல் சென்று அவர் மனத்தைப் புண்படுத்தும். சமுத்திரமும் குளிர்ந்த சந்திரன் வரவால்தான் பொங்குகிறது. ஒருவன் தவறுசெய்தாலும அவனை நல்லவார்த்தைகள் சொல்லியே நல்வழியில் திருப்பவேண்டும். கடுஞ்சொற்கள் சொன்னல் அவன் இன்னும் மூர்க்கனுவான். இன்சொற்கள்கூறிச் சாதிக்கக்கூடிய காரியத்தில் கொடுஞ்சொற்கள் ஏன் பிரயோகிக்கவேண்டும்? 'முள்ளால் பிளக்கக்கூடியதைக் கோடாலிபோட்டுப் பிளப்பார்களா?' பத்தொன்பது வருஷகாலம் சிறையிலிருந்த திருடன் ஒருவன் விடுதலையானவுடன் ஒரு பெரியவர் வீட்டில்வந்து ஒரு விளக்கைத் திருடினன். போலீஸ் சேவகர்கள் அவன் கையில் விலைஉயர்ந்த விளக்கு இருப்பதைப்பார்த்து அவனைப் பிடித்துக்கொண்டு அப்பெரியவரிடம் வர, அவர் அந்தத் திருடனை மிகுந்த மரியாதையுடன் உபசரித்து இனியவார்த்தைகளோடு அவனைப் பார்த்து, "எதற்காக இவர்கள் உங்களைப்பிடித்துக் கொண்டு வந்திருக்கிறார்கள்? நான்தான் உங்களுக்கு

இந்த விளக்கை வெகுமதிகொடுத்தேனே?'' என்று சொன்னார். போலீஸ் சேவகர்களும் அவனை விட்டு விட்டார்கள். இந்த இனிமையான வார்த்தைகளைக் கேட்டதுமுதல் அவன் திருடுவதை விட்டுவிட்டதுமில்லாமல், யாவராலும் மரியாதை செய்யக்கூடிய கௌரவ புருஷனாக ஆய்விட்டான்.

பரசுராமர் தன் தகப்பனாராகிய ஜமதக்னியை ஒரு இராஜா கொன்றுவிட்டதற்காக இருபத்தோரு இராஜ வம்சங்களைக் கருவறுப்பதாக பிரதிக்ஞைசெய்திருந்தார். அதற்கிணங்க அநேக அரசர்களையும் கொன்றார். இராமன் மிதிலையிலிருந்து சீதாபிராட்டியை மணம்புரிந்து திரும்பி வரும்போது பரசுராமர் மிக்க கோபத்துடன் இராமன் எதிரில் வந்துநின்று கடுஞ்சொற்கள் சொன்னார். அப்படிச் சொன்னபோதிலும் இராமன் பரசுராமரைப் பார்த்து இனிமையான வார்த்தைகளே சொன்னான். பரசுராமர் சினந்து ''சொத்தைவில்லை ஒடித்த நீயும் வீரனோ?'' என்று கேட்டார். இராமனும் அந்தப் பெரியவில்லை முகமலர்ச்சியோடு வாங்கி, வளைத்துத் தன் பராக்கிரமத்தைக் காட்டினான். பரசுராமர் அவமானமடைந்து போனார்.

## 18. இடம்பட வீடிடேல்.

வேண்டிய அளவுக்கு மிஞ்சிய பெரியவீட்டைக் கட்டவேண்டாம் என்பது இதன் கருத்து. பெரிய வீட்டைக் கட்டினால் பொருள் வீணாகச் செலவழிவதோடுகூட, சொந்தக்காரனுக்குப் பயன்படாது. சிறுகக் கட்டிப் பெருகவாழ் என்னும் பழமொழி இதன்பொ

ருளை விவரித்துச் சொல்லுகிறது. மிகுந்த செல்வமுடையராயிருக்குங்காலத்தில் தலை தெரியாமல் தங்களுக்கு வேண்டிய அளவுக்குமேல் விஸ்தாரமான வீடுகளைக் கட்டின பலர், தாம் வறுமையடைந்தகாலத்தில் அந்தப் பெரிய மாளிகைகளுக்கு விளக்கேற்றவும் சக்தியில்லாமல் அவைகளை இருட்டடைந்து வௌவால் முதலிய பிராணிகளுக்கு இருப்பிடமாய் விட்டுவிடுவதை நாம் பிரத்தியக்ஷமாகப் பல இடங்களிலும் பார்க்கிறோம். அங்ஙனம் இருட்டடைந்த பாழ் வீடுகளில் கெட்டகாற்று அடைந்துபோவதால் பேய் குடிகொண்டிருப்பதாக எண்ணி அவ்வீடுகளை வாங்குவதற்கும் அவற்றில் குடியேறுவதற்கும் பயப்படுகிறார்கள். பெரு வீடுகட்டிச் சிறுமையடைவதிலும் சிறு வீடுகட்டிப் பெருகவாழ்தல் சிறப்புடையதே.

## 19. இணக்கமறிந்திணங்கு.

சிநேகஞ் செய்யத்தக்கவர்களோடு சிநேகஞ் செய்ய வேண்டுமென்பது இதன்பொருள். தம்மைக்காட்டிலும் உயர்ந்தவர்களோடு சிநேகஞ்செய்தால் ஒருகாலும் அவர்கள் நம்மை மதிக்கமாட்டார்கள். அற்பசகவாசஞ் செய்தால் பிராணசங்கடம் நேரிடும். ஆதலால் ஒருவனிடத்து நட்புக் கொள்ளுங்கால் நன்றாக ஆராய்ந்தே சிநேகஞ் செய்யவேண்டும்.

ஒரு மகரிஷி காட்டில் தவஞ் செய்துகொண்டிருக்கும்பொழுது ஒருநாய் அவர் உண்டுகழிக்கும் எச்சிலைத் தின்று அவரைவிட்டுப் பிரியாமல் இருந்தது. ஒரு நாள் இந்தநாயின்மேல் ஒரு கலைமான் பாய்ந்துவர

இந்த நாயையும் தவசி தமது தவத்தின் வல்லமையால் ஒருகலைமானாக ஆக்கிவிட்டனர். வந்த கலைமான் ஓடிவிட்டது. நாயும் கலைமானுருவத்தோடு தவசியைவிட்டு நீங்காமல் வாழ்ந்திருந்தது. பிறகு ஒருநாள் புலியொன்று இந்தமான்மேற்பாய, தவசி இதனை ஒருபெரும் வேங்கைப்புலியாக மாற்றிவிட்டனர். வந்தபுலியோடிவிட நாய்ப் புலி தவசியிடம் தங்கியிருந்தது. பிறகு ஒருநாள் சிங்கமொன்று இப்புலியை யெதிர்க்க முனிவர் இதனையுஞ் சிங்கமாக்கினர். இவ்விதமாக முடிவில் இதனைச் சாபமாகவும் முனிவராக்கிவிட்டனர். முனிவரின் அருளால் அவரை அடைக்கலம் அடைந்த நாய் வலிமையுள்ள சரபமாகித்தனக்கு நிகர் எதுவுமில்லாமல் அளவற்ற செருக்கோடு அங்கு வாழ்ந்துவந்தது. இங்ஙனமிருக்கையில் அந்த நாய்ச் சரபம் பின்வருமாறு யோசிக்கத் தொடங்கிற்று. “இந்த முனிவர் அருளால் நாம் இப்படிப்பட்ட உயர்ந்த நிலையை அடைந்தோம். நமக்கு நிகரான வல்லமையுடைய பிராணி இந்தவுலகிற் கிடையாது. இனியொருகாலத்தில் தவசி நம்மேல் என்றைக்காயினும் கோபங்கொண்டால் நம்மை இழிந்த நிலைக்குக் கொண்டு வந்துவிடுவார். ஆகவே, அவர் அப்படிச் செய்வதற்கு முன் நாமே அவர் யோகஞ்செய்கிறகாலத்தில் அவருக்குத் தெரியாமல் அவரை விழுங்கிவிட்டால் பிறகு நம்மை வெல்பவர் இந்த உலகத்திலில்லை” என்று இவ்விதமான எண்ணங்கொண்டு தவசி கண்ணைமூடி யோகஞ் செய்துகொண்டிருக்கையில் இந்த நாய்ச்சரபம் அவருக்குப் பின்புறமாகத் தன்வாயைப் பிளந்து இறகைவிரித்து அதிகவேகமாக அவரை விழுங்கவந்தது. எல்லாந்

தெரிந்த அந்த முனிவர் உடனே தன் கண்ணைவிழித்து "ஓ பழைய நாயே இப்படிவா" என்று கூவியழைத்த மாத்திரத்தில் அந்தச் சரபஉருவம் நீங்கிப் பழையநாய் தன் சுயரூபத்தோடு அங்கு நின்றது. அற்பகுண முள்ள நாயைத் தன்னிடத் தணுகவிட்டதால் அந்தத் தவசி உயிரிழக்குந் தறுவாயிலிருந்தார். தவத்தின் வல்லமையால் தீங்கணுகாததாயிற்று. சிற்றினஞ் சேர் தலால் உண்டாகும்தீமை இக்கதையினுல் விளங்கும்.

## 20. தந்தைதாய்ப்பேண்.

பெற்ருேரைக் காப்பாற்றுக என்பதிதன் பொருள். அன்னையும் பிதாவுமுன்னறிதெய்வமானதால் அவர் களைக்காப்பாற்றுதல் மக்களுடைய முதற்கடமை. 'தந் தை சொன்மிக்க மந்திரமில்லை,' 'தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை' என்னும் அருமை வாசகங்கள் அவர் கள் பெருமையை நன்ருக விளக்கிக்காட்டும்.

ஸிஸிலித்தீவில் எட்ரு என்ற பெயருடைய எரிமலை யொன்றுண்டு. எரிமலை என்பது நெருப்பைத் தன்வா யால் கக்கும் மலை. அதன் வாய்வழியாகக்கல்லும் உலோ கங்களும் உருகிக் குழம்புபோல் வழிந்து ஓடும்; உண் டாகும் அளவிடப்படாத சாம்பலும் புகையும் தீயும் எங் கும் பரந்து நாடுநகரங்களைப் பாழ்படுத்தும். ஒருநாள் பூமி யதிர்ச்சியோடு எட்ரு என்னும் எரிமலை நெருப்பைக் கக்கத்தொடங்கிற்று; சாம்பலும் புகையும் கொண்டல் கொண்டலாய் மேலேகிளம்பின; கற்குழம்பு வெள்ளம் போற் பரந்தோடி அயலிலுள்ள பிரதேசங்களை யழித் தது; பூகம்பத்தால் வீடுகள் இடிந்துவிழுந்து பாழ்பட்

டன. அப்பொழுது மலையடிவாரத்திலுள்ள ஒரு சிறு கிராமத்திலிருந்த ஜனங்கள் தங்கள் தங்களுக்கு அருமையானவற்றை மாத்திரம் எடுத்துக்கொண்டு வேற்றிடங்களுக்கு விரைந்து ஓடினார்கள். அவர்களுக்குள் உத்தமகுணமுடைய இரண்டு சகோதரர்கள் தங்களிடத்தில் ஏராளமாயுள்ள செல்வத்தில் ஒன்றையும் எடுக்காமல் வயதுமுதிர்ந்த விருத்தாப்பியர்களான மாதாபிதாக்களைத் தங்கள் முதுகின்மேற் சுமந்து ஓடினார்கள். இதையறிந்த அந்நாட்டரசன் அவர்களை மிகவும் பெருமைப்படுத்தி உயர்நிலைக்குக் கொணர்ந்து தனக்கு மந்திரிகளாக அமைத்துக்கொண்டான்.

## 21. நன்றிமறவேல்.

ஒருவர்செய்த உபகாரத்தை மறக்கக்கூடாது, என்பதிதன் பொருள். பிரதியுபகாரத்தை எதிர்பாராமல் ஒருவன் செய்த உபகாரமும், சமயத்திற்செய்த உபகாரமும் எல்லா உபகாரங்களிலும் மிக உயர்ந்தவை. ஒருவன்செய்த உபகாரத்தை மறப்பது பெரிய பாவமென்றும் அப்படி மறந்தவனுக்குப் பிராயச்சித்தமில்லையென்றும் நமது பெரியோர்கள் கூறுவார்கள். நன்றிகெட்டவனை உலகத்தாரிகழ்ந்து வெறுப்பார்கள். சமயத்தில் உபகாரஞ் செய்தவனுக்காகப் பெரியோர்கள் தமது உயிரையுங் கொடுப்பார்கள்.

முற்காலத்தில் ஒரு சுல்தான் அளவிறந்த செல்வமுடையவனாயிருந்தும் வியாதியினாற் பீடிக்கப்பட்டிருந்தான். அநேக வைத்தியர்கள் பற்பல மருந்துகளைக் கொடுத்தும் அவன் நோய்நீங்கிக் குணமடையவில்லை.

ஒருநாள் டௌபான் என்னும் பெயருடைய பாரசீக வைத்தியனொருவன் மருந்து கொடுக்காமலே சுல்தானைச் சௌக்கியப் படுத்துவதாகக் கூறினன். சுல்தானும் அதற்கு ஒப்புக்கொண்டு டௌபான் சொல்வழி கேட்டு வந்தனன். டௌபான் மருந்துகளும் மூலிகைகளும் அடைக்கப்பட்ட ஒருவகைத் தடிப்பையும் பந்தையுங் கொண்டு சுல்தானைக் காலையிலும் மாலையிலும் விளையாடச்சொல்லினன். மருந்தின்சாரம் கைவழியாக உடம்பிற்பரவி, சுல்தான் சிலதினங்களுக்குள் சௌக்கியமடைந்தனன். ஒருவராலும் தீர்க்கமுடியாதநோய் நீங்கினதற்காகச் சுல்தானும் டௌபானைப் பெருமைப்படுத்தித் தன்னைவிட்டு நீங்காமல் அரண்மனையிலேயே வைத்துப் போற்றிவந்தான். மற்றவைத்தியர்கள் டௌபானுக்குண்டான சிறப்பினாற் பொறாமை கொண்டவர்களாய்ச் சுல்தான் மனத்தைக் கெடுக்கமுயன்றனர். அவர்கள் சுல்தானிடம், "ஐயா! டௌபான் மாயக்காரன். அவன் மந்திரத்தால் உடம்பைக்கட்டி நீங்கள் குணமடைந்ததாகக் காட்டிவிட்டான். அவன் கண்கட்டு வித்தையினல் உங்களை மயக்கினன். நீங்கள் ஏமாந்துபோனீர்கள். கூடியசீக்கிரத்தில் உங்களுக்கு உண்மை தெரியும்'' என்று கூறினார்கள். சுல்தானும் அவர்கள் பேச்சுக்கிடங்கொடுத்து, டௌபானைப் பெரிய மாயாவியென்று வைது அவன் தலையை வெட்டிவிட உத்தரவிட்டான். டௌபான் நன்றிகெட்ட சுல்தானை நோக்கி "ஐயா! உங்களுக்கு உண்மையாகவே நன்மை செய்தேன். பிறர் என்பாற் பொறாமைகொண்டு பேசும் சொற்களுக்கு நீங்கள் சிறிதும் இடங்கொடுக்கலாகாது''

என்று பலதடவை மிகவணக்கமாய்க் கேட்டுக்கொண்டும், சுல்தான் சிறிதும் மனமிரங்காமல் டௌபானைச் சிரச்சேதம் செய்துவிடத் தன் வீரர்களுக்குக் கட்டளையிட்டனன். ஏழை டௌபான் என்னசெய்வான். அவன் சுல்தானைப்பார்த்து, “சுல்தானே! என்னுடைய தீவினையால் யானிறக்கப்போகிறேன். நான் இறக்குந் தறுவாயில் தங்களை இரந்துகேட்கும் இவ்வேண்டுகோளை மறுக்காமல் அருள்செய்யவேண்டும். எனது தலையை வெட்டுகிறகாலத்தில், தலைகீழே விழாமல் ஒருபொன்னாலாகியதட்டில் ஏந்தித் தங்கள் முன்னிலையில் வைத்தால் அந்தத்தலை தங்களுக்கு ஒரு விநோதமான கதை சொல்லும். அதைத் தாங்கள் கேட்கவேண்டும். இதுவே எனது கோரிக்கை” என்றனன். சுல்தானும் அதற்கு ஒப்புக்கொண்டான். டௌபான் மரணதண்டனைக்கு உட்படுமுன் அவ்வூர் வழக்கம்போல் மனைவி மக்களிடம் உத்தரவு பெற்றுக்கொள்ள வீட்டிற்குப் போய் அவர்களிடம் மிகவருத்தத்தோடு விடைபெற்றுக் கையில் ஒரு சிறு புஸ்தகமொன்றை யெடுத்துக் கொண்டு சுல்தான் முன்வந்தான். சுல்தான் ஆணைப்படி அவன் சேவகர்கள் டௌபான் தலையை வெட்டிப் பொற்றட்டில் ஏந்தி அரசன் முன்பாக வைத்தனர். சிறிது நேரத்தில் தலை கண்ணை விழித்துச் சுல்தானைநோக்கி, “சுல்தானே! அதோ வெட்டுண்டுகிடக்கும் முண்டத்தின் கையிலிருக்கும் அந்தச் சிறுபுத்தகத்தை யெடுத்துப்படிப்பாயாக” என்றது. சுல்தானும் அவ்விதமே அப்புத்தகத்தை எடுத்துப் படிக்கப் பிரித்தான். புத்தகத்தின் ஏடுகள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டிருந்தன

சுல்தான் தலையைப்பார்த்து "ஏடுகள் ஒட்டிக்கொண்டிரு க்கின்றன" என்றனன். தலை, "ஐயா! உமதுவிரலை வா யில்வைத்து எடுத்து ஏடுகளின் ஓரத்தில் எச்சிலைத் தடவி னால் ஏடுகள் பிரிபடும்" என்று சொல்லிற்று. அரசனும் தன் விரலை வாயில்வைத்து எச்சிலையெடுத்து ஏடுகள் விளிம்பிற்றடவி ஓரேட்டைப் பிரித்தான். அதில் ஒன்றும் எழுதப்பட்டிருக்கவில்லை. மீட்டும்மீட்டும் வாயிலில் விரலைவைத்து ஏடுகளையெல்லாம் பிரித்தான். புத்தகம் முழுவதும் வெற்றேடுகளாக இருந்ததைக்கண்டு சுல் தான் தலையைப்பார்த்து "என்ன ஒன்றையுங்காணோ மே" என்று சொல்லிக்கொண்டே தலைமயங்கிக் கீழேவிழு ந்தான். தலை சுல்தானைப்பார்த்து "அடே! நன்றி கெட் டபாதகா! நன்மை செய்தவனைக் கொன்றனையே! அப் புத்தகத்தின் ஏட்டின் விளிம்பில் தடவப் பெற்றுள்ள விஷம் உன்விரல் வழியாக உன்வாயிற் பட்டுவிட்டது. அவ்விஷம் உன்னை நொடியிற் கொன்றுவிடும். இதுவே உனக்குத் தக்கதண்டனை" என்றுசொல்லிக் கண்ணை மூடிவிட்டது. அரசனும் படுவிஷத்தால் இறந்தான். செய்ந்நன்றி கொன்ற சுல்தானுக்குத் தகுந்த தண்டனை கிடைத்தது.

## 22. பருவத்தே பயிர்செய்.

தக்ககாலத்திற் பயிர்செய்யவேண்டுமென்பது இதன் கருத்து. அப்படிச் செய்யாவிட்டால் பயிர்விளையாது. வேண்டுங்காலத்து வாரமல் வேண்டாதகாலத்தில் வந்து மழை பயிரை நாசம்செய்யும். தன் அயலார்கள் சரி யான பருவத்தில் விதைவிதைத்துப் பயிர்செய்வதைப்

பார்த்தும் ஒருவன் மடிந்திருப்பானுனல், அவன் அவர்களெல்லோரும் தானியம் விளைந்துவந்து சௌக்கிய மாயிருக்கும்போது தரித்திரனுகத் தெருவிலலைந்து திரிவன். இன்றைக்குச் செய்யக்கூடிய காரியத்தை அகாரணமாக பிறகு செய்யலாமென்று எதற்காகத் தள்ளிவைக்கவேண்டும்? வாலிபத்திற் கற்றுக்கொள்ளவேண்டிய கல்வியைப் பிறகு வயோதிகத்தில் கற்றுக்கொள்ளலாமென் றொருவனிருந்தால் முடியாது. போன பருவம் திரும்பிவராது. ஆகையால் எந்தெந்தக் காரியங்களை எந்தெந்த வேளையில் செய்யவேண்டுமோ அந்தந்த வேளையிலேயே செய்து முடிக்கவேண்டும்.

## 23. மன்றுபறித்துண்ணேல்.

நியாயசபையை வஞ்சித்துப் பிறர் பொருளைக் கவர்ந்தனுபவியாதே என்பதிதன் பொருள்.

ஒருவணிகன் தனக்குப் புத்திரப்பேறில்லாததால் தன்னுடைய சொத்துக்களையெல்லாம் தன்னுடன்பிறந்தாள் புதல்வனுக்குக் கொடுத்துவிட்டுத் தான் காட்டிற்குத் தவஞ்செய்யப் போய்விட்டான். சிலகாலஞ்சென்ற பிறகு வணிகனுடைய பங்காளிகள் அவனுடைய சொத்தை அபகரித்துக்கொள்ள எண்ணிப் பொய்வழக்கிட்டு வாதாடினுர்கள். வணிகமாதும் அவள் இளம் புதல்வனும் யாதோராதரவுமின்றி மனங்கலங்கி வணிகன் வீட்டைவிட்டு வெளியேறினுர்கள். வணிகமாது தான் இன்னது செய்வதென்று அறியாதவளாய்க் கடவுளைநோக்கி, "கருணையங்கடலே, கரையற்ற துன்பக்கடலுள் ஆழ்ந்துகிடக்கும் என்னையும் என்மகனையும் காப்

பாற்றுவதுன்கடமை" என்று வணங்கித் துதித்தனள். கடவுளும் அவள் வேண்டுகோளுக்கிரங்கிக் காட்டிற்குத் தவஞ்செய்யப்போன வணிகனைப்போல் உருவங்கொண்டு அவர்களுக்குமுன்னே தோன்றி அஞ்சலென்று அபயமளித்து நியாயஸ்தலம் புகுந்து வாதாடி அநியாயமாய்ப் பொய்வழக்கிட்டு நின்ற வணிகன் பங்காளிகளை வாயிழந்தொழியச் செய்ததோடு கண்ணிழந்தும் வருந்தச்செய்தனர்.

## 24. இயல்பலாதன செயேல்.

நியாயமில்லாத செயல்களைச் செய்யாதே என்பதிதன் பொருள்.

துரியோதனன் பாண்டவர்மேலுள்ள வெறுப்பால் அவர்களை வஞ்சகமாகச் சூதாட அழைத்துத் தன் மாமனாகிய சகுனியைக்கொண்டு சூதில்வென்று அவர்களுடைய நாடு நகரஞ் செல்வங்களைக் கவர்ந்துகொண்டான். அதுவுமின்றி ஐவருக்கு முரியபத்தினியாகிய திரௌபதியைத் தீண்டத்தகாதகாலத்தில் இராஜசபைக்கு இழுத்துவந்து துகிலுரிந்து மானபங்கம் செய்தான். அவளை வேசியென்றும் தாசியென்றும் ஏசினன்; கற்பின் சிரோமணியாகிய அவளைத் தனது தொடையின் மேலுட்காரவுஞ் சொல்லினன். சபையிலுள்ள பெரியோர் பலரும் துரியோதனனுடைய நியாய விரோதமான செயல்களை நிந்தித்துப்பேசினர். அவன் அவர்கள் நிந்தனையைப் பொருட்படுத்தாது மேலும்மேலும் பாண்டவர்களை அவமதித்தனன்.

இதனால், பிறகு நடந்த பாரதயுத்தத்தில் திரௌபதி

யை இழுத்துவந்து மானபங்கஞ்செய்த துச்சாதனன் வீமசேனனால் சித்திரவதை செய்யப்பட்டான். துரியோதனன் வீமசேனனுடைய கதையடிபட்டுத் தொடை முறிந்து மாண்டான். துரியோதனனுடைய வம்சம் முழுவதுந் தொலைந்தது. அடாது செய்தாற்படாது படுவர் என்பதிதனால் விளங்கும்.

## 25. அரவமாட்டேல்.

பாம்பாட்டக்கூடாது என்பதிதன் பொருள். பாம்பாட்டுதல் எந்தக்காலத்திலும் ஆபத்திற்கிடமானது. யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்; பாம்பாட்டிகள் பெரும்பாலும் பாம்புகடியாலே இறக்கிறார்கள்.

ஒருகாலத்திற் பாம்பாட்டியொருவன் பெரிய கொடிய நாகங்களையெல்லாம் எடுத்தாட்டுவதிற் பெயர் பெற்றிருந்தான். அவன் ஒருநாள் கிருஷ்ணசர்ப்பமொன்றைப் பிடித்து வழக்கம்போலப் பல்லை உடனே பிடுங்கிவிடாமற் பாம்புப் பெட்டியில் வைத்திருந்தான். மறுநாள் அந்தப் பாம்பைப் பல்லைப்பிடுங்கிவிட்டதாக நினைத்து எடுத்து ஆட்டத்தொடங்கினான். அது அவனைக் கடித்துவிட்டதனால் அவன் விஷந்தலைக்கேறி மாண்டான். அரவமாட்டுதல் என்றைக்கும் ஆபத்தையேதரும்.

## 26. இலவம்பஞ்சிற்றுயில்.

இலவம்பஞ்சடைத்த மெத்தையிற்றூங்குக என்பதிதன் பொருள். இலவம்பஞ்சு உஷ்ணமுங் கொடுக்காது, குளிரையும் உண்டாக்காது. ஆட்டு ரோமத்தினாலாவது இறகினாலாவது செய்த மெத்தையை உப

யோகித்தால் உஷ்ணம்கொடுக்கும். அப்படிப்பட்ட உஷ்ணம் வேண்டாதகாலத்தில் அதை உபயோகிப்பது நல்லதில்லை. ஆனால் இலவம்பஞ்சினால் செய்தமெத்தை எப்பொழுதும் உடம்பிற்குக் கெடுதிபண்ணாது. 'சனி நீராடு' என்று முன்சொன்னதுபோல் இதுவும் தேக சௌக்கியத்தை உத்தேசித்துச் சொன்னது.

## 27. வஞ்சகம்பேசேல்.

வஞ்சகமான வார்த்தைகளைப் பேசக்கூடாதென்பது இதன் கருத்து. எல்லாரையும் வஞ்சித்து விடலாமென்று ஒருவன் நினைப்பது பிசகு. எங்கும் வியாபித்திருக்கிற கடவுள் எப்படிப்பட்ட காரியங்களையும் பார்த்துக்கொண்டிருக்கிறார் என்பதை மறக்கக்கூடாது. பல நாளைத்திருடன் ஒருநாளைக் ககப்படுவதுபோல் வழக்கமாக வஞ்சித்துக்கொண்டிருப்பவன் சிலசமயங்களில் அகப்பட்டுக்கொள்ளுவான். 'புலிவருகிறது, புலிவருகிறது' என்று கூவி வஞ்சித்த சிறுவன் கடைசியில் புலியால்மாண்ட கதை யாவருக்கும் தெரியும். குளிக்கப் போய்ச் சேற்றை பூசிக்கொள்வதைப்போல பிறரை வஞ்சிக்கப்போய்ச் சிலசமயங்களில் தமக்கே அழிவு நேரிடும்.

யாதவர்களிற் சிலர் சாம்பன் என்பவனைக் கருப்ப ஸ்திரீபோல் அலங்கரித்து தூர்வாசமுனிவரிடம் அழைத்துவந்து அவரைப் பரீக்ஷிப்பதற்காக "இந்தப் பெண்ணிற்கு என்னகுழந்தைபிறக்கும்? திரிகாலஞானியான தாங்கள் சொல்லவேண்டு"மென்று கேட்டார்கள். எல்லாமுணர்ந்த முனிவர் அவர் வஞ்சனையைக்கண்டு

வெகுண்டு “ இந்தப் பெண்ணிற்கு ஒரு இருப்புலக்கை பிறக்கும். அது உங்கள் குலத்தை நாசம்செய்யும்” என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். பிறகு அப்படியே ஒரு இருப்புலக்கை சாம்பனுக்குப்பிறந்தது. உடனே யாதவர்கள் அவ்வுலக்கையை அரத்தால் பொடிசெய்து சமுத்திரத்தில் கொண்டு கொட்டிவிட்டார்கள். அந்த இரும்புச் சன்னமெல்லாம் கரையோரத்தில்கொண்டு ஒதுக்கப்பட்டு வாட்கோரைகளாக் முளைத்து விட்டன. கொஞ்சகாலத்திற்கெல்லாம் யாதவர்களெல்லோரும் திருவிழாக்கொண்டாட கடற்கரை சென்றனர். அவர்களுள் குடிமயக்கத்தினால் சண்டையுண்டாக, அவர்கள் கடற்கரையோரத்தில் முளைத்திருந்த வாட்கோரைகளைப் பிடுங்கிக்கொண்டு சண்டைசெய்து யாவரும் மாண்டனர். முனிவரை வஞ்சிக்க முயன்றவற்கு இப்படிச் சாபத்தினால் முடிவு கிடைத்தது.

## 28. அழகலாதனசேயேல்.

பொருந்தாத காரியங்களைச் செய்யக்கூடாதென்பது இதன் பொருள். பொருத்தமில்லாத காரியங்களை ஒருவன் செய்வானானால் அவனுடைய கௌரவம் குன்றி அவனுடைய அழிவிற்கும் ஏதுவாகும். உலகத்தார் நிந்தனையும் அவனுக்குக் கிடைக்கும்.

முற்காலத்தில் பாணாசுரன் என்னும் அசுரன் சிவனைக் குறித்து நெடுங்காலம் தவஞ்செய்து அநேக வரங்களைப் பெற்று மிகுந்த பராக்கிரமசாலியாயிருந்தான். சிவபெருமானருளால் ஆயிரங் கைகளும் பெற்றான். அடியார்க்கெளியவனான சிவபெருமானை, சோணிதபுரமென்

னுந் தன் தலை நகருக்கு வாயில் காப்போனாகவும் அமைத்தனன். அவனுடைய தவத்திற்கு மெச்சிச் சிவபெருமான் வாயில்காக்க அமைந்து நின்றாலும் ஒப்புயர்வற்ற பரம்பொருளை வாயில் காக்கச் செய்தது பாணாசுரனுக்கு மிகவும் அழகில்லாதகாரியம்.

பிறகு கிருஷ்ணன் பேரனாகிய அநிருத்திரனைப் பாணாசுரன் சிறையிலிட அவரால் தன்னுடைய ஆயிரங் கைகளையிழந்து அவன் பெருமை குன்றினான்.

## 29. இளமையிற்கல்.

இளமைப் பருவத்திலேயே கல்வி கற்றுக்கொள்ள வேண்டுமென்பது இதன் பொருள். 'பருவத்தே பயிர் செய்' என்று முன் சொன்னபடிக் கல்வியாகிய பயிரை ஒருவன் இளமைப் பருவத்திலேயே பயிர் செய்யவேண்டும். இளமைப் பருவத்தில் கற்காமல் பின்பு கற்றுக் கொள்ளலாமென்றால் இடர்ப்படும். "அஞ்சிலறியாவிட்டால் ஐம்பதிலறியா"னென்று உலகோர் சொல்வதும் இதுபற்றியே. மூங்கில் இளைதாய் இருக்கும்பொழுது சுலபமாய் வளைக்கமுடியும். அங்ஙனம் வளைந்த மூங்கில் அரசரேறும் பல்லக்கிற்கு அணிகலனாய் விளங்கும். முற்றின மூங்கில் வளையாது. அது கழைக்கூத்தாடிகளின் காலின்கீழ்ப்பட்டு வருந்தும். இளமையிற் கற்றகல்வி பசுமரத்தாணிபோல மனத்திற்பதியும். இளமையிற் கல்லாதான் மனத்திற் பலகாலம் பாறை தண்ணீரிற் கிடந்தாலும் உள்ளீரங்கொள்ளாததுபோலக் கல்வியறிவுண்டாகாது.

வயது முதிர்ந்த ஒருவனும் இளைஞனாகிய ஒரு

வனும் சாத்துவந்தரிடத்திற் கல்விகற்கப்போயினர். சில வருடகாலத்தில் இளைஞன் சர்வசாஸ்திர பாரங்கத னாயினான். முதியன் தான் அங்ஙனமாகாமைக்கு வருந் திக் குருவினிடத்தில் முறையிட்டுக்கொண்டான். குரு வும் உண்மையைக்காட்ட விரும்பி இரண்டு இருப்பா ணிகளை அவன் கையிற்கொடுத்து ஒன்றை ஒரு பசு மரத்திலும் மற்றொன்றை யொரு பட்டமரத்திலும் அறையச்சொல்லினர். அவனு மங்ஙனம்செய்யப் பசு மரத்தில் எளிதாக ஆணிசென்று பதிந்தது ; பட்டமரத் திலோ ஆணி கூர்மழுங்கியொடிந்தது. அம்முதியனும் உண்மையையுணர்ந்தான்.

வாலிபப் பருவத்திலேயே காளிதாசன் கல்வி கற்க வில்லையென்ற பழிமொழியைக்கேட்டு அவன் மனைவி யுயிர்மாய்த்துக்கொண்டனளென்று அறிஞர் கூறுகின் றனர்.

## 30. அறனைமறவேல்.

அறம் என்றசொல் அறன் எனநின்றது. அறம் என்றால் தருமம். இங்கு வருணச்சிரம தருமத்தை யுணர்த்திநிற்கும். வருணமாவது பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னுஞ் சாதிபேதமாம். இவர்களுக் குள்ள ஆசிரமமும் பிரமசரியம் கிருகஸ்தாசிரமம் வானப்பிரஸ்தம் சந்நியாசம் என நால்வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அந்தந்த நிலைமைக்குள்ள தரு மத்தை அதாவது ஒழுக்கத்தை அவ்வந்நிலையிலுள் ளோர் அனுஷ்டிக்கவேண்டும். ஒரு நிலையிலுள்ளோர் மற்றொரு நிலையின் ஒழுக்கத்தை அனுசரித்தல் கடவிற்

செல்லும் மரக்கலத்தைக் கரையிற்செலுத்திக் கரையிற் செல்லும் சகடத்தைக் கடலிற்செலுத்துதல்போல இய லாதாகுமன்றிப் பேரிடரையுந்தரும். ஒழுக்கந்தவறிய பிராமணனிலும் ஒழுக்கந்தவறாத சண்டாளன் மேலான வன் என்று நமது பெரியோர் பலரும் பல இடங்களில் முறையிட்டிருக்கின்றனர்.

கொங்கணவன் என்னும் மறையவன் ஒருவன் காட் டில் தவஞ்செய்துகொண்டிருந்தான். அவன் ஒரு மரத்தடியிலுட்கார்ந்து ஜபம் செய்துகொண்டிருக்கை யில் அம்மரத்தின்மேலிருந்த கொக்கொன்று அவன் மேல் எச்சமிட்டது. அதனால் வெகுண்ட அந்தணன் கொக்கை விழித்து நோக்கக் கொக்கு சாம்பலாய் எரிந்து விழுந்தது. கொங்கணவன் தன் தவத்தின் வல்ல மைக்குமெச்சித் தான் செய்த தவம் முற்றிலுங் கைகூடி யதாக எண்ணி அகந்தையடைந்து காட்டை விட்டு நீங்கி நகரங்களிற்சென்று பிக்ஷையேற்று வந்தனன். ஒரு நாள் அவன் நகரமொன்றிற் புகுந்து ஒரு மறைய வன் வீட்டிற் பிச்சைகேட்டனன். மறையவன் மனைவி கொங்கணவனுக்குப் பிச்சை கொண்டுவருவதாகச்சொ ல்லி இருக்கச்செய்து இல்லினுட்புகுந்து தன் கண வனுக்குச் செய்யவேண்டிய சுச்ருஷைகளைச்செய்து முடித்துப் பிறகு பிச்சையெடுத்துவந்தனள். கொங்க ணவன் மிக்க தாமதமாய்ப் பிச்சைகொணர்ந்ததற்குக் கோபித்து அந்த மாதுசிரோமணியை வெறித்து நோக் கினன். அம்மாது சிறிதுங்கலங்காதவளாய்க் கொங்க ணவனை நோக்கி, "கொக்கென்று நினைத்தனையோ கொங் கணவா?" என்று புன்னகையுடன் கேட்டனள். காட்டில்

ஒருவருமறியாமல் நிகழ்ந்த விருத்தாந்தத்தை மாதின் வாய்க்கேட்ட கொங்கணவன் மிகப்பயந்து நடுநடுங்கி அவள் பாதத்தில் விழுந்து வணங்கித் தான்செய்த அபசாரத்தைப் பொறுத்துக்கொள்ளக் கேட்டுக்கொண்டதுமன்றி அவ்விரகசியத்தை அவள் அறிந்த விவரத்தையும் தனக்குணர்த்த மிகவும் வேண்டிக்கொண்டனன். அம்மாது அவனை நோக்கி, "கொங்கணவா, நீ இதனை அறியவிரும்பினால் இவ்வூர்க்கு வெளியில் புலால் விற்கும் பறையனொருவனுளன். அவன்வாய்க் கேட்டறிக" என்று மறுமொழி பகர்ந்து போயினள். கொங்கணவன் அந்த விவரத்தை யறியவிரும்பி ஊருக்கு வெளியிலுள்ள பறையர்சேரிக் கருகிற்சென்று புலால் விற்கும் சண்டாள னொருவனைக்கண்டு அவன் மாமிசத்தை வெட்டுவதுங் குத்துவதும் இழுப்பதுமாயிருக்கும் நிலையை யுணர்ந்து "ஐயோ! பாவம், பாவம். இச் சண்டாளன் யாதறிவான்? புண்ணிய பாவங்களைப் பகுத்தறியும் தன்மை இவனுக்கு முண்டோ? அறமென்பதே இவன் மனத்தி லெக்காலத்திலும் புகாதே. இவன் கொக்கெரித்த விவரத்தை எங்ஙனமறிவான். இவன் பால் அம்மாதின் பேச்சைக்கேட்டு வந்தது நாம்செய்த பெரும் பிழையேயாம். இருந்தாலும் இவ்வளவு தூரம் வந்து இவனையும் கண்டுவிட்டோம். இவன் செய்து கொண்டிருக்குந் தீத்தொழிலை முடித்து வெளிவரட்டும்" என்று தனக்குள்ளே தீர்மானித்துத் தொலைவில் ஒருபுறந் தங்கியிருந்தான். சண்டாளன் தான் செய்ய வேண்டிய தொழிலை முடித்துக்கொண்டு அருகிலிருந்த நீர்நிலை யொன்றில் முழுகிவிட்டுத் தனது குடிசைக்குட்

புகுந்து வயது முதிர்ந்த தனது மாதாபிதாக்களை வணங்கியுபசரித்து உணவளித்துப் பிறகு தூரத்தொலைவிலிருந்த அந்தணனை நோக்கி வந்தனன். வந்த சண்டாளன், அந்தணன் சிறிது தூரத்திலிருக்கத் தான் நின்று அவனைப் பார்த்து "ஐயா! நீங்கள் என்னைத் தேடிவந்த காரியம் இன்னதென்றுணர்வேன். அப்பார்ப்பனமாதுசிரோமணி தங்களை யென்னிடம் அனுப்பிய விவரமுந் தெரிந்தேன். தங்கள் தங்கள் நிலைமைக்குரிய ஒழுக்கத்தினிற்பவர்கள் கொக்கை யெரிப்பவர்களைக் காட்டிலும் மேலானவர்கள்" என்று கூறினன். கொங்கணவன் தான் வாய் திறப்பதற்குமுன் சகலவிவரத்தையுமுரைத்த சண்டாளன் பெருமையை வியந்து பாராட்டி அன்று முதற் சண்டாளன் கூறிய உண்மையை நன்கு உணர்ந்து அனுஷ்டித்துத் தன் அகந்தையை யொழித்து நல்வழிப்பட்டு வாழ்ந்தனன்.

## 31. அனந்தலாடேல்.

காலைப் பொழுதில் நித்திரை செய்யாதே, என்பது இதன் கருத்தென்ப. காலையிலெழுந்து கடவுளைத் தொழுது செய்யத்தகும் செய்கடன் முடித்த பிறகு தமது தொழிலிற் புகவேண்டும். விடியுமுன்னெழுந்து காலைக் கடன் முடித்து வேலைசெய்யப்புகாத மனிதன் சோம்பலுடையவனாய் ஒன்றிற்கும் பயன்படாதவனாவான். காலையிற்றுயின்றாற் சீலமொழியும், பகற்காலத்தி லுறங்கினாற் செல்வ நீங்கும், மாலையிற் றூங்கினால் நோயுண்டாகும் என்று வாகட நூல்கள் முறையிடுகின்றன. இது பற்றியேதான் 'வைகறைத் துயிலெழு' என்று மேலுங் கூறுவார் ஒளவையார்.

## 32. கடிவதுமற.

**கோ**பத்தை மறந்துவிடு, அஃதாவது கோபத்திற் கிடங்கொடாமல் அதனை யொழிக்கவேண்டும் என்பதிதன் கருத்து. இஃது 'ஆறுவது சினம்' என்று கூறியதன் கருத்தையும் ஒருவாறு தழுவியுள்ளது.

முற்காலத்தில் நகுஷன் என்னும் அரசன் அநேக அசுவமேதயாகஞ்செய்து அப்புண்ணியத்தால் இந்திரனுபினுன். ஒரு நாள் அவன் புலோமிசையை விரும்பி அவள்பாற் செல்லுவதற்காக சப்த இருடிகளாற் சுமக்கப்பெற்ற ஒரு விமானத்தின் மேலேறிச் சென்ருன். இருடிகளு ளொருவராகிய அகஸ்தியர் மிகவும் குறிய உருவுடையராதலின் விமானம் வேகமாகச் செல்லாமல் அடிக்கடி தடைப்பட்டுச் சென்றது. இந்திரனுன நகுஷன் கோபங்கொண்டவனுய் இருஷிகளை நோக்கிச் சீக்கிரஞ்செல் என்று பொருள்பட 'சர்ப்ப' 'சர்ப்ப' என்றனன். அகஸ்தியர் நகுஷனைச் சர்ப்பமாகக் கடவாய் என்று சபித்தார். பெரியாரைக் கடிந்து கூறின நகுஷன் மலைப்பாம்பாய்க் கீழேவிழுந்தான்.

இனி, 'கடிவதுமற' என்பதற்குக் கடியத் தக்கவற்றை மறந்துவிடு என்றும் பொருள் கொள்ளலாம். பெரியார்கள் நீதி நூல்களால் எவ்வெச்செயல்களை நீக்கவேண்டுமென்று கூறியிருக்கிருர்களோ அவைகளை மறந்துவிடவேண்டும் என்பதிதன் கருத்தாகும். இன்னும் இதற்குப் பிறர் நம்மைக் கடிந்தால் அதனை யுடனே மறக்கவேண்டும் என்றும் பொருள் கூறுவார்.

## 33. காப்பது விரதம்.

அடைக்கலம் புகுந்தோரைக் காப்பாற்றுவதை ஒரு விரதமாக அனுஷ்டிக்க வேண்டுமென்பதிதன் கருத்தாகும். ஆபத்துக் காலத்திற் சரணமடைந்தவரைப் பாதுகாத்தல் ஒவ்வொருவனுக்கும் கடமையாகும்.

முற்காலத்தில் சிபியென்னும் பெயருடைய சூரிய குலமன்னன் அயோத்தியில் அரசாண்டு வந்தனன். அவன் தன்னுயிர்போல மன்னுயிரைப் பாதுகாப்பவன். ஒரு நாள் அவனைப் பரீக்ஷிக்கும் பொருட்டு இந்திரன் வேடனாகவும் அக்கினிபகவான் புறாவாகவும் உருக்கொண்டு வேடன் புறாவைத் துரத்தி வருவதுபோல மாயஞ் செய்தனர். ஓடிவந்த புறா சிபியின் பாதத்தில் விழுந்து சரணமடைந்தது. அடைக்கலம் புகுந்த புறாவைக் காப்பாற்றுவது சிபியின் கடமையாயிற்று. வேடன் தனக்கு ஆகாரமாகவேண்டிய புறாவை விடவேண்டி வாதாடினான். முடிவில் சிபி புறாவின் எடையுள்ள தசையைத் தன் உடம்பிலிருந்து வெட்டிக்கொடுப்பதாக ஒப்புக்கொண்டு தராசுத் தட்டொன்றிற் புறாவைவைத்து மற்றொரு தட்டில் தன் உடலிலிருந்து மாமிசத்தை நறுக்கி வைத்தனன். எவ்வளவு தசை வெட்டிவைத்தும் புறா இருந்த தட்டுத்தாழவே தானே தராசுத் தட்டிலேறி உட்கார்ந்தனன். இரு தட்டுஞ் சமமாய் நின்றன. சிபி வேடனை நோக்கித் தன்னைப் பெற்றுக்கொள்ள வேண்டினன். சிபிச் சக்கிரவர்த்தியின் மனவுறுதியைக்கண்ட இந்திரனும் அக்கினியும் தமது சுயரூபத்தோடு எதிரில் நின்று அவனுக்கு வேண்டும் வரமளித்துச் சென்றனர்.

## 34. கிழமைப்படவாழ்.

உரிமையுண்டாக வாழ்வாயாக என்பதிதன் பொருள். ஓரிடத்தைத் தனக்கு உரிய இடமாகக்கொண்டு வாழாத வனை யுலகம் மதியாது.

திருநாவலூரராகிய சுந்தரமூர்த்தியைத் தடுத்து ஆட்கொள்ளும் பொருட்டுச் சிவபெருமான் கிழப் பிராமணனைப்போல் வேடம் பூண்டு அடிமையோலை காட்டி வாதாடினர். சுந்தரமூர்த்தியும் சிவபெருமானும் ஒருவரோடொருவர் வாதிட்டுத் திருவெண்ணெய்நல்லூருக்குச்சென்று அங்குள்ள பெரியார்கள் முன்னிலையில் தமக்குள்ள வழக்கினைத் தெரிவித்து நியாயங் கேட்டனர். அப்பொழுதங்குள்ள சான்றோர் பலரும் கிழவரைப் பார்த்து "ஐயா! நீர் உரிமைகொண்டு வாழுமிடம் யாதோ? அது தெரிந்தாலன்றி உமது வழக்கைப் பொருட்படுத்தோம்'' என்று கூறிவிட்டனர். கிழவராகிய சிவபெருமான் தமக்குரிய இடத்தைக் காட்டுவதாகக் கூறி யாவரையும் உடனழைத்துச்சென்று கோயிலுட் புகுந்து மறைந்தனர். வந்த கிழவர் சிவபெருமானே யென்பதை யுணர்ந்து சுந்தரமூர்த்தி அவரைப் பாடும்பணியே தொழிலாகக்கொண்டு தொண்டு பூண்டொழுகினர்.

## 35. கீழ்மையகற்று.

குற்றம் பொருந்தியவற்றை நீக்கவேண்டுமென்பது இதன் கருத்து. அற்பமான செய்கைகளை யுடையவன் கௌரவமடையான். அவனைப் பலருமிகழ்வார்கள். எவ்வளவு நற்குணமிருப்பினும் அற்பகுணமொன்று

கலக்குமானல் ஆவின் பாலில் ஒரு மோர்த்துளி தெறித் தாற்போல அவை யாவுந் திரிந்துவிடும்.

15-ஆம் நூற்றுண்டின் முதலில் இரண்டாவது ஹெ ன்றி என்னுமரசன் இங்கிலாந்து தேசத்தில் அரசாண்டு வந்தபோது ஐர்லாண்ட் தேசத்தில் மதசம்பந்தமான குழப்பமொன்று நேரிட அதனை யடக்கத் தன் குமார ஞகிய ஜான் என்பவனை அனுப்பினன். ஜான் பெரிய பதவியிலிருந்தும் கீழ்மைக் குணமே மேலிட்டிருந்தனன். ஐர்லாண்டிலுள்ள பிஷப் முதலிய பெரியவர்கள் வந்து இவனைப் பார்த்து வணங்க ஜான் அவர்கள் நீளமான தாடியைப் பிடித்து இழுத்து அவமானப் படுத்தினன். இப்படி இவன் செய்ததற்கு அவர்கள் வெகுண்டு குழப் பத்தை அதிகப்படுத்தி ஐர்லாண்ட் இங்கிலாண்ட் அர சன் கையைவிட்டுப் பிரிந்துவிட ஏற்பாடு செய்தனர்.

## 36. குணமது கைவிடேல்.

நற்குணங்களைக் கைவிடக்கூடாதென்பதிதன் பொ ருள். குற்றங்களை எப்படிக் களையவேண்டுமோ அப் படியே குணத்தைப் பாதுகாக்கவேண்டும். குற்றத்தை நீக்கிக் குணத்தைக் கொள்பவர்கள் நீரை நீக்கிப் பாலைப் பிரித்துக் கிரகிக்கும் அன்னம்போலாவர். நற்குண நற் செய்கைகளையுடையவன் யாவராலு மெக்காலத்திலும் புகழப்படுவன்.

அயோத்தியிலரசாண்டுவந்த அரிச்சந்திரனென்னும் சூரியகுல மன்னன் 'ஸத்யமேஜயம்' என்ற உறுதி யைக் கடைப்பிடித்துத் தனக்கு எப்படிப்பட்ட ஆபத்து நேரிடினும் அதனைக் கைவிடாமற் பாதுகாத்து வந்

தான். விசுவாமித்திர முனிவரால் நாடு நகர முதலிய வற்றை இழந்தும், மனைவி மகனை விற்றும், மகனிற ந்து கிடப்ப, மனைவிகொலைக்குற்றஞ் சாட்டப்பட்டுத் தன்கையால் வெட்ட நேரிட்டகாலத்தும் சிறிதும் மனம் கலங்காதவனாய் மெய்ம்மைபேசும் நற்குணத்தைக் கை விடாதிருந்தான். இவனுடைய உத்தமகுணத்திற்கு விய ந்து தேவர்களும் பாராட்டினார்கள். உயிர்நீங்க நேரிடி னும் உத்தமகுணத்தைக் கைவிடாதிருந்த இவன் தனக் குண்டான தீங்குகள் பலவும் சூரியன்முன் பனிபோல நீங்கப் பெற்றனன்.

## 37. கூடிப்பிரியேல்.

பழகினபிறகு ஒருவனைவிட்டுப் பிரிதல்கூடாதென் பதிதன் பொருள். நாம் ஒருவனுடன் நட்புப்பூண்டி ருந்தால் நம்முடைய இரகசியங்கள் அவனுக்குத் தெரி யும். பிறகு அவனுடன் விரோதித்துப் பகைத்துக் கொண்டால் அவன் நம் விரோதிகளுடன் சேர்ந்து நம்மைக் கெடுக்கலாம். கூடிப்பிரியாதநட்பு மேலானது.

லண்டன் நகரத்து மிருகசாலையில் ஒருபெரிய சிங்கம் கூண்டிலடைக்கப்பட்டிருந்தது. அதைப்பார்க்க வருப வர்கள் ஒரு பெனியாவது ஒரு சிறுநாய் பூனையாவது அதற்கு ஆகாரமாகக் கொண்டுவந்துபோடுவது வழக்க மாயிருந்தது. ஒருநாள் சிறுபையன் ஒருவன் தெருவி லோடிக் கொண்டிருந்த ஒரு சிறிய நாய்க்குட்டியைப் பிடி த்துக் கூண்டிற் போட்டுவிட்டுப் போனான். அந்த நாய்க் குட்டி மிகவும்பயந்து நடுநடுங்கிக் கூண்டின் ஒரு மூலை யில் பதுங்கிக் கெஞ்சிக் கேட்பதுபோல் நின்றது. அந்த

மிருகேந்திரன் அந்த நாய்க்குட்டியின் நிலைமையைக் கண்டு பரிதபித்து அதனுடன் நட்புப்பூண்டது. தினந்தோறும் தனக்குக் கிடைக்கும் ஆகாரத்தில் நாய்க்குட்டிசாப்பிட்டு மீந்ததைத்தான் அது தின்பதுவழக்கம். இப்படியிருக்கையில் ஒருநாள் அந்த நாய்க்குட்டி வியாதிபிடித்து இறந்தது. சிங்கம் தன் நண்பன் இறந்ததற்கு மிகவும் துக்கப்பட்டு அநேகநாள் சாப்பிடவேயில்லை. இறந்துகிடக்கும் நாய்க்குட்டியைச் சுற்றிச் சுற்றிமோந்து பார்த்துக்கொண்டிருந்ததோடு வேறொருவரையுமந்த நாய்க்குட்டியை யெடுக்க இடங்கொடுக்கவில்லை. இப்படி ஆகாரமில்லாமற் சிலநாள் சென்றதும் அந்தச் சிங்கம் உயிர்துறந்தது.

## 38. கேடுப்பதொழி.

பிறருக்குக் கேடுசூழ்வதை நீக்குவாயாக என்பது இதன் பொருள். கெடுவான் கேடுநினைப்பானாகையால் ஒருவருக்கும் தீங்கியற்ற நினைக்கக்கூடாது.

துஷ்டனாகிய துரியோதனன் சொல்லைக்கேட்டுக் காளமாமுனியென்ற பெயருடைய முனிவன் ஒருவன் பாண்டவர்களைக் கொல்லும்படி ஒருவேள்வி இயற்றி அதினின்றும் பெரும்பூதமொன்றை யெழுப்பிப் பாண்டவர்களை அழித்துவர ஏவிவிடுத்தான். எல்லாமுணர்ந்த கண்ணபிரான் அருளினால் பாண்டவர்கள் மர்னொன்றைத் தூரத்திச்சென்று களைப்படைந்து நச்சுப் பொய்கையினீருண்டு மூர்ச்சித்துக் கிடந்தனர். அவர்களைத் தேடிச்சென்ற பூதமோ அன்னோர் இறந்துகிடப்பதாக நினைத்துச் செத்தாரைக் கொல்லவோ நம்மையேவினான்

என்று காளமாமுனிமேற் சினங்கொண்டு திரும்பிவந்து முனிவனைக் கொன்றுசென்றது.

## 39. கேள்விமுயல்.

பெரியவர்கள் கூறும் விஷயங்களைக்கேட்டு அறிவினை விருத்தி செய்துகொள்ள முயற்சிக்கவேண்டும் என்பதி தன்கருத்து. ஒருவன் தானாக ஒரு விஷயத்தைத் தெரிந்துகொள்ளுவதைவிட அநுபவமுடைய அறிவுடையாரிடத்திற் றெரிந்துகொள்வது மிகவும்மேலானது. நெடுநாளாக வருந்திக் கண்டுபிடிக்கப்பட்ட விஷயமொன்றை மிகக் குறைந்தகாலத்தில் ஒருவன் அறிவுடையவரிடத்தில் கேட்டுத் தெரிந்துகொள்ளக்கூடும்; காலமும் வீணாகாது; விஷயமும் செவ்வையாய் விளங்கும். இதனாற்றான் கற்றலிற் கேட்டலே நன்று என்று புலவர்களும் வற்புறுத்திக் கூறியிருக்கிறார்கள்.

ஸ்ரீகாளத்திமலையிற் றிண்ணப்பனென்ற வேடனொருவனிருந்தான். அவன் வழக்கம்போல் மலையில் வேட்டையாடிவருகையில் மலையினுச்சியிற் சிவலிங்கமொன்றைக் கண்டு பக்திமேலிட்டு அன்புருவாயினான். திண்ணப்பன் வேட்டையாடிக் கொன்ற பிராணிகளின் தசைகளைச் சுவைத்துப்பார்த்து மிகுந்த ருசியுள்ளவற்றைச் சிவலிங்கத்திற்கு ஆகாரமாகக் கொணர்ந்து படைத்து அதனை யுண்ணச்செய்து வந்தனன்.

சிவபெருமானும் திண்ணப்பனுடைய பக்திக்கு மனமகிழ்ந்து அவனுடைய எச்சிலை அங்கீகரித்து வந்தனர். ஒருநாள் திண்ணப்பனுடைய அன்புநிலையை உலகத்தாருக்குக் காட்ட விரும்பிக் கடவுள் சிவலிங்கத்தின் வலக்-

கண்ணிலிருந்து இரத்த மொழுகச்செய்தனர். திண்ணப்பன் வழக்கம்போல வந்து பார்க்கும்பொழுது லிங்கத்தின் கண்ணிலிருந்து உதிரம் கொட்டுவதை யுணர்ந்து மிகவும் வருந்தி இன்னதுசெய்வதென்றறியாமற் கலங்கினான். அச்சமயத்தில் சதைக்குச் சதையெடுத்து அப்பினால் இரத்தம்வடிவது நின்றுவிடும் என்று வேடர்கள் சொல்லக் கேள்விப்பட்டிருந்தது ஞாபகம் வந்தது. உடனே தன் உடைவாளையுருவி தன்னுடைய வலது கண்ணைத் தோண்டியெடுத்துச் சிவலிங்கத்தின் இரத்தமொழுகும் கண்ணிலப்பினான். உதிரமொழுகுவது உடனேநின்றது. கண்ட திண்ணப்பன் கரையிலாத களிப்பென்னும் கடலிலாழ்ந்து ஆனந்தக் கூத்தாடினான். சிவபெருமான் அவனை யின்னுஞ்சோதிக்கும்பொருட்டு லிங்கத்தின் மற்றொரு கண்ணிலிருந்தும் இரத்தமொழுகத் திருவிளையாடல் செய்தனர். திண்ணப்பன் இப்பொழுது சிறிதுங் கவலையில்லாதவனாய்த் தனது செருப்பணிந்த காலையெடுத்துச் சிவலிங்கத்தின் இரத்தம் வடியும் கண்ணிற்கருகில் அடையாளத்திற்காக வைத்துக்கொண்டு உடைவாளையெடுத்துத் தன்னுடைய மற்றொரு கண்ணையிடந்து அப்பத்தொடங்கினான். அச்சமயத்தில் இலிங்கத்தினின்றும் கடவுள் வெளிப்பட்டு அவனெதிரிற்றோன்றி அவன் கையைப் பிடித்து நில்நில் என்று தடுத்து அவனுக்குப் பேரருள் செய்தனர். அவன் தனது கண்ணையிடந்து அப்பிய அக்காலந் தொடங்கிக் கண்ணப்பன் என்ற திருநாமம் பெற்றனன். ஊனுக்குஊன் அப்பவேண்டுமென்ற கேள்வியறிவு அவனுக்குச் சமயத்தில் உதவிசெய்தது.

## 40. கைவினை கரவேல்.

ஒருவன் தனக்குக் கைவந்த தொழிலை பிறருக்குச் சொல்லாமல் மறைக்கக்கூடாது என்பதிதன் பொருள். பொருட்செல்வம் பிறருக்குக் கொடுக்கக் கொடுக்கக் குறைபடும். கல்விச்செல்வமோ அப்படியன்று ; கொடுக்கக் கொடுக்க மணற் கேணிபோல் வளரும். தனக்குக் கைவந்த வித்தையைப் பிறருக்கு உபயோகப்படாமல் தனக்குத் தானே வைத்துக்கொள்பவனைப்போற் சுயநயம் பாராட்டுபவன் வேறிரான். அவனுக்குப் பாவம் சம்பவிக்கும் என்று நூல்கள் முறையிடுகின்றன.

ஒரு பிராமணன் சகலகலைகளிலும் வல்லவனாயிருந்தும் தன் வித்தைகளைப் பிறருக்குப் போதியாமலிருந்தான். அருமையான வித்தைகளைப் பிறருக்குச் சொல்லிக்கொடுக்காத பாவத்திற்காக இவன் மறுபிறப்பில் பிரம ராக்ஷஸனாகப் பிறந்து ஒரு மரத்தின் கிளையில் தலைகீழாகத் தொங்கிக்கொண்டிருந்தான். இப்படி இவன் நெடுங்காலம் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கையில் ஒரு நாள் ஒரு பார்ப்பனச் சிறுவன் கல்விகூறகாதிருந்ததனால் தன் சகோதரராற் றுரத்தப்பட்டு இந்த பிரம்ம ராக்ஷஸன் தொங்கிக்கொண்டிருக்கும் மரத்தின் கீழ்த் தற்செயலாய்வந்து களைப்பாற் படுத்துறங்கி விட்டான். பிரம ராட்சதன் அந்த வாலிபனைப் பார்த்து ‘இவன் தான் நமக்குத் தகுந்தவன்’ என்று நினைத்து அவனை எடுத்து மரத்தின்மேல் வைத்துக்கொண்டு ஆறுமாத காலத்தில் எல்லா வித்தையையும் அவனுக்குச் சொல்லிக் கொடுத்தனன். உடனே இவன் பாபம் நீங்கிப் பிராமண சுவரூபமடைந்து போயினன்.

## 41. கொள்ளை விரும்பேல்.

பிறர் பொருளைக் கவர்ந்துகொள்ள விரும்பாதே என்பதிதன் பொருள். கொள்ளையிடுபவரை அரசர் தண்டனைசெய்வார். நியாயஸ்தலங்களில் இப்படிப்பட்டவர் தண்டிக்கப்படுவதை நாம் அடிக்கடி பார்க்கிறோம். சிலர் வயிற்றுக்கொடுமையாற் கொள்ளையிடத் தூண்டப்படுவர். இன்னுஞ் சிலர் செல்வவந்தராயிருந்தும் பிறர் பொருளைக் கவர நினைப்பர். இவரினும் நாட்டிற்கு வேறு பெரிய வியாதி கிடையாது.

துர்க்குணங்களுக்கே இருப்பிடமாகிய துரியோதனனும் அவனைச் சேர்ந்தோரும் விராட தேசத்திற்கு வந்து அங்கிருந்த பசுக் கூட்டங்களைக் கொள்ளை கொள்ள எண்ணி அவற்றை வளைந்து பிடித்துக்கொண்டார்கள். இங்ஙனம் நிரைகவர்ந்ததைக் கேட்டதும் விராடராஜன் யுத்தசன்னத்தனாய்ப் புறப்பட்டுவந்து பகைவர்களை யெதிர்த்தான். பஞ்சபாண்டவர்கள் அப்பொழுது அஞ்ஞாதவாசஞ்செய்வதற்கு மாறுவேடம் பூண்டு விராடநகரில் தங்கியிருந்தனர். இவர்கள் விராடராஜனுக்குத்தகுந்த உதவிபுரிந்ததனால் துரியோதனன் முறியடிக்கப்பட்டான். கொள்ளையாடவந்த துரியோதனன் முதலியோர் தங்கள் ஆடையாபரணங்களையுங் கொள்ளை கொடுத்து அவமானமுற்று மீண்டனர்.

## 42. கோதாட்டொழி.

குற்றம் பொருந்திய விளையாட்டுக்களை நீக்குவாயாக என்பதிதன் பொருள். சிறு பிள்ளைகள் சிறிய பறவைகளைப்பிடித்துச் சிறைவைத்து உபத்திரவம் செய்வ

துண்டு. அப்படிச் செய்வதுபோற் குற்றம் பொருந்திய காரியம் வேறொன்றில்லை. குளத்திலிருந்த தவளைகளின்மேற் கல்விட்டெறிந்த சிறுவரை நோக்கி அவைகள் "உங்களுக்குக் கொண்டாட்டம் எங்களுக்குத் திண்டாட்டம்" என்று சொல்லின. வயதிற் பெரியரேனும் புத்தியிற் சிறியராயிருக்கும் பலர் கோழிச் சண்டையும் ஆட்டுச் சண்டையும் பார்த்துக் களிக்கின்றனர். இவைகள் ஒன்றுக்கொன்று சண்டைசெய்து குருதிகக்கி இறப்பதில் என்ன விநோதம் இருக்கிறது; உரோமர்கள் க்ஷீணதிசையடையுங் காலத்தில் மனிதர்கள் சிங்கத்தினோடும் புலியினோடுஞ் சண்டை செய்வதைப்பார்க்க மிகவும் திருப்தியடைந்திருந்தனர். இவையெல்லாம் பணச்செருக்காற் சோம்பேறிகளாகிப் பிறர்படுங் கஷ்டத்தையறியாமற் குருடரானமையின் நடந்தன.

ஒரு காலத்தில் காசி ராஜன் அரண்மனையிற் சில கள்வர்கள்புகுந்து ஏராளமான பொருள்களைக் கொள்ளைகொண்டு ஓடிவந்தனர். அது தெரிந்து அரசன் காவலாளர் பின்றொடர்ந்துவரத் திருடர்கள் மாண்டவியரென்னு முனிவ ராச்சிரமத்திற்புகுந்து ஒளிந்துகொண்டனர். தேடிவந்தவர் இவர்கள் இங்கொளிந்திருப்பது தெரிந்து கள்வரையெல்லாம் பிடித்துக்கொண்டதுமல்லாமல் யோகத்திலிருந்த மாண்டவியரையும் பிடித்து அரசன்முன் பாகக் கொணர்ந்துவிட்டனர். அரசன் இவரைப் பாசாங்குசெய்யும் பெரிய திருடனென்று நினைத்துக் கள்வரையும் மாண்டவியரையும் கழுவேற்ற ஆஞ்ஞாபித்தனன். மாண்டவியரும் கள்வரோடு கழுவேற்றப்பட்டனர். சிறிது காலஞ்சென்றபின் மாண்டவியர் யோகங்

தெளிந்து தான் கழுவில் இருக்கும் நிலைமையறிந்து, இப்படிப்பட்ட கஷ்டநிலைமை தனக்குவந்த காரணத்தை ஞானதிருஷ்டியினாலுணர்ந்து பின்வருமாறு சொன்னார் :—“முற்பகல்செய்யிற் பிற்பகல் விளையுமென்பது பொய் போகுமா? நான் சிறுவனாயிருந்தபொழுது தும்பிகளை முட்களிற்கோத்து அவைகள் படும் மரணவேதனையைச்சிறிதுங் கவனிக்காமல், அவைகள் துன்பத்துடன் துடிப்பதை நான் இன்பத்துடன் பார்த்திருந்தேனல்லவா? அதற்கு இதுதான் தக்கதண்டனை.” என்றிவ்விதமாக உண்மையறிந்து தன் மனக்கவலையை நீக்கினர். காசிராஜன் அவர் பெருமையை யறிந்து கழுவினின்றும் அவரை நீக்கினால் அவருக்குத் துன்பமுண்டாகுமென்று மேலுங்கீழும் கழுவை அராவிவிட்டனன். அதுமுதல் முனிவர் ஆணிமாண்டவியரென்னும் பெயர்கொண்டனர்.

## 43. சக்கரநெறிநில்.

அரசனாணைக்குட்பட்டு நடக்கவேண்டுமென்பது இதன்கருத்து. சக்கரமென்பது இங்கு ஆஜ்ஞா சக்கரத்தையுணர்த்திநின்றது. சக்கரநெறி யென்பது அரசாட்சி முறைமையைக் குறிக்கும். அரசன் கடவுளம்சம் பொருந்தியவன். திருமாலெங்ஙனம் காக்குந்தொழிலை மேற்கொண்டிருக்கின்றனரோ அங்ஙனம் அரசனும் செய்கிறான். உலகத்தாருக்குச் சூரிய சந்திரர்கள் எப்படி இன்றியமையாதவரோ அப்படி அரசனின்று உலகம் ஒழுங்காக நடைபெறாது. ஸர்வ இந்திரியங்களுக்கும் பிரதானமான கண்போன்றவ னரசன்.

ஸ்காட்லாண்ட் தேசத்தில் சாந்தகுண பூஷணனான டங்கன் அரசாண்டுவந்தகாலத்தில் ஒருநாள் தன் ராஜ்யத்தில் முக்கிய பிரபுவாகிய மக்பெத்வீட்டிற்கு விருந்தாக வந்திருந்தான். விருந்து சாப்பிட்டுமுடிந்ததும் டங்கன் படுத்துறங்கிவிட்டான். நடுநிசியில் மக்பெத் டங்கன் தூங்கும் அறைக்குள் மெதுவாகவந்து ஓர் ஈட்டியாலவனைக் கொன்றுவிட்டனன். பிறகு அரசாட்சியையுங் கைப்பற்றிக்கொண்டனன். இப்படிக் கொலை செய்து அபகரித்த இராஜ்யாதிகாரம் தன் வம்சத்திலேயே நிலைக்கும்பொருட்டுத் தன் அருமைச் சிநேகிதனான பாங்குவோவையுங் கொலைசெய்தனன். ஆனால் மக்பெத்துக்கு மனவமைதி கொஞ்சமுங்கிடையாது. அவனுக்கு ஒரு ஈட்டியின் தோற்றமும், இறந்த பாங்குவோவின் தோற்றமும் அடிக்கடி கண்ணுக்குத் தென்பட்டு அவனைத் தொந்தரை செய்துவந்தன. மக்பெத் பட்டகஷ்டங்களுக்குக் கணக்கேயில்லை. கொஞ்சகாலங் கழித்தபின் பாங்குவோவின் குமாரனான மால்கோமும், ஸ்காட்லாண்ட் பிரபுவாகிய மாக்டப்பும் படையெடுத்துவந்து பெரும் இராஜத் துரோகியாகிய மாக்பெத்தைத் தோற்கடித்துக் கொன்றனர்.

ஏமாங்கதநாட்டிற் சச்சந்தனென்னு மரசனொருவனிருந்தான். அவனுக்குச் சிற்றின்பவாசை அதிகத்தினால் இராஜாங்க விஷயத்தைக் கவனிக்காமல் எல்லாவற்றையுந் தன் மந்திரியாகிய கட்டியங்காரனிடம் ஒப்புவித்துவிட்டு அந்தப்புரத்திலேயே அநவரதம் சுகித்திருந்தான். இக்கட்டியங்காரன் முதலில் விறகுவெட்டியாயிருந்தனன். அரசன் இவன் புத்தியைமெச்

சித் தன் மந்திரியாக வாக்கிக்கொண்டான். இக் கட்டியங்காரன் மிகவும் நம்பிக்கைத் துரோகி. தன்னைத் தாழ்ந்த நிலைமையினின்றும் உயர்த்திய அரசனுக்கே கேடுசூழ்ந்தான். கட்டியங்காரன் சேனையைத் தன் வசப்படுத்தி அரசனை அந்தப்புரத்தில் வளைந்து கொண்டு அவனைக் கொன்றனன். உடனே கட்டியங்காரன் அரசாட்சியைக் கைப்பற்றிக் கொண்டனன். இவன் பலராலும் கொடுங்கோன் மன்னனென்றிகழப்பட்டான். கட்டியங்காரன் பலவித கஷ்டங்களுமனுபவித்தான். கடைசியிற் சச்சந்தன் குமாரனாகிய ஜீவகனால் அவன் கொலையுண்டான்.

## 44. சான்றோரினத்திரு.

அறிவு மிகுந்த பெரியார்கள் கூட்டத்திலிருக்க வேண்டுமென்று இதனாற் கூறப்பட்டது. பெரியார் கூட்டத்திலிருந்தால் அவருடைய நல்லொழுக்கம் நமக்குண்டாகும். பூவோடுசேர்ந்த நார் மணம் பெறுவது போலச் சான்றோரைச் சேர்ந்தோரும் பெருமையுற்று விளங்குவார்கள். இதுபற்றியே துறக்கம் அதாவது மோக்ஷம் என்பது சாதுக்கள் கூட்டுறவுதான் என்று நம் முன்னோர்கள் கூறியதும். ஞானத்தை யடைந்த பெரியவர்கள் கூட்டத்தால் நாமும் ஞானத்தைப்பெற்று நல் வழிப்படுவோம். வலியவரைச்சேர்ந்த மெலியவர் தம்முடைய மெலிவுநீங்கி வலியபகைவருக்கும் அஞ்சார்கள்; சிவபெருமான் தலையிலணிந்துள்ள சர்ப்பங்கள் கருடனுக்குப் பயப்படமாட்டா. இக்கருத்தைக் கொண்டு தான் பஞ்சதந்திரத்தில் ' கொல்லையிற் குற்றியை யடை

ந்தபுல் உழவருழுபடைக்குக் கெடுமா' என்றும் எழுதப் பெற்றுள்ளது.

முன்னொருகாலத்தில் தேவர்கள் யாவரும் இமயமலையின்மேற் கூடின காரணத்தால் வடதிசை தாழ்ந்து தென்றிசை யுயர்ந்தது. இருபுறமும் சமமாவதற்கு என்ன செய்வதென்று யாவரும் யோசித்தனர். மிகுந்த தவ சிரேஷ்டராகிய அகஸ்தியர் தென்றிசைக்கண் சென்று பொதியமலையில் வீற்றிருந்தால் இரண்டுபக்கமும் சமமாகும் என்று யாவரும் அவரைத் தென்றிசை போகுமாறு வேண்டிக்கொண்டனர். அவருந் தெற்கு நோக்கிப்போந்து பொதியத்தில் வீற்றிருந்தனர். இருபுறமுஞ் சமமாயின. அகஸ்தியர் தந்தனைமையாற் பொதியமலை பெருமையடைந்து விளங்கிற்று.

## 45. சித்திரம்பேசேல்.

வேடிக்கைக்காகப் பிறரைப் பழித்து நகையாடிப் பேசாதே என்பதிதற்குப் பொருளாகும். விநோதப் பேச்சாற் பயனின்றிக் காலங்கழிவதோடு பிறருக்கும் வருத்தமுண்டாகும்.

தருமபுத்திரர் இந்திரப்பிரஸ்தமென்னும் நகரில் அரசாண்டுகொண்டிருந்தபொழுது மயன் என்னும் சிற்பியொருவன் விசித்திரமான அரண்மனையொன்று தருமபுத்திரருக்கு நிருமித்துக் கொடுத்தனன். அதன்கண் வாயிலில்லாவிடத்தில் வாயிலிருப்பதுபோலவும் வாயிலுள்ளவிடம் வாயிலில்லாதது போலவும் தோன்றும்; மேடு பள்ளமாகவும் பள்ளம் மேடாகவும் காணப்படும்; நீர்நிலைபோ லிருப்பது கட்டாந் தரையாகவும் வெறுந்

தரையாயிருப்பது சேற்று நீர் பொருந்திய இடமாகவும் தென்படும்; தம்மிடத்தில் எவரேனுஞ் சார்ந்தால் அவரோடு கிறுகிறென்று சுழலும் இடங்கள் பல இருந்தன; சிம்மாசனங்கள் போட்டிருப்பதுபோற் காணப்படும் இடங்களில் ஒன்றுமேயிரா; வந்தவழி தெரியாமல் மயக்கும் சுற்றிடங்கள் அநேகமிருந்தன; உள்ளே புகுந்தவனைத் திசைதெரியாமல் செய்யும் அறைகள் பல உண்டு; ஒருபுறஞ் செல்லுபவனை மற்றொருபுறம் இழுக்கும் அற்புத சக்தியுடைய தூண்களும் சுவர்களும் பொருந்தின மண்டபங்கள் இருந்தன. சமீபத்திற்றொங்குவனபோற் காணப்பட்டுக் கையை நீட்ட நீட்ட மேலோங்கிச்செல்லும் பழங்களும் பூக்களும் நிறைந்த மரங்களுஞ் செடிகளுமுள்ள சோலைகளும் நந்தவனங்களும் நாற்புறமும் சூழ்ந்திருந்தன. இவைபோன்ற அற்புதங்கள் அந்த மாயமண்டபத்தில் இன்னும் பலவிருந்தன. தருமபுத்திரர் இராஜசூய யாகஞ்செய்த காலத்தில் துரியோதன மகாராஜன் இந்திரப்பிரஸ்தத்திற்கு வந்தான். வந்தவன் தனிபனாய் மாயமண்டபத்தின் அழகைப் பார்க்கப்போனான். வாயிலுள்ள விடத்திற் செல்லாமல் வாயிலிராதவிடத்திற் சென்று முட்டிக்கொண்டான்; பள்ளத்தில் விழுந்தும் மேட்டிவிடறியும் சேற்றிலமிழ்ந்தும் வெறுந்தரையிற் செல்லுங்கால் துணிகளைத் தூக்கிக்கொண்டு நடந்தும் பலவிதமாக வருந்தினான்; ஓரிடத்திற் சென்றதும் அவன் கிறுகிறென்று சுழன்று கீழே விழுந்தான்; மற்றோரிடத்தில் அநேகம் பதுமைகள் அவனைச் சுற்றிச் சுற்றிக் கைகொட்டிக் கூத்தாடின; ஒருபுறத்திற் சென்ற வழிதெரியா

மலும் திசைதெரியாமலும் தவித்தான்; இவ்விதத் துன்பங்களால் மிகவும் களைப்படைந்த துரியோதனன் அங்கிருந்த சிம்மாசனமொன்றில் உட்கார்ந்தான்; அவ்விடம் வெறும் பள்ளமாயிருந்தபடியால் திடீரென்று கீழே விழுந்தான். இவன் பட்டபாடுகளையெல்லாம் மேன்மாடியிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த திரௌபதி நகைபாடித் தன் சேடியரோடு வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்தாள். துரியோதனன் மாயமண்டபத்திற் பட்டதுன்பம் ஒரு பங்காலுல், திரௌபதி நகைத்ததாலவன் அவமானமுற்று வருந்தின துன்பத்தைப் பதின்மடங்காகக் கருதினன். அவள் நகைத்ததை யொருநாளும் அவன் மறக்கவேயில்லை. இதுபற்றியே தீராக் கோபங்கொண்ட துரியோதனன், பாண்டவர்கள் சூதாடித் தோற்றகாலத்தில், திரௌபதியை நடுச்சபைக்கு இழுத்துவந்து துகிலுரிந்து அவமானப்படுத்தினன்.

இனிச்சித்திரம் பேசேல் என்பதற்கு வீட்டிலுள்ள சச்சரவுகளை வெளியிட்டுப் பேசாதே என்று பொருள் கூறுதலுமுண்டு.

## 46. சீர்மைமறவேல்.

சிறப்புள்ள செவ்விதாகிய நல்லொழுக்கத்தினைக் கைவிடாதே என்பதிதன் கருத்து. சீர்மையென்பது, இவ்விடத்தில், தான் பிறர் பால் நடந்துகொள்ளவேண்டிய ஒழுக்க முறைமையைக் குறிக்கும். பெரியாரைக் கண்டபொழுது அவர்களைப்பணிந்து வணங்கிநிற்றலும் அவர்கள் மொழியைக் களிப்புடனேற்று அதன் வழியொழுகலும் தீமையை யொருவர் செய்தகாலத்தும்

அவருக்கு நன்மையே செய்தலும் ஆகிய மரியாதை வழிகளெல்லாம் சீர்மையின்பாற் பட்டனவாம்.

அயோத்தியிலரசாண்ட தசரத சக்கிரவர்த்தி தன் மகன் இராமனுக்குப் பட்டாபிஷேகம்செய்ய எத்தனித்தகாலத்தில் இராமனுடைய மாற்ருந்தாயாகிய கைகேசி இராமனுக்குப் பட்டங்கட்டக் கூடாதென்று தடுத்துத் தன்மகன் பரதனுக்கே பட்டமளிக்கவேண்டுமென்றும் இராமன் காட்டிற்குப் போகவேண்டுமென்றும் தசரதரைக் கட்டாயப்படுத்தினுள். அதனல் மனங்கலங்கித் தசரதர் கைகேசியின் அரண்மனையிலேயே விழுந்துவிட்டார். இராமன் தசரதரைப்பார்க்க அங்கேபோனபொழுது கைகேசியே எதிர்ப்பட்டனள். அப்பொழுது இராமன் மிகுந்த மரியாதையோடு ஒரு கை வஸ்திரத்தை மடக்கியிருக்க மற்ருெரு கையால் வாய்புதைத்துத் தாயைக்கண்டு மனமுருகிக் களிக்கும் சேயைப்போல் முகத்திற் பேரன்பு ததும்ப நின்றனன். கைகேசி இராமனைநோக்கி "இராமா! இந்தக் கடல் சூழ்ந்த பூமி முழுவதையும் பரதனேயாளவும் நீ புழுதி மிகுந்த வெவ்விய காட்டையடைந்து தாழ்ந்துதொங்குஞ் சடைமுடியைத் தரித்து தாங்குதற்கருமையான தவத்தைச் செய்தும் புண்ணிய தீர்த்தங்களிலே நீராடியும் பதினுன்கு வருடகாலம் கழித்து மீண்டுவரும்படியாகவும் தசரத சக்கிரவர்த்தி உத்தரவளித்திருக்கிருர்" என்றனள். இந்த மொழியைக் கேட்டபொழுது இராமனுடைய முகமாகிய தாமரை சீதையை மணம்புரிந்த காலத்தில் அடைந்த பொலிவைக்காட்டிலும் பின்னும் பதின்மடங்கு பிரகாசத்துடன் விளங்கிற்று. இராம

னுடைய சீர்மைக்குணத்தை யெவ்வொருவரும் பின் பற்றியொழுக முயலுவாராக.

## 47. சுளிக்கச் சொல்லேல்.

ஒருவனுடைய மனம் புண்ணுகும்படி வார்த்தையாடேல் என்பதிதன் பொருள். வில்லம்பிற் சொல்லம்பே கொடுமையானது. கொடுமையான வார்த்தை உபயோகித்தால் நம் சிநேகிதனும் பகைவனாக மாறிவிடுவான்.

பாண்டவர்கள் துரியோதனனால் ஏற்படுத்தப்பட்ட சூதாட்டத்தில் தோல்வியடைந்து நாடுநகரங்களையிழந்து பெரியோர்கள் ஏற்பாட்டின்படி பன்னிரண்டு வருடம் வனவாசமும் ஒருவருடம் அஞ்ஞாதவாசமும் முடித்து மீண்டு தமது இராஜ்ஜியத்தைப் பெறுமாறு விரும்பிக் கிருஷ்ணனைத் துரியோதனன்பால் தூதாக அனுப்பினார்கள். பாண்டவசகாயனான கண்ணபிரான் அஸ்தினபுரத்தில் நுழைந்து செல்லுகையிற் பெரியார்கள் பலரும் அவனை எதிர்கொண்டழைத்தனர். கண்ணன் வீதியிற் செல்லும்பொழுது இருபுறத்திலுமுள்ள மாளிகைகளைச்சுட்டி இஃது யாருடையது இஃது யாருடையது என்று ஒவ்வொன்றாகக் கேட்டனன். ஆண்டிருந்தோர் ஒவ்வொருவரும் இஃது என்னுடையது இஃது என்னுடையதென்று முறையே கூறிவந்தார்கள். அந்த வீதியில் துரியோதனன் சிறியதந்தையும் இராஜ்ஜியத்தில் முதன் மந்திரியும் மகாவீரனும் ஞானியுமாகிய விதுரனுடைய வீட்டைக் கண்ணன்கண்டு இஃது யாருடையதென்று கேட்டனன். அதற்கு விதுரன் "சுவாமி,

இவ்வீடு தங்களுடையதே'' என்று விநயமாய் மறு மொழிகூறினுன். கிருஷ்ணன் எனக்கும் அஸ்தினுபுரியில் வீடு இருக்கின்றதே என்றுகூறி மனக்களிப்புடன் தன் பரிவாரங்களோடு தங்கிவிட்டனன். துரியோதனன், கண்ணனுக்காகப் பிரத்தியேகமாக ஏற்படுத்தியுள்ள விடுதியில் அவன் இறங்காமல் விதுரன்வீட்டில் இறங்கினதற்காக அளவிடப்படாத கோபம்கொண்டான்; இதற்கு விதுரனே காரணமென்று அவனைச் சிறிதும் மரியாதையின்றித் தாசிமகனென்றும் வேசிமைந்தனென்றும் வாய்க்கு வந்தபடித் தாறுமாருக வைதனன். விதுரன் மனஞ்சுளித்துத் துரியோதனனை நோக்கி "ஏ! பேதாய்! என்னைவைத உன் நாவையறுத்து உனது தலையையும் நொடியிற் கொய்தெறிவேன். குருகுலத்திற் பிதா புத்திரனைக் கொன்றுன் என்ற பழிச்சொல் உண்டாகாவண்ணம் பொறுத்திருக்கின்றேன். இனி நடக்கும் பாரதப்போரில் உனக்கு நான் உதவிபுரியாதிருக்கும்படி என்கையிலுள்ள அருமையான வில்லையும்வெட்டி யெறிகிறேன்'' என்று சினந்துகூறி மூன்று லோகங்களிலும் நிகரற்றவில்லைத் தன் உடைவாளால் வெட்டி யெறிந்தான்.

## 48. சூது விரும்பேல்.

சூதாடக்கூடாதென்பதிதன் பொருள். சூதாடுபவர்கள் தம் பொருளெலாமிழந்து வறியராய் விடுவார். தரும புத்திரர் சூதாடினதனுலல்லவோ நாடு, நகர், முதலியவற்றையிழந்து காடுசென்று பன்னிரண்டு வருஷகாலம் வசிக்கநேர்ந்தது. சூதினுல் வருங்கேடுகள் பல. சூது

தரித்திரத்திற்கமைந்த தூது ; பொய்யினுக் கருந்துணே; புன்மைக்கின்றதாய் ; சத்தியத்திற்கு ஜன்மப்பகை. இதனைப் பெரியோர் கனவிலு நினையார்.

நிடததேசத்தில் நளனென்ற பெயருடைய அரசனொருவனிருந்தான். ஒருநாளவனுடன் புட்கரன் என்பவன் சூதாடவந்தான். நளனுடைய அமைச்சர்களெல்லாரும் சூது மிகவுங் கெடுதியை விளைவிக்குமென்று பலதரம் நளனைச் சூதாடாமற் றடுத்துங் கேளானுபவன் சூதாடினுன். கடைசியில் நாடு நகர முதலியவற்றையெல்லாமிழந்தான். புட்கர னரசாட்சியைக் கைப்பற்றிக்கொண்டு நள்னையும் அவன் மனைவி மக்களையும் சிறிது மிரக்கமின்றிக் காட்டிற் றுரத்திவிட்டனன். நளன் குழந்தைகளைவிட்டுப் பிரிந்து தன் மனைவி தமயந்தியோடு நெடுங்காலம் காட்டிலலைந்து படாதபாடெல்லாமனுபவித்தான். கட்டிக்கொண்டிருந்த ஆடையையுமிழந்து மனைவி வஸ்திரத்திற் பாதி அரிந்து கட்டிக்கொண்டிருந்தவன் நள்ளிருளில் ஒரு பாழ் மண்டபத்தில் அவளைத்தனியே அலையும்படி விட்டு விட்டு ஓடிப்போயினன். போம்வழியில் ஒரு பாம்பினுற் கடிக்கப்பெற்றுத் தன் சுயரூபம்மாறித் தன்னினு மிகவுந்தாழ்ந்த ஒரு சிற்றரசனிடந் தேர்ப்பாகனுகவும் சமையற்காரனுகவும் அமர்ந்தான். தனக்கு நிகரில்லாத நளமகாசக்கிரவர்த்தி இப்படிப்பட்ட இழிவான நிலைமைக்கு வந்தது சூதாட்டத்தினுலேதான்.

## 49. செய்வன திருந்தச்செய்.

ஆரம்பித்த காரியத்தை முடிவுவரைக்கும் திருந்தமாய்ச்செய்தல் வேண்டுமென்பது இதன்பொருள். ஒரு

காரியத்திற் பிரவேசிக்குமுன்னமே தீர்க்காலோசனை செய்யவேண்டுமேயல்லாது, காரியத்திற் பிரவேசித்த பின் யோசிக்கலாமென்பது மிகவும் பிசகு. ஒரு காரியத்தை நன்காராய்ந்தாரம்பித்துச் செவ்விதே முடிப்பது ஆயிரங் காரியங்களை ஆரம்பித்து ஒன்றையு முடிக்காதிருப்பதிலும் மேல். சிலர் ஊக்கக்குறைவினாற் காரியத்தை நடுவிற் கைசோர விட்டுவிடுவார்கள். அங்ஙனஞ் செய்வதாற் பொருள் நஷ்டமாவதோடுகூடக் காரியமும் முடிவுபெறாது.

பாடலீபுரத்தில நந்தனென்னுமரச னொருவனிருந்தான். அவனுக்கு சுனந்தையென்றும் முராவென்று மிரண்டு மனைவிகள் உண்டு. அவர்களுள் சுனந்தைக்கு ஒன்பது புத்திரர்கள். அவர்களை நவநந்தனர் என்று சொல்வது வழக்கம். முராவிற்கு எல்லாவித சாமர்த்தியமும் வாய்ந்த மௌரியனென்ற குமாரனிருந்தான். இந்த மௌரியனுக்கு நூறு பிள்ளைகள். அவர்களில் யாவரிலும் இளையவன் சந்திரகுப்தன். சந்திரகுப்தனும் அவன் தமயன்மார்களும் நவநந்தனர்களைக் காட்டிலும் மிக்கெட்டிக்காரர்கள். ஆகையாற் பொறாமைகொண்டு ஒரு குகையில் இந்த நூற்றுவர்க்கும் விருந்திடுவதாக அழைத்துக்கொண்டுபோய் விட்டுவிட்டு அவர்கள் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது நவநந்தனர்கள் வெளியேவந்து குகையை மூடிவிட்டனர். சந்திரகுப்தனொழிந்த மற்ற தொண்ணூற்றொன்பதின்மரும் தங்கள் ஆகாரத்தையும் அவனுக்கே வைத்துவிட்டு இறந்துபோக அந்த நூறு பேருக்குமிருந்த ஆகாரத்தைச் சந்திரகுப்தன் நூறு நாளாகச் சாப்பிட்டுப் பிழைத்தி

ருந்தான். நூற்றுவர் யாவரு மிறந்துபோயிருப்பரென்று நினைத்த நவநந்தனர் குகையைத்திறக்கச் சந்திரகுப்தன் மாத்திரம் உயிருடன் வெளியேவந்தான். சந்திரகுப்தன் தன் தமயன்மார்களைக்கொன்ற நவநந்தனர்களைக் கொல்ல வழிபார்த்திருந்தான்.

இஃது இப்படியிருக்க, ஒரு நாள் சாணக்கியனென்ற பெயருடைய ஒரு சோழியப்பிராமணன் ஸ்நாநஞ் செய்து கெண்டியிற் றண்ணீர் எடுத்து வந்துகொண் டிருந்தனன். வழியிலொரு அறுகங்கட்டை காலிற் றடுக்கிற்று. சாணக்கியன் உடனே அவ்விடத்திலுட் கார்ந்துகொண்டு கெண்டியிலிருந்த தண்ணீரைத் தரையில்விட்டு அந்த அறுகங்கட்டையை ஆணிவேர் சல்லி வேரோடுபிடுங்கி எடுத்துச் சாம்பலாக்கி மிகுந்திருந்த கெண்டி தீர்த்தத்தில் கரைத்துக் குடித்துவிட்டான். இதைப்பார்த்த சந்திரகுப்தன் "இவன்தான் நமக்குத் தகுந்தகுரு. காலிற்றடுக்கிய அறுகங்கட்டையை மூலத்தோடு சாம்பலாக்கிக் குடித்தவனுடைய உதவி நமக்கிருந்தால் நவநந்தனர்களைச் சீக்கிரம் தொலைத்துவிடலா" மென்று நினைத்தான்; உடனே சந்திரகுப்தன் சென்று சாணக்கியனை வணங்கித் தான் நவநந்தனர்களாற் பட்ட கஷ்டத்தையெல்லாம் சொல்லி முறையிட்டுக்கொண்டனன். சாணக்கியனும் நந்தனர்களைக்கொன்று நந்தவம்சராஜனுக்குவதாக வாக்களித்தான். அன்றையதினம் நந்தனர்கள் பெரிய விருந்து ஒன்று செய்யச் சந்திரகுப்தன் சாணக்கியனை அங்கே அழைத்துச்சென்று இராஜாக்களுக்கென்று போடப்பட்டிருந்த இலைகளிலொன்றில் உட்காரவைத்தனன். யாரோ வொருபிராமணன்

அங்குட்கார்ந்திருப்பதைப் பார்த்த நவநந்தனர் யோசியாமற் சாணக்கியனை எழுந்திருக்க உத்திரவுசெய்தும், அவன் எழாமையைக்கண்டு அவனைப் பலாத்காரமாய்ப் பிடித்துத் தள்ளிவிட்டார்கள். சாணக்கியன் அதனல் மிக்க கோபங்கொண்டு தன் முன் குடுமியைத்தட்டி அவிழ்த்துவிட்டு இந்த நந்தவம்சத்தை மூலஷோஹானி செய்தாலன்றி முடிப்பதில்லையென்று பலருமறியச் சபதஞ்செய்து ஊரைவிட்டுப் போயினன். சந்திரகுப்தனும் சாணக்கியனேடுபோய்ச் சேர்ந்தனன். பிறகு சாணக்கியன் தன்னுடைய அற்புத தந்திரத்தினல் நந்தவம்ச முழுவதையும் நாசமாக்கிச் சந்திரகுப்தனுக்கு முடி சூட்டுவித்தான். நந்தனர்களின் மந்திரியாகிய இராக்ஷஸனையும் சந்திரகுப்தனுக்கு மந்திரியாக்கிவைத்தான்.

யாகஞ்செய்யுங் காலத்தில் திரிமூர்த்திகளும் அருள் செய்யவேண்டுமென்றறிந்து இருந்தும் தக்கன் தான் செய்தவேள்வியிற் சிவபெருமானை யொழித்ததனல் யாகத்தைத் திருந்தச்செய்யாத குற்றமடைந்து யாகமுங்கெட்டுத் தன் தலையையுமிழந்தான்.

## 50. சேரிடமறிந்து சேர்.

ஒருவனுக்காக வேண்டியகாரியங்களினிது முடிதற்பொருட்டுத் தகுந்தவரிடத்துச் சேர்தல் வேண்டுமென்பதிதன் பொருள். முன் கதையில் சந்திரகுப்தன் எப்படி நந்தவமிசத்தையழிக்கச் சாணக்கியனுடைய உதவியை விரும்பிச் சேர்ந்தனனே அப்படியே காரியத்தின்மேற் கண்ணுள்ளவர் சேரிடமறிந்து சேரவேண்டும். பதினறு வயதிலிறக்கவேண்டிய மார்க்கண்டேயன் இம்

மை மறுமைக்கு மெய்த்துணையாகிய சிவனடியைச்சேர்ந்து என்றும் பதினறு வயதுடையவனுய்ச் சிரஞ்சீவியாயினன். விபீஷணனும் சுக்கிரீவனும் சேரிடமறிந்து சேரவேண்டுமென்றே இராமனேடு நட்புக்கொண்டனர். சேரத்தகாத அற்பர்களுடன் சேர்ந்தால் தீமையே உண்டாகும்; காரியமுமினிது முடியாது.

தற்செயலாய் இரண்டு பூனைகளுக்கு ஒரு பாற்கட்டியகப்பட்டது. அதைச்சமமாய்ப் பங்கிட்டுக்கொள்வதில் இரண்டினுக்குஞ் சண்டையுண்டாயிற்று. தங்கள் வழக்கை அங்கிருந்த ஒருகுரங்கினிடத்திற்சொல்லிமுறையிட்டுக்கொண்டன. குரங்கு அந்தப் பாற்கட்டியை நியாயமாய்ப் பங்கிட்டுக்கொடுப்பதுபோல் ஒரு தராசினை வைத்துக்கொண்டு பாற்கட்டியை யிரண்டு பங்காக்கித் தட்டில்வைத்து நிறுத்துப்பார்த்ததில் ஒரு துண்டு பெரிதாயிருந்தது. உடனே யோசனை சிறிதுமில்லாமல் பெரிய துண்டிலிருந்து கொஞ்சங்கடித்துத்தின்றுவிட்டது. பிறகு இரண்டு துண்டுகளையும் அக்குரங்கு தூக்கிப்பார்த்ததில் இப்பொழுது மற்றைய துண்டு பெரிதாய்விட அதையுங்கடித்துவிட்டது. இங்ஙனம் மாறிமாறி அந்தத் துண்டுகளைக் கடித்துத்தின்றது. கடைசியிற் சிறிய பாற்கட்டியொன்றுதான் பாக்கியிருப்பதைப் பார்த்த பூனைகள் தமக்கொன்றுங் கிடையாமற் போய்விடுமென்று பயந்து 'அதையாவது கொடுத்துவிடு' என்று குரங்கை யிரந்துகேட்டுக்கொண்டன. குரங்கு அதற்கு "இத்தனைநேரம் வழக்குத்தீர்த்த எனக்குக்கூலி கொஞ்சமுமில்லாமற் போவேனு" என்று சொல்லி அதையும்

விழுங்கிவிட்டுப் போய்விட்டது. ஏழைப்பூனைகள் தமக்கொன்றுமில்லாமலே யேமாந்துபோயின.

## 51. சையெனத்திரியேல்.

பலரும் இகழ்ந்து அருவருக்கத்தக்கவழியில் நடக்காதே என்பதிதன் பொருளாகும்.

அத்திரியென்ற பெயருடைய அந்தணன் ஒருவன் இருந்தான். அவன் நெடுநாள் புதல்வனின்றி வருந்திக் கடவுளருளால் ஒரு புதல்வனைப் பெற்றான். அக்குழந்தைக்கு ஆத்திரேயனென்று பெயரிட்டுவளர்த்து உரிய பருவத்திற் சௌளம் உபநயனம் முதலியனசெய்து வித்தியாரம்பமும் செய்தனர். ஆத்திரேயன் குலத்தைக் கெடுக்கப்பிறந்த கோடாலிக்காம்பென்ன வளர்ந்தான். புல்லுருவி மரத்திற்பிறந்து மரத்தில்வளர்ந்து மரத்தையே கெடுப்பதுபோல ஆத்திரேயன் தான் பிறந்த குலத்தினைக் கெடுக்கவந்தவனுபினன். பிராமணர்களுக்குரிய சந்தியாவந்தனத்தை முற்றிலும்மறந்து ஒழுக்கந்தவறிப் பலரும் பழிக்க வளர்ந்தான். புலாலுண்ணுதலும் கட்குடித்தலும் அவனுக்குச் சகஜமான தொழில். இழிகுலமாக்களும் தீயோர்களுமே அவனுக்கு உரியநண்பர்கள். வேதவிதிப்படிப் பார்ப்பன மங்கையை மணம்புரியாமல், அவன் பொதுச்சேரியிலுள்ள பரத்தையர்களையே தெய்வமெனக்கருதி அவர்களோடு வதிவானுபினன். மாதாபிதாக்கள் சொல்வழிகேளாத துன்மார்க்கனுகிய அவன் பலராலுமிகழப்பட்டுத் தீயனென வெறுக்கப்பட்டனன். கண்டோர் யாவரும் சீயென இகழநடந்த அவனைப் பொதுமாதரும் வெறுத்

துத் தள்ளினார்கள். அவன் ஊர்கள்தோறும் அலைந்து எவரும் செய்யாத பாவச்செயல்களை மனங்கூசாமற் செய்து மகா ரோகமடைந்தவனாய்க் கண்டோர் அருவருக்க உயிரைச்சுமந்து தன் காலத்தைக் கழித்தான். இவனைப்போல நடக்க எவரேனும் விரும்புவார்களோ?

## 52. சோற்சோர்வுபடேல்.

சோல்லினிடத்துச் சோர்வுண்டாக நடவாதே என்பதிதன்பொருள். சொல்லினிடத்துண்டாகும் குற்றம் நான்கெனப் பெரியோர் சொல்லுவார்கள்; அவை பொய், கோட்சொல்லுதல், கடுமொழிகூறல், பயனில்லாத சொற்களைப்பேசுதல் என்பவையாம். இங்கே சொல்லப்பெற்ற சொற்சோர்வுயாதெனில் சொன்ன சொல்மாறுதலாம். சொன்னவார்த்தை தவறுதல் மிகப் பெரியகுற்றம்.

பாஞ்சாலராஜனாகிய துருபதன் தன்னுடைய வாலிபத்தில் துரோணரோடு அக்கினிகோத்திர முனிவரிடம் தனுர்வேதங் கற்றுவந்தனன். அக்காலத்தில் துருபதனுக்கும் துரோணர்க்கும் மிக்க நட்புண்டாயிற்று. துரோணர் மிகவும் அருமையான வில்வித்தை யுணர்ந்தவராயிருப்பதை யறிந்த துருபதன் அவரை நோக்கி "துரோணரே! நீர் அருமையாயறிந்துள்ள தனுர்வேத ரகஸ்யங்களை எனக்குத் தெரியப்படுத்தினால் உம்மை எக்காலத்திலும் மறவேன். என்பிதாவிற்குப் பிற்காலம் பாஞ்சால ராஜ்யம் என்கைக்கு வந்தவுடன் உமக்குப் பாதிதேசமும் தருகிறேன். அருள்செய்யவேண்டும்" என்று மிகவும் இரந்து வேண்டினன். துரோணரும்

அரசனுடைய தயவு எக்காலத்தும் பயன்படுமென்றெண்ணித் தான் அறிந்துள்ள அரிய வித்தைகளையெல்லாம் அவனுக்குப் போதித்தனர். சின்னாட்கழித்துத் துருபதனும் துரோணரும் அக்கினிவேசத்திர முனிவரிடம் விடைபெற்றுத் தத்தம் இருப்பிடம் சென்றனர். பிறகு துரோணர் கிருபி என்னும் பெண்ணைமணந்து ஈசனருளால் ஒரு புதல்வனைப்பெற்று அவனுக்கு அசுவத்தாமா என்று பெயரிட்டு வளர்த்து வந்தனர். அந்தக் குழந்தைக்குப் பால்கொடுத்தற்பொருட்டு பசுவொன்று சம்பாதிக்கவேண்டுமென் றெண்ணங்கொண்ட துரோணர் அப்பொழுது பாஞ்சால தேசாதிபதியான துருபதனிடஞ் சென்றனர். துருபதன் அவரைக்கண்டதும் அவர் பாதிதேசம் பங்குகேட்க வந்துள்ளார் என்று கருதி அதனைக்கொடுக்க மனமில்லாதவனாகையால் அவரைத் தெரியாதவன்போற் சும்மா இருந்துவிட்டான். துரோணர், நெடுநாளாய் விட்டபடியால் தன்னை யரசன் அறிந்துகொள்ள வில்லையென்று கருதித் துருபதனை நோக்கி "துருபதா! என்னை மறந்துவிட்டனையோ? என் வில்வித்தையின் அருமையான இரகசியங்களை உனக்குக் கற்றுக்கொடுத்தேனே. அதற்காக எனக்குப் பாதிதேசமு மளிப்பதாக வாக்குக்கொடுத்தனையே; துரோணரை மறந்துவிட்டாய்போலும்" என்றனர். இதுகேட்ட பாஞ்சாலன் அவரை இகழ்ந்து நகையாடி "ஐயா! நீர் முதலில் ஏழைப்பிராமணன் என்று வந்தீர். பிறகு எனக்குக் குருஎன்கிறீர்; அதற்குமேலும் பாதிதேசம்தாஎன்கிறீர். உமக்குப் பைத்தியம் பிடித்ததோ? உம்மை யானறியேன். போம் போம்" என்

றனன். துரோணர் அதிகோபங்கொண்டு அவனைப் பார்த்து "அடே அகங்காரமுள்ள பாஞ்சாலா, என்னைப் பலர்கூடிய சபைநடுவே நிந்தித்ததுமன்றிச் சொற்சோர்வும் பட்டனை. உன்னைப்போன்ற இராஜகுமாரர்களுக்கு வில்வித்தை கற்றுக்கொடுத்து அவர்களைக் கொண்டு உன்னைத் தேர்க்காலிற்கட்டி என்முன் கொண்டுவரச்செய்து அவமானப் படுத்துகிறேன் பார்" என்று சபதஞ்செய்து பாஞ்சாலதேசத்தைவிட்டு மனைவி மகவுடன் அக்ஷணமே புறப்பட்டு அஸ்தினபுரமடைந்து துரியோதனனாதிய கௌரவர் நூற்றுவருக்கும் பாண்டவர்கள் ஐவருக்கும் தநுர்வித்தையைக் கற்பித்துத் தநுர்வேத வீரசிகாமணியான அர்ச்சுனனைக்கொண்டு துருபதனைத் தேர்க்காலிற் கட்டிவரச்செய்து அவமானப்படுத்தினர்.

## 53. சோம்பித்திரியேல்.

சோம்பேறியாயிருக்கக்கூடாது என்பதிதன் கருத்து. சோம்பரென்பவர் தேம்பித்திரிவர்; ஆகையாற் சோம்பலுக்கிடங்கொடுக்கக்கூடாது. புத்திசாலிகளும் சோம்பேறிகளாய்விட்டால் ஒன்றுக்கும் உதவார்கள். சோம்பலுடையவனுக்குக் கடவுளும் அருள் செய்யார்.

தனபாலனென்ற செட்டி யொருவனிருந்தான். அவன் தானிறக்குஞ் சமயத்தில் தன்புதல்வர்கள் மூவரையுமழைத்துத் தலைக்கு ஐஞ்ஞூறு வராகன் கொடுத்து அதைக்கொண்டு சோம்பலில்லாமல் நல்வழியிற் பொருள் தேடிக்கொள்ள ஆஜ்ஞாபித்து வையக வாழ்க்கையை விட்டனன். கடைசிப் புத்திரனாகிய குணபத்திரனொருவனுமே பிதாவின் சொற்படிச் சோம்பலின்

றித் தொழில்புரிந்து தன் கைப்பொருளை மேன்மேல் வளர்த்தனன். மற்ற இருவர்களும் சோம்பேறிகளா ய்த் தொழிலொன்றும் புரியாமற் கைப்பொருளைக் கண்டவழியிற் செலவிட்டு உண்ண உடுக்க விதியற்ற ஏழைகளானார்கள். ஒருநாள் குணபத்திரன் அவர்க ளிருவரையும் தற்செயலாய் எதிர்ப்பட்டு அவர்களைத் தம் முன்னோரென்றறிந்து உபசரித்து வீட்டிற்கழை த்துவந்து ஆடையாபரணங்கள் கொடுத்து நல்ல உண வளித்ததுமன்றித் தன் கைப்பொருளிலிருந்து தலைக்கு ஐஞ்ஞூறு வராகன் கொடுத்து வியாபாரஞ் செய்யச் சொல்லினான். மூத்தவர்களிருவரும் முன்போற் சோம் பேறிகளாய் ஒரு தொழிலுஞ் செய்யாமற் கைப்பொரு ளைத் தொலைத்துவிட்டுப் பஞ்சைகளாய் மறுபடியும் குண பத்திரனிடம் வந்துசேர்ந்தார்கள். குணபத்திரன் அவர் களை உபசரித்துத் தன்வீட்டிலேயே வைத்துக் காப்பா ற்றிவந்தனன். ஒருநாள் குணபத்திரன் தன் தமயன் மாருடன் அளவிறந்த பண்டங்களைக் கப்பலிலேற்றிக் கொண்டு தீவங்கள்தோறும் வியாபாரஞ் செய்யப்போயி னன். நற்குண நற்செய்கைகள் உடையவனும் வியா பார முறைமையை நன்கறிந்தவனும் ஊக்கமுடைய வனுமிருந்தமையாற் குணபத்திரன் அளவில்லாத லாபமடைந்தான். மேலும் இவன் இரத்தினதீவம் என்ற பெயருடைய தீவினையடைந்து வியாபாரஞ் செய்கையில் இவனுடைய பெருந்தன்மைக்கும் அறி விற்கும் வியந்து பாராட்டி அத்தீவத்தை யாளுமன் னன் தன்னுடைய மகளை இவனுக்கு மணம் புரிவித் தான். சிலநாள் இவன் அத்தீவத்திற் றங்கியிருந்து

பிறகு அளவிறந்த செல்வத்தோடும் அழகுமிக்க அரசன் மகளோடும் கப்பலேறித் தன்னூர்க்குப் புறப்பட்டனன். சோம்பேறிகளாகிய இவன் மூத்தோரிருவரும் குணபத்திரனுக் குண்டாகிய பாக்கியத்தைக் கண்டு பொறாமைகொண்டு அவனுக்குத் தீங்கிழைக்கவுந்துணிந்தனர். ஒருநாள் கப்பல் நடுக்கடலிற் போகுஞ் சமயத்தில் அவர்களிருவரும் குணபத்திரனைக் கடலிற் றாக்கிப் போட்டுவிட்டனர். குணபத்திரனோ தெய்வகதியா யங்கு நீந்திக்கொண்டிருந்த ஒரு பெரிய மகரமீன் முதுகில் விழுந்தனன். மகரமீனவனைச் சுமந்து சென்று ஒரு தீவின்கரையிற் சேர்த்தது. அவ்வழியாகச்சென்ற கப்பலொன்றிற் குணபத்திரனேறித் தன்னூர்சென்று சேர்ந்தான். சோம்பேறிகளிருவரும் குணபத்திரனிறந்தானென்று கருதி அரசன் மகளையடைய விரும்பி யொருவரோடொருவர் சண்டையிட்டு கப்பலிலேயே வாளாயுதங்களைக் கைக்கொண்டு வெட்டியுங் குத்தியும் போர்செய்தனர். ஒவ்வொருவன் கத்தியும் மற்றொருவன் முகத்திற் றாக்கினமையால் இருவருங் குருடராயினர். அரசன் மகள் தன் கணவனிறந்ததாகக் கருதி மிகவருந்தியவளாயினும் கப்பலைத் தன் கணவனூருக்குக் கொண்டுபோய்ச் சேர்த்துக் கரையிலிறங்குகையில் அங்கே அப்பொழுது வந்துசேர்ந்த குணபத்திரனைக்கண்டு கரையிலாக் களிப்படைந்தனள். குணபத்திரனும் மனமகிழ்ந்து தன் மனைவியைத் தனது வீட்டிற்கு அழைத்துச்சென்று சுகமாய் வாழ்ந்திருந்தனன். சோம்பேறிகள் இருவரும் ஆயுள்முழுவதும் குருடராய்ப் பிச்சையெடுத்துத் திரிந்தனர்.

## 54. தக்கோனெனத்திரி.

நல்லோனென்று யாவராலுஞ் சொல்லத் தகுந்தவனாய் நடப்பாயாக என்பது இதன் பொருளாகும். இனி, இதற்குச் செய்வதற்கரியவற்றைச் செய்யவல்லவன் என்று யாவரும் பெருமையாகக் கொண்டாட நடப்பாயாக என்று பொருள் கூறுதலுமாம்.

தசரத குமாரனாகிய இராமன் உலகத்தில் துஷ்டர்களைச் சங்கரித்துச் சிஷ்டர்களைப் பரிபாலனஞ்செய்து அதருமத்தை யோட்டித் தருமத்தை நிலைநாட்டி யாவர்க்கும் நல்லவனாக விளங்கினான். இராமன் வில்வித்தை கற்கும் இளைஞனாயிருக்கும்பொழுதே தாடகையாதிய தீயர்களைக்கொன்று தன்னுடைய யாகத்தைக் காப்பாற்றத்தக்கவன் என்று கருதி விசுவாமித்திரர் தசரதரிடம் விடைபெற்று இராமனைக் கூட்டிச்சென்றனர்; அவனே யருமையான வேதசாஸ்திரங்களை யுணரத் தக்கவன் என்றுஎண்ணி அருமறைகளையும் போதித்தனர். சூரியகுல மன்னருக்குக் குலகுருவாகிய வசிஷ்டரும் ஞானநூல்களை யறியத்தக்கவன் இராமனேயென்று ஞானவாசிஷ்ட உபதேசம் செய்தனர். இராமனே சிவதனுசை யொடிக்கத்தக்கவன் என்று கருதியே விசுவாமித்திரர் அவனை மிதிலைக்கு அழைத்துச் சென்றனர். சீதையும் அவனே தனக்கு தலைவனாகத்தக்கவன் என்று அவன்பால் அடங்காப்பெருங்காதல் கொண்டனள். பெரியோர்கள் யாவரும் தசரதனுக்குப் பிறகு இராமனே அரசாளத்தக்கவன் என்று அவனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய முடிவு செய்தனர். கைகேசியும் இராமனே இன்பதுன்பங்களை ஒருபடித்தாக எண்ணி

எத்தகைய இடர்வரினும் சித்தங்கலங்காதிருக்கத்தக்க வன் என்பதுலகத்தாரறியக்கருதியே அவனைக் காட்டிற்கு அனுப்பினள்போலும். அகஸ்தியர் முதலாகிய முனிவரர்களும் தவச்செல்வர்களும் இராமனே இராவணாதியர்களை வதம் செய்யத்தக்கவன் என்று நினைத்துப் பல அஸ்திர சஸ்திரங்களும் வரமுங்கொடுத்தனர். தனக்கு உடன்பிறந்தானா யிருக்கத்தக்கவன் இராமனேயென்று குகப்பெருமானு மவன்பாற் றோழமை பூண்டனன். சுக்கிரீவனும் தனக்கு நண்பனாய் வாலிவதஞ் செய்யத்தக்கவன் இராமனேயென்று கருதி நட்புக்கொண்டனன். நவவியாகரணமறிந்த சகல சாஸ்திர சம்பன்னனான அநுமான் இராமனே தன்னை யாளத் தக்கவன் என்று கருதி யவன்பாற் றொண்டுபூண்டனன். இராவணன் தம்பியாகிய விபீஷணனும் இராமனே தன்னாற் சரணமடையத்தக்கவனென்று நினைத்து அவனைச் சரணாகதியடைந்தான். யாவராலும் தக்கோனெனக் கருதப்பெற்றவன் இராமனே.

## 55. தானமது விரும்பு.

எப்பொழுதுந் தானஞ்செய்வதற்கு விரும்புவாயாக என்பதிதன்பொருள். இம்மையிற்செய்த தருமம் மறுமையிற் பயன்படுவதுண்மையாயினும் அதனையுங் கருதாது தானஞ்செய்வதேமேல். சமயம் வாய்த்த காலத்திலெல்லாம் தானஞ்செய்தவன் கர்ணனொருவனே.

அருச்சுனன்விட்ட அம்புகளாலடியுண்டு மூர்ச்சித்து விழுந்துகிடக்குங் கர்ணனிடத்திற் கண்ணன் ஒரு பார்ப்

பனன்போல்வந்து அவன்செய்த தருமத்தின் பயனை யெல்லாந் தானஞ்செய்யக் கேட்டனன். இறக்குந்தறு வாயிலுந் தானஞ்செய்யச் சமயம் வாய்த்ததைப்பற்றி மனமகிழ்ந்து தான்செய்த தானத்தின் பலனையெல்லாங் கொடுத்ததோடு, அப்படித் தானஞ்செய்ததனு லுண்டா கும் பலனையுஞ் சேர்த்துக்கொடுத்தான்.

## 56. திருமாலுக் கடிமைசெய்.

காக்குங் கடவுளாகிய மகாவிஷ்ணுவிற்குத் தொண்டு பூண்டொழுகவேண்டு மென்பதிதன் கருத்து.

துருவன் சிறு குழந்தையாயிருக்கும்பொழுது தன் தகப்பன் மடியிலேறியுட்கார முயல அவன் மாற்றாந் தாய் தடுத்தாள். அதைப்பார்த்து துருவன் மிகவும் மனம்புழுங்கி, எல்லாவற்றிலும் மேலான பதவியடைய வேண்டுமென்ற எண்ணத்துடன் காட்டிற்குத் தவஞ் செய்யச் சென்றனன்; திருமாலின் திவ்ய சரணமே கதியென்று அருந்தவமியற்றினன். ஸப்தரிஷிகளும் தேவேந்திரனும் இப்பாலகனருந்தவத்தைப் பரீக்ஷிக்க வந்து அவன் மனத்தைக் கலைக்கப் பலவாறு முயன் றனர். அவனுருவிற் பாலகனுயிருப்பினும் புத்தியில் மிகவு முதிர்ந்தவனுகையால் அவன்மனஞ் சிறிதுங்கல ங்கவில்லை. இவ்வித மேகசித்தனுய்த் தவஞ்செய்யுந் துருவனுடைய மனோதிடத்தைக்கண்டு திருமால் விய ந்து சங்குசக்கிர பாணியனுய் விசுவரூப தரிசனங்காட்டி வேண்டியவரமளித்து, எவருமடைய முடியாத உயர்ந்த நிலையிலிருத்தினர். இவனே சிம்சுமார சக்கிரத்தில் நடு நாயகமாயிருந்து எல்லாக்கிரகங்களுந் தன்னைச்சுற்றி வரும் பாக்கியமடைந்தனன்.

## 57. தீவினையகற்று.

கெட்ட செயல்களைச் செய்யா தகற்றவேண்டுமென் பதிதன்பொருள். தீய செய்கைகளைச் செய்பவருக்குச் சில சமயங்களில் நன்மையுண்டாவதுபோல முதலிற் காணப்படினும் முடிவிலே தீமையே உண்டாகும் என்பது நிச்சயம். காட்டுப்பசு ஒருவனை மேலே நக்கினல் முதலில் அவனுக்குச் சுகமாயிருக்கும்; ஆயினும் பிறகு ஆராயுமிடத்தில் அப்பசு நக்கி நக்கி அவனுடம்பில் உள்ள இரத்தத்தை இழுத்துவிடுவதால் அவனுக்கு மரணமுண்டாகும்; தீவினையால் நன்மையடைந்தா ரெவருமில்லை.

வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்ற பெயருடைய மூன்று அசுரர்கள் சிவபெருமானை நோக்கி நெடுங்காலந் தவஞ்செய்து அளவில்லாத வரங்களைப் பெற்று மிகப்பராக்கிரமசாலிகளாய்ச் செருக்குற்று வாழ்ந்தனர். மேலும் கடவுளருளால் பொன் வெள்ளி இரும்பினல் இயன்ற மூன்று மதில்கள் சூழ்ந்த மூன்று நகரங்களைப் பெற்றனர்; அவை பறக்குஞ் சக்தியுடையவை. மூன்று அசுரர்களும் தங்கள் பரிவாரங்களோடு பறந்துசெல்லும் திரிபுரத்தின் உதவியால் எங்கும் பறந்துசென்று யாவருக்கும் துன்பமியற்றி வந்தனர்; அவர்கள் பட்டணத்தோடு பறந்துவந்து ஒரு நகரத்தின் மேலிறங்கி அதனை யடியோடழிப்பது வழக்கம். மூன்று லோகத்திலுள்ளவர்களும் திரிபுரத்தைக்கண்டால் நடுங்குவார்கள். அளவுகடந்த தீங்கினையியற்றும் இந்த அசுரர் மூவரும் தங்களுக்குக்கிடைத்த பாக்கியம் முழு

வதும் சிவபெருமானாலே யென்பதையும் மறந்து அக் கடவுளையும் நிந்தித்து அகங்காரங்கொண்டு திரிந்தனர். முடிவிற் சிவபெருமான் அவ்வசுரர்களைத் தமது புன்னகையாற் பட்டணத்தோடு எரித்தழித்தனர்.

## 58. துன்பத்திற் கிடங்கோடேல்.

துன்பம் ஒரு நோயாதலின் அதற்கு இடங்கொடுக்கக்கூடாது. துன்பத்திற் கிடங்கொடுத்தால் அது மேன்மேல் வளர்ந்து, களை மண்டிப் பயிரை யழிப்பது போலச் சேர்ந்தாரைக்கொல்லுந் தன்மையுடையது.

சீதையினுடைய பேரழகைச் சூர்ப்பநகையிடங்கேட்ட இராவணன் அவளை யடைய விரும்பி மகாமாயாவியான மாரீசனையடைந்து சீதையைத் தான் கவருவதற்குவேண்டிய உதவிசெய்யக் கேட்டனன். மாரீசன் இராவணனைநோக்கி "அரக்கர் தலைவனே! இராமனைச் சாமானியனாக நினையாதே. அவனை வெல்பவர் மூவுலகத்திலுமில்லை. மேலும் ஒருவனுடைய தாரத்தைக் கவர்ந்தால் உன்னைத் தருமதேவதை சின்னபின்னமாகச் சேதிக்கும். ஆதலால் இத்தொழிலிற் பிரவேசித்தாற் பெருந்துன்பமுண்டாகும்; துன்பத்திற் கிடங்கொடாதே. இராமனுடைய பராக்கிரமம் எனக்குத் தெரியும்; அவனுடைய அம்பு என்னைத் தென்றிசைக்கடலிற் றாக்கியெறிந்தது இன்னும் யான் மறக்கவில்லை. இராமனெதிரில் யான் போனால் எனக்கு வருவது துன்பமே. அதற்கு இடங்கொடுக்க எனக்கு இஷ்டமில்லை" என்று கூறினான். இதைக்கேட்ட இராவணன் வெகுண்டு மாரீசனைத் தன் உடைவாளால் வெட்டத் துணிந்தனன்

உடனே மாரீசன் இராவணன்கையா லிறப்பதினும் இராமபாணத்தாற் சாவதுமேல் என்று கருதி, இராவணனுக்கு உதவிசெய்ய ஒப்புக்கொண்டு தான் பொன் மானுருக்கொண்டு சீதைமுன்பு சென்று விளையாட, அவள் அதைப் பற்றித்தாவென்று கேட்க, இராமன் அதைப் பின்பற்றிச்சென்று மாயமானென்பதை யுணர்ந்து அதனை அம்பினாற்கொன்று வீழ்த்தினன். துன்பத்திற்கிடங்கொடுத்த மாரீசன் உயிர்துறந்தான். இராவணனும் துன்பத்திற்கிடங்கொடுத்து இராம லக்குமணர் இல்லாதசமயத்திற் சீதையைத்தூக்கி இலங்கையிற் புகுந்து அசோகவனத்தி லவளைச் சிறைவைத்தனன். அதனால் அவனும் தன்னுடைய அளவற்றசெல்வத்தைக் கொள்ளைகொடுத்துப் புத்திரமித்திர பந்துவர்க்கங்களோடு இராமன் கைக்கணையா லழிந்தான்.

## 59. தூக்கி வினைசெய்.

நன்றாக ஆராய்ந்தபிறகே ஒரு தொழிலிற்றலையிட்டு அதனைச்செய்க என்பதிதன் பொருள். 'எண்ணித் துணிக கருமம்' என்று பெரியோர் கூறியதும் இதுவே; ஆராயாமற் செய்யுங்காரியம் பெருங்கேட்டிற்கு ஏதுவாகும்.

ஒரு பார்ப்பினி கீரிப்பிள்ளையொன்று வளர்த்துவந்தனள். ஒருநாள் அவள் தண்ணீர்கொண்டுவர வீட்டைவிட்டு வெளியேகும்பொழுது தன்னுடைய இளங்குழந்தையைத் தொட்டிலிற்கிடத்தி அதற்குக் காவலாகக் கீரிப்பிள்ளையைவைத்துச் சென்றனள். அப்பொழுது தொட்டிலின் சங்கிலிவழியா யிறங்கிவந்த சர்ப்பமொன்

றைக் கீரிப்பிள்ளைகண்டு அதன்மேற் பாய்ந்து கடித்துச் சின்னபின்னமாகக் கொன்றெறிந்தது. பாம்பின் இரத்தத்தாற் பூசுண்ட முகத்துடன் கீரி தான்செய்த வீரச் செயலைப் பார்ப்பினிக்குத் தெரிவிக்கவிரும்பித் தலைவாயிலில்வந்து நின்றுகொண்டு அவள் வரவினை எதிர் பார்த்திருந்தது. தண்ணீர் எடுத்துவந்த பார்ப்பினி இரத்தம் பூசப்பெற்ற கீரியின் முகத்தைப் பார்த்துத் தன் குழந்தையை அது கடித்துவிட்டதென்று நினைத்துத் தண்ணீர்க் குடத்தைக் கீரியின் றலையிற்போட்டு அதனைக்கொன்றனள். வீட்டுக்குள்ளே புகுந்து பார்த்ததும் பாம்பு இறந்துகிடப்பதையும் குழந்தை சௌக்கியமாய் விளையாடுவதையும் பார்ப்பினிகண்டு மனம் நொந்து அருமைக்கீரியை ஆராயாமல் அநியாயமாய்க் கொன்றேனே என்று பெரிதும் வருந்தினள்.

தசரத சக்கிரவர்த்தி ஒருநாள் காட்டிற்கு வேட்டையாடப்போய் அந்தணச் சிறுவனொருவன் குடத்திற் றண்ணீர்மொள்ளும் ஓசையைக்கேட்டு யானை நீர் குடிப்பதாக மருண்டு ஆராயாமற் கணைதொடுத்து அவ்வந்தணச்சிறுவனைக் கொன்றுவிட்டான். அப்பாபச்செயலாற் றசரதன் புத்திரசோகத்தா லிறக்கும்படிச் சாபம் பெற்றனன்.

## 60. தேய்வமிகமேல்.

முற்காலத்தில் இரணியன் என்ற பெயருடைய அசுரனொருவனிருந்தான். அவன் கடவுளை நோக்கித் தவஞ்செய்து அழிவில்லாத அரிய வரம் பெற்றனன். அவன் பெற்றவரம் என்னவெனில், அவனுக்குப் பகலிலும் சாவில்லை இரவிலும் சாவில்லை ; மனிதராலும்

தேவராலும் மிருகத்தாலும் மற்றெவ்வித சராசரப் பொருள்களாலும் சாவில்லை; அஸ்திரசஸ்திரங்கள் எவற்றாலும் சாவில்லை; பூமிக்குள்ளும் சாவில்லை பூமிக்குவெளியிலும் சாவில்லை ஆகாயத்திலும் சாவில்லை; வீட்டிற்கு உள்ளும் சாவில்லை வெளியிலும் சாவில்லை. இவைபோன்ற இன்னும் பலவரங்களும் பெற்றனன். இரணியன் இத்தகைய வரபலத்தால் மமதையுற்றுத் தானே மூவுலகிற்கும் இறைவனாய் எவருநிகரின்றி அரசுபுரிந்திருந்தான். அவனுக்கு ஒருமகன் பிறந்தான். அம்மகனுக்குப் பிரகலாதன் எனப்பெயரிட்டு சௌளம் உபநயனம் முதலிய சடங்குகளியற்றி உரிய பருவத்தில் வித்தியாரம்பமும் செய்தனன். அகந்தையே யுருவெடுத்ததுபோன்ற இரணியன் மூவுலகினுள்ளாரும் தன்னையே தெய்வமாகக் கொண்டாட வேண்டுமென்று ஆணையிட்டதுமன்றி நாராயணனைச் சிந்திப்பவரையும் அவன் பெயரைக் கூறுபவரையும் கொலைசெய்வதாகவும் உத்தரவிட்டனன். யாவரும் 'இரணியாய நம' என்று கூறவேண்டுமேயன்றி 'நாராயணாய நம' என்றால் தலைபோய்விடும். பள்ளிக்கூடத்திற்படிக்கும் சிறுவர்களும் 'இரணியாயநம' என்றுசொல்லிப் பாடந்தொடங்கவேண்டுமே யொழிய 'நாராயணாய நம' என்றால் கொல்லப்படுவார்கள். பிரகலாதனோ நாரதருபதேசத்தால் நாராயணனைச் சிந்திப்பதும் துதிப்பதுமே தொழிலாகக்கொண்டனன். இதையறிந்த இரணியன் தன்புதல்வன்என்றும் பாராமல் அவனை யானையின் காலாலிடறச்செய்தும் மலைமேலேவைத்து உருட்டியும் கடலிற்றள்ளியும் நெருப்பிற்போட்டும் விஷத்தைக்

கொடுத்தும் இன்னும் பலவிதமாகவும் சித்திரவதை செய்தனன். பிரகலாதன் எப்பொழுதும் எப்பொருட்குமிறைவனாகிய நாராயணன்பெயரையே கூறிக்கொண்டு அவனையே சிந்தித்திருந்தமையாற் பிரகலாதனுக்குச் சிறிதும் இவ்விடர்களாற் துன்பமுண்டாகவில்லை. இவ்வாச்சரியத்தைக் கண்ட இரணியன் எவ்விதத்தினும் சாவாத தன் மகனைநோக்கி வெகுண்டு "அடே மூடா! நீ கூறும் நாராயணன் என்பவன் எங்குளன்? அவனை எனக்குக் காட்டுவாய்" என்றனன். பிரகலாதன் பிதாவைநோக்கி "நாராயணன் எல்லாச் சராசரப்பொருள்களிலும் உள்ளவன்; அவன் இல்லாத இடமில்லை; மலையினும் உள்ளவன்; அணுவிலும் உள்ளவன்; நீ சொன்ன சொல்லினுமுளன் இதோ நிற்கும் இந்தத் தூணிலுமுளன்" என்று சொன்னமாத்திரையில் இரணியனெழுந்து எதிரில்நின்ற தூணை யுதைத்தனன். அப்பொழுது நாராயணன் தூணைக்கிழித்துக்கொண்டு நரசிங்க வுருவுடன் வெளிப்பட்டுப் பகலும் இரவுமில்லாத மாலைக்காலத்தில், வீட்டிற்கு வெளியினுமின்றி உள்ளேயுமின்றி வாயிற்படியிலிருந்துகொண்டு இரணியனைப்பற்றித் தூக்கிப் பூமியிலும் ஆகாயத்திலுமில்லாமற் றன் மடிமேற் கிடத்திக்கொண்டு அஸ்திர சஸ்திரங்களில்லாமலே தனது கூரிய நகங்களாற் கிழித்துக் கொன்றனன். தெய்வத்தையிகழ்ந்து வாழ்ந்தவர்களுமுண்டோ?

## 61. தேசத்தோடொத்துவாழ்.

**தேசத்தி** லுள்ளாருடைய அபிப்பிராயத்திற்குப் பொருத்தமாக நடந்து வாழவேண்டும் என்பதிதன்

கருத்து. ஜனங்களுடைய அபிப்பிராயத்திற்கு விரோதமாக நடப்பவனை அவர்கள் மதிக்கமாட்டார்கள்.

தருமத்தை நிலைநாட்ட உலகத்தில் அவதரித்த மகா புருஷசிகாமணியான இராமன் இராவண சங்காரமான பிறகு சீதையோடு அயோத்தியடைந்து சிம்மாசன மேறித் தம்பிமார் தனதேவல்கேட்பப் பூமியை யாண்டுவருகின்றகாலத்தில் ஒரு நாளிரவு தானும் இலக்குமணனும் மாறுவேடம்பூண்டு நகரசோதனை வருகின்ற காலத்தில் வண்ணானொருவன் தன் மனையாட்டியின் கற்பினை ஐயுற்று அவளை நோக்கி “ஏ பேதாய்! இனி நீ என்னோடுவாழலியலாது. தனிமையாய்ப் பிறன்வாயிற் சென்று மீண்டுவந்த உன்னை யான் அங்கீகரிக்கமாட்டேன். தனிமையாய் இராவணன் நகரத்தில் வதிந்த சீதையைமீட்டும், உலகத்தார்கூறும் பழிச்சொல்லையும் எண்ணாது, அங்கீகரித்த இராமனைப்போல என்னை நினையாதே” என்று சினந்து கூறியதைக்கேட்ட இராமன், தன் அரண்மனைசார்ந்ததும் இலக்குமணனை நோக்கி, “இலக்குமணா, சீதையைக் கொண்டுபோய் வான்மீக முனிவராச்சிரமத்தில் விட்டுவருக” என்று ஆஜ்ஞாபித்தனன். இலக்குமணன் பலவிதமாகக் காரணங்காட்டிச் சீதையைக் காட்டிற்கனுப்புதல் நீதியன்றென்று கூறியும் இராமன் தேசத்தார் அபிப்பிராயத்திற்கு விரோதமாகத் தான் நடக்கமுடியாதென்று பிடிவாதமாய்க் கூறினன். அதன்மேல் இலக்குமணன் அரசனாணைப்படிக் கருப்பவதியான சீதையைக் காட்டிற் கழைத்துச்சென்று வான்மீகமுனிவ ராச்சிரமத்தில் விட்டுவந்தனன். பிறகு நெடுநாட்கழித்து இராமன்



இராமனும் மாயப் போன்மானும்.

அசுவமேத யாகஞ்செய்யப் புகுந்தபோது வான்மீகர் சொன்னசொற்காகச் சீதையைமீட்டும் அயோத்திக்குக் கொணர்ந்து தன்பால் அமைத்துக்கொண்டனன்.

## 62. தையல்சொற்கேளேல்.

**பே**தைமையென்பது மாதர்க்கணிகலம், ஆதலால் மாதர்கள் மடமைத்தனத்தாற் கூறும் மொழிகளைக் கேளாதே யென்றனர்.

மாரீசன் என்னும் மாயாவியொருவன் இராவணன் சொற்படிப் பொன்மானின் உருக்கொண்டு சீதையின் முன்பு விளையாட, உண்மையானமானென்று கருதின சீதை அம்மாயமானைப்பற்றித் தனக்கு விளையாடத் தா என்று இராமனைக் கேட்டனள். இராமன் இஃது இராட்சதமாயையென்று அவளுக்குக்கூறியும் அவள் பிடிவாதமாய்க் கேட்டனள். இராமன் வில்லுமம்பு மேந்தி மானைத்தொடர்ந்து நெடுந்தூரஞ்சென்று மாய மானென்பதை நன்குணர்ந்து அதன்மேற் பாணபிரயோகஞ்செய்தனன். அடிபட்ட மாரீசன் உயிர் துறக்கும்பொழுது 'ஆ சீதா லக்ஷ்மணா' என்று இராமனுடைய குரல் போற் கூவித் தன்னுயிரை விட்டனன். இக்கூச்சலைக் கேட்ட சீதை தனக்குக் காவலாக அமைந்து நின்ற இலக்குமணனை நோக்கி "இலக்குமணா! உனது தமையனுக்கு அரக்கர்களால் யாதோதீமை நிகழ்ந்துவிட்டது. அதோ உன்னைக் கூவியழைக்கிறார். நீ அங்குச் செல்வாயாக" என்றனள். அதற்கு இலக்குமணன் "தாயே, அண்ணன் இராமன் மூவுலகுமொருங்குசேர எதிர்ப்பினுங்கலங்கான். அவனை இராட்சதமாயை ஒன்றும்

செய்யமுடியாது. கூவினவன் மாரீசன்; அவன் இராமன் குரல்போற்கூவினான். ஆதலால் நீங்கள் மனங்கவலற்க" என்றனன். இம்மொழிகேட்ட சீதை இலக்குமணனை நோக்கிக் கடுமொழிகூறவே, அவனும் "தாயே! என் மேற் கோபம்வேண்டாம் இதோ அண்ணன்பாற் போய் அழைத்துவருகிறேன். தாங்கள் மிக்க ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். இஃது அரக்கருடைய மாயை, கவலைப்படவேண்டாம்" என்று தமயனிருக்குமிடத்தை நாடிச்சென்றனன்.

இராமலக்குமணர்களைவிட்டுப் பிரிந்து சீதை தனியாயிருக்கும் சமயங்கண்டு இராவணன் சந்நியாசியின் உருக்கொண்டு அவளெதிரிற் றோன்றிப் பிச்சைகேட்க அவள் பிச்சையிட பர்ணசாலையினின்றும் வெளிவந்தவுடன் அவளைப் பலாத்காரமாய்த் தூக்கிச்சென்று இலங்கையை யடைந்து அசோகவனத்தில் அவளைச் சிறைவைத்தனன். இராமலக்குமணர்கள் திரும்பிப் பர்ணசாலையை யடைந்துபார்க்க அங்கே சீதையைக் காணாமற் றையல்சொற் கேட்டதற்கு மிகவும் வருந்தினார்கள்.

## 63. தோன்மை மறவேல்.

பழைய நிலைமையை மறக்கக்கூடாது என்பதிதன் பொருள். துரோணரோடு நெருங்கிப் பழகின பாஞ்சால ராஜனான துருபதன் பிற்காலத்தில் அவரை மறந்தவன்போல் அநாதரவுசெய்து அவமதித்ததால் அவன் துரோணரால் மிகவும் அவமானமடைந்தனன்.

நரியொன்று தன் இனத்தினின்றும் பிரிந்து நாட்டிலோடிக்கொண்டிருக்கையில் ஒருநாள் நள்ளிரவிலே

தவறி நீலத்தொட்டிக்குள் விழுந்து மேலெங்கும் நீலச் சாயத்தாற் பூசப்பட்டு மேலேறிவாமுடியாமற் றவித்துக்கொண்டு உள்ளேகிடந்தது. மறுநாட்காலையில் தொட்டியில் வேலைசெய்பவர் அதனைக்கண்டு வெளியேற்றி அடித்து வெருட்டிவிட்டார்கள். நரி மீண்டும் காட்டிற்கேகித் தன்னுடைய அருமையான நீலநிறத்தை மற்ற மிருகங்களுக்குக் காட்டித் தான் உயர்ந்தஜாதி மிருகமென்றும் தனக்கு மற்றைமிருகங்கள் யாவும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுமென்று சொல்லிற்று. அவைகளும் அதன் நீலநிறத்தைக்கண்டு அதிசயித்து அதனுணைக்குட்பட்டு நடந்தன. இப்படியிருக்குநாளில் நரிகளில் அனுபோகமுள்ள கிழநரியொன்று மற்றை நரிகளைநோக்கி "நம்முடைய இனத்தைச்சேர்ந்த ஒருவன் எங்கேயோபெற்ற நீலநிறத்தால் மிருகங்களுக்கெல்லாம் தலைவனுய் விளங்குகிறுன். மேலும் அவன் நம்மை முற்றிலும் மறந்துவிட்டான். பழைய பந்துக்களையும் சிநேகிதர்களையும் முற்றிலும் மறந்து பராமுகமாயிருப்பவனை நாம் சும்மாவிடக்கூடாது. அவனைத் தண்டிக்க எனக்கு ஒருவழி தோன்றுகிறது. அஃதென்னெனில் அவன் சிங்கம் புலி முதலிய மிருகங்கள் தனக்குப் பரிவாரமாகச் சூழ்ந்துவரும் சமயத்தில் நாம் அவனருகிற்சென்று கூட்டமாய் ஊளையிடுவோம். அவனும் பழைய வழக்கம்விடாமல் நம்மோடுகூடி ஊளையிடுவான். மற்ற மிருகங்கள் அவனை யின்னுனென்றறிந்து தண்டிக்கும்" என்று சொல்லிமுடித்தது. அப்படியே நீலநரி மற்றை மிருகங்களுக்கிடையே கம்பீரமாய் வரும்பொழுது சங்கேதப்படி நரிகள் யாவும்

ஒருங்குசேர்ந்து ஊளையிட்டன. நீலநரியும் தன்னுடைய பழைய வழக்கம்விடாமல் அவைகளோடுகூடி ஊளையிட்டது. அதை நரியென்றுணர்ந்து அருகிலிருந்த புலியொன்று கிழித்துக் கொன்றுவிட்டது.

## 64. தோற்பனதொடரேல்.

அசாத்தியமான காரியங்களைத் தொடர்ந்துமுடிக்க முயற்சிக்காதே என்பதிதன் பொருள். ஒரு தொழில் நிச்சயமாய்க் கைகூடாதென்று தெரிந்தும் அதனைத் தொடர்ந்து செய்பவன் பேதையருட் பேதையாம். அவனுக்குக் காரியம் கைகூடாததோடு வீணான தேகப் பிரயாசையும் வீண்பொருட் செலவும் உண்டாகும்.

டில்லியில் அரசாண்டுவந்த மகம்மதிய அரசர்களில் தாக்லக் வம்சத்தைச் சேர்ந்த மகம்மது என்ற பெயருடைய அரசனொருவனிருந்தான். அவன் மிகவும் படித்து அநேக நூல்களைக் கற்றவனாயினும் தோற்பனதொடரேல் என்பதன் உண்மையை யறியாமலிருந்தான். ஒரு காலத்தில் அவன் சீனராஜ்ஜியத்தைச் சயிக்க எண்ணி ஒரு சேனையைத் தயார்செய்து இமாசலத்தைக் கடந்துசெல்ல ஆஜ்ஞாபித்தனன். சேனை இமாசலத்தைக் கடக்கமுடியாமல் பனியாலும் குளிராலும் இன்னும் பலவிதத் துன்பங்களாலும் அழிந்தது. எஞ்சிநின்ற சிலர் திரும்பி டில்லிக்குவந்து சேனையழிந்த விருத்தாந்தத்தை மகம்மதுக்குத் தெரியப்படுத்தினர். மகம்மது மிகக்கோபங்கொண்டு அவர்களைத் துஷ்டமிருகங்களை வேட்டையாடுவதுபோல் வேட்டையாடத் தன் வீரர்களுக்குக் கட்டளையிட்டனன்.

இன்னொருசமயத்தில் டில்லியில் உள்ள எல்லாஜனங்களும் அநேக நூறுமைலுக்கப்பாலுள்ள தேவகிரி என்னும் பட்டணத்திற்குச் சென்று உடனே குடியேற வேண்டுமென்று மகம்மது உத்தரவிட்டனன். ஜனங்கள் யாவரும் பயணப்பட்டுச் செல்லுகையில் வழியில் அநேகர் மாண்டனர். அக்காலத்தில் இருப்புப்பாதை யாதிய சௌகரியங்கள் இல்லை. ஆதலால் ஜனங்கள் பட்ட கஷ்டத்திற்கு அளவுசங்கியை கிடையாது. மாண்டவர்போகத் தேவகிரி சென்றடைந்தோர் சிலரே. மகம்மது தேவகிரி சென்றுபார்த்ததும் சிலரே அங்கு இருப்பதை யுணர்ந்து மிகக் கோபங்கொண்டு அவர்களை நோக்கி உடனே நீங்கள் யாவரும் டில்லிக்குத் திரும்பிப் போங்கள்; இல்லாவிடிற் சிரச்சேதம் செய்வேனென்று உத்தரவிட்டனன். ஏழை ஜனங்கள் என் செய்வார்கள். யாவரும் டில்லிக்கு மீண்டனர்; வழியில் இன்னும் பலரிறந்தனர். டில்லி சென்றடைந்தவர் மிகச்சிலரே.

தாக்லக் மகம்மது ஒருநாள் தூங்கிக்கொண்டிருக்கையில் அவன் படுத்திருந்த அறையின் பலகணி திறந்திருந்தது. அதன் வழியாக வந்த சூரியகிரணம் அவன் கண்ணிற்படவே யாரோ தன் கண்ணைக் குத்தியதாகச் சினங்கொண்டெழுந்து தன் கண்ணைக் குத்தியவன் யாவனென்று அயலிலுள்ளாரைக் கேட்டனன். அவர்கள் சூரியன் கண்ணைக் குத்தியதாகச் சொன்னார்கள். உடனே மகம்மது கோபாவேசங்கொண்டு தன்னுடைய பெரியசேனையைத் தயார்பண்ணச் சொல்லித் தானும் போர்க்கோலங்கொண்டு சூரியன்மேற் படை

யெடுத்துச் சென்றான். நெடுநாள் சூரியனைத் துரத்தித் துரத்திப் பார்த்தும் அவன் அகப்படாமற் போகவே, மகம்மது முடிவில் நமக்குப் பயந்தோடுகிற பேதையாகிய சூரியனை நாம் ஜயிப்பது நம்முடைய வீரத்திற்கு அழகில்லை யென்று ஊருக்குத் திரும்பினான்.

## 65. நன்மை கடைப்பிடி.

எது நன்மையைத் தருமோ அதனை உறுதியாகக் கைப்பற்ற வேண்டுமென்று இதனாற் கூறப்பட்டது. இகபரமிரண்டிலும் சுகமடைய விரும்புபவன் நன்மையைவிடாமற் கொள்ளவேண்டும்.

இராவணன் உடன் பிறந்தவனாகிய விபீஷணன் உலகிற் பிறந்ததனாலாகிய பயனை யடையக் கருதி நன்மையையே மேற்கொண்டு ஒழுகுவானாயினான். அவன் எல்லாருக்கும் நல்லவன். எவருக்கும் நன்மையையே செய்பவன். நன்மை செய்பவரையே தனக்கு உற்ற உறவினராகவுந் தோழராகவும் கொண்டவன். சீதையை இராவணன் சிறையெடுத்துவந்ததற்காக இராமன் எழுபது வெள்ளம் குரங்குப்படையோடு இலங்கையின்மேற் படையெடுத்து வந்ததைக் கேள்விப்பட்டு விபீஷணன் தன் தமயனையடைந்து “ஐயா! மூவுலகாதிபத்யம்பெற்ற நீ தரும விரோதமான செயலைச் செய்யலாமா? இராமனோ சாமனியனல்லன். எப்பொருட்கும் இறைவனாகிய பரம்பொருளே இராமனாக அறிவாய். இராமனை விரோதித்து உன்னால் வாழ முடியாது. மகா பராக்கிரமசாலிகளாகிய கரதூஷணாதியர் மாண்டதே இதற்குச் சான்றாம். மேலும் பிறன்

மனைவியை இச்சிப்பவன் பெருநரகில் வீழ்வது திண்ண மன்றோ? அநேக வேதங்களைச் சிக்கறக்கற்ற உனக்கு இவ்வுண்மை விளங்கவில்லையோ? இனியேனும் சீதை யைக் கொண்டுபோய் இராமனிடம்விட்டு அவனைச் சர ணமடைந்தால் உயிர்தப்புவாய்; இல்லாவிடின் இரா மன் விடுங்கணைகளால் நீயழிவதோடு உன் வம்சமும் நாசமாகும். இதனையறிவாய்" என்று வற்புறுத்திக் கூறினன். இராவணன் அவன் கூற்றின் உண்மை தெரியாதவனாய்ச் சினந்து தன் உடைவாளையுருவி தன் தம்பியென்று மெண்ணுமல் விபீஷணனை வெட்டப் புகு ந்தான். நன்மையையே கடைப்பிடித்த விபீஷணன் மனம்நொந்து அண்ணனைவிட்டுப்பிரிய மனமில்லாத வனாயினும் அறத்தைக் கொல்லுபவனைக் கைவிடுதல் நியாயமாதலின் அவனைவிட்டு இகபரமிரண்டையும் அளிக்கும் தருமமூர்த்தியாகிய இராமனைச் சரணமடை ந்தான். நன்மையெல்லாந் திரண்டோருருவெடுத்தா லனைய இராமனைச் சரணமெனக் கைப்பற்றியதே விபீ ஷணன் நன்மையைக் கடைப்பிடித்தவர்களுக்குள் முத ன்மையானவனாவான் என்பதை விளக்குகின்றது.

## 66. நாடொப்பன செய்.

நாட்டிலுள்ளார் ஒப்பும்படியான செயல்களைச் செய் வாயாக என்பதிதன்பொருள். நாட்டிலுள்ளார் ஒப்பும் படியான செய்கைகளைச் செய்யாதவன் அவர்களுடைய விரோதத்தையடைந்து அழிவுறுவான். ஒப்புஞ் செய லைச் செய்யாதவனே துன்புறுவானென்றால் ஒவ்வாச் செயலைச் செய்பவன் கேடடைதல் திண்ணம் திண்ணம்.

இங்கிலாந்தில் முதலாவது சாரல்ஸ் என்பவன் பதி னேழாவது நூற்றாண்டின் முதலில் அரசாண்டு வந்த னன். உலகத்திற்குக் கடவுளரசனே யென்பது அவன் கொள்கை. ஆகையால் ஜனங்களாற் றேர்ந்தனுப்பப் பட்ட பார்லிமெண்ட் சபையாரை ஆலோசனை கேட்கா மலே அநேகவருடம் அரசுபுரிந்து வந்தனன். ஒரு சமயத்தில் பார்லிமெண்டார் கொடுத்த பணத்தை இராஜாங்க நன்மைக்குச் செலவிடாமல் எதிரிகளுக்கா கச் செலவழித்துவிட்டனன். கொடுத்த பணஞ் செல வழிந்துபோகவே பார்லிமெண்ட் சபையைக் கூட்டி னன். பார்லிமெண்டார் தங்கள் குறைகளைத் தீர்த் தாலன்றிப் பணங்கொடுக்கச் சம்மதிக்கவில்லை. அர சன் வெகுண்டு பார்லிமெண்ட் சபையைக் கலைத்துவிட் டுத் தானே யவரனுமதியின்றி வரிபோட்டுப் பணஞ் சேகரிக்க வாரம்பித்தான். இப்படிச் செய்வது சட்ட விரோதமென்று வரிகொடுக்காதவரை யெல்லாந் தண் டனை செய்தனன். நியாயாதிபதிகளைப் பயமுறுத் தித் தான் சொல்லியபடியே தீர்ப்புச் செய்யவுஞ் செய் தனன். சாரல்ஸுக்குப் பணம் அவசியமாய் வேண்டியிரு ந்ததனாற் பார்லிமெண்டை மீட்டுங்கூட்ட அவர்கள் முன்போலவே பதில்சொல்லினர். அரசன் அச்சபையிற் பிரதானரான ஐவர்களைச் சிறைசெய்யவேண்டி அங் குச்செல்ல அவர்கள் அரசன்வருஞ் சமாசாரந்தெரிந்து ஓடிப்போய்த் தப்பித்துக்கொண்டனர். அரசன் தன க்கு வேண்டியவர்களைச் சேர்த்துக்கொண்டு பலாத்கார மாய்ப் பார்லிமெண்டை யடக்க முயன்றான். உடனே தேசத்திற் குழப்பமுண்டாகி அரசனுக்கும் ஜனங்களு

க்கும் பெரும்போர் நடந்தது. கடைசியிலரசன் தோல்வியுற்று எதிரிகள் கையிலகப்பட்டுக் கொண்டனன். பார்லிமெண்டு சபையார் பலவிதங்களால் ஜனங்களுக்கு விரோதஞ்செய்த இக்கொடுங்கோன் மன்னனைச் சிரச்சேதஞ் செய்தனர். இவ்விதமான தண்டனை கிடைத்தது அரசன் நாடொப்பன செய்யாததனாற்றான்.

## 67. நிலையிற் பிரியேல்.

தன்னுடைய நிலைமையினின்றும் தவறக்கூடாது என்பதிதன் கருத்து. தலையினின்று சௌளம்செய்து கீழே தள்ளப்பட்ட மயிர் எங்ஙனம் இழிந்த நிலையை யடைகின்றதோ அதுபோல உயர் நிலையினின்றும் தவறியவன் யாவராலும் இகழப்படுவான் என்று பெரியோர் கூறியுள்ளார்.

முனிவரொருவர் காட்டுவழியாகச் சென்றுகொண்டிருந்தனர். அவ்வழியிற் பாம்பொன்று பலரையுங் கடித்துத் துன்பமியற்றி வந்தது. முனிவர் அதைக்கண்டு "பாம்பே, நீ யேன் பலரையுந் துன்புறுத்துகின்றாய் அதனால் நீ யடையும் பயன்யாதோ?" என்றனர். பாம்பு முனிவரை நோக்கி, "சுவாமி, திருவுள்ளம் இப்படியானால் இனியான் ஒருவரையும் கடிப்பதேயில்லை" என்று உறுதிமொழி தந்தது. சின்னாட்சென்று முனிவர் அவ்வழியாக வரும்பொழுது பாம்பு மிக இளைத்துப்போய்க் களைத்துக் கிடப்பதையும் அதைச் சிறு பிள்ளைகளும் எடுத்துச் சுழற்றியும் வீசியும் அடித்தும் நசுக்கியும் பலவிதமாகத் துன்புறுத்துவதையுங் கண்டனர்.

முனிவர் பாம்பை நோக்கி "பாம்பே, உனக்கேன் இந்த நிலைவந்தது?" என்று கேட்டார். அதற்குப் பாம்பு "சுவாமி, தங்கள் உத்தரவின்படி யான ஒருவரையும் கடிப்பதில்லை; அதுமுதல் என்னிடத்திற் சிறுபிள்ளைகளுக்கும் பயமில்லாமற் போயிற்று; ஆதலால் என்னை எல்லாரும் அவமானப்படுத்துவதோடு துன்பமுந் தருகின்றார். நான் படும்பாட்டிற்குக் காரணம் தாங்களே" என்று கூறிற்று. இதைக்கேட்ட முனிவர் நகைத்து "சர்ப்பமே, நான் கூறியதன் கருத்தை நீ சரியாய் அறிந்துகொள்ளவில்லை. நீ உன்னுடைய வழக்க நிலையினின்றும் தவறியதால் இழிந்த நிலையடைந்து துன்பமடைந்தாய். நீ எவரையும் கிட்டவரவொட்டாமற் சீறக்கூட வேண்டாமென்றேனா? உன்னை மிகவும் துன்புறுத்துபவர்களைக் கடிப்பது உனக்கு நியாயமன்றோ? நீ யாவரையும் பயமுறுத்திக்கொண்டிருந்தால் எவருமுன்னை யணுகார்கள். நிலையிற் பிரிந்ததால் உனக்குத் தீங்கு நேரிட்டது" என்று சொல்லி முனிவரேகினர். சர்ப்பமும் அவர் சொல்வழியொழுகித் தன்னிலை யடைந்தது.

விசுவாமித்திர முனிவர் பெருந் தவமியற்றி வசிஷ்டரால் பிரமருஷியென்ற பட்டமும் பெற்றனர். விசுவாமித்திரர் ஒரு காட்டிலிருந்து தவஞ்செய்துகொண்டிருக்கையில் தேவர்கள் அவருடைய தவத்தைக்கெடுக்க எண்ணி மேனகை என்னும் தேவமாதினை அவர்பால் அனுப்பினார்கள். மேனகையின் பேரழகைக் கண்ட முனிவர் அவளை விரும்பி மணந்து சகுந்தலையை மகளாகப் பெற்றனர். தன்னுடைய நிலைதவறின விசுவா

மித்திரர் தன்னுடைய தவத்தையுமிழந்து பிறர்பழிக்க ஆளாயினர்.

## 68. நீர்விளையாடேல்.

நீர்விளையாட்டினால் சிலசமயம் உயிர்ச்சேதமுண்டாம் ஆதலின் இங்ஙனம் கூறினர். வெள்ளநீரில் விளையாடச் செல்லும் சிறுவர்கள் வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகப்படுவதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

காவேரி நதியில் வெள்ளம்பெருகி வந்துகொண்டிருக்கும் நாட்களில் ஒருநாள் சில பிள்ளைகள் நீர்விளையாடச் சென்றனர். சென்ற பிள்ளைகள் யாவரும் முன்பின் யோசியாமல் விளையாடுபவராய்க் கரையருகிலிருந்த மண்டபமொன்றின் மேலேறி எழும்பி நீரிற்குதித்து நீந்தி விளையாடினார்கள். அங்ஙனம் விளையாடுபவர்களில் ஒரு சிறுவன் யாவரினும் அதிகதூரத்திற் குதிக்கவேண்டுமென்று பந்தயம் போட்டுக்கொண்டு மண்டபத்தின் மேலிவர்ந்து தன் முழுபலத்தோடும் எழும்பி நட்டாற்றிற் குதித்தான். குதித்தவன் மேலெழும்பவில்லை. மற்றைப் பிள்ளைகளும் கரையிலிருந்தவர்களும் அச்சிறுவனைப் பலவிடங்களிற் றேடிப் பார்ததும் அவன் போன வழி தெரியவில்லை. இரண்டுநாள் கழித்து வெள்ளம் வடிந்ததும் நட்டாற்றில் வெள்ளத்தாற் கொண்டுவரப் பட்டுச் செங்குத்தாய் நடப்பட்டிருந்த மூங்கிலொன்றிற் சிறுவன் கழுவேற்றப்பட்டு இறந்து கிடப்பதை எல்லாருங்கண்டு பெருந் துயரமடைந்தார்கள்.

## 69. நண்மை நகரேல்.

அற்பமான பொருள்களை அநுபவியாதே என்ப

திதன்பொருள். கட்குடித்தல் முதலியவை இதற் குதாரணமாம்.

நெடுங்காலத்திற்குமுன் பன்னிரண்டு வருஷகாலம் மழையென்னும் பெயரேயில்லாமல் ஆறு குளம் ஏரி கூவல் ஆகிய நீர்நிலைகளெல்லாம் வறண்டுவிட்டன. தண்ணீர்கிடைப்பதும் அரிதானதால் புற்பூண்டுகள் போன விடந்தெரியாமல் மறைந்துபோயின. மரங்களெல்லாம் வற்றன் மரங்களாய்ப் பட்டுப்போனமையாற் காய்கனி கிழங்குகள் சருகுகள் கிடைப்பதரிதாயின. இப்படிப் பட்ட கொடியபஞ்சத்தால் மாண்ட உயிர்களுக்குக் கணக்கில்லை. அநேகவருடங்களாக யோகத்திலிருந்த விசுவாமித்திரர் கண்ணை விழித்துப்பார்க்கையில் தானிருந்தவனம் பாலைவனமாயிருக்கக் கண்டனர். உணவு கொண்டு அநேககாலமாயினமையால் அவருக்கு அளவிட முடியாத பசியுண்டாயிற்று. உணவு எங்கே கிடைக்குமென்று பல இடங்களிற்றேடியும் காணப்பெறாமல் அவர் கடைசியிற் சண்டாளனொருவன் குடிசையைக்கண்டு அதனுட்புகுந்து நோக்குகையில் அங்கே புலையன் வைத்திருந்த நாய் மாமிசத்தைக்கண்டு அதை எடுத்து நெருப்பிலிட்டுவதக்கி யுண்ணத்தொடங்கினர். அவ்வமயத்தில் வெளியேபோயிருந்த புலையன் திரும்பிவந்து யாரோ தன் குடிசையிற் புகுந்து மாமிசத்தை யுண்ணுவதைக்கண்டு கோபங்கொண்டு தன் வாளையெடுத்து விசுவாமித்திரரை வெட்டப்போயினன். அவர் நடுநடுங்கிப் புலையன் காலில்விழுந்து தான்செய்த பிழையைப்பொறுத்துக்கொள்ள மிகவும் வேண்டினர். சண்டாளன் அவரை யின்னாரென்றறிந்து வேண்டிய உப

சாரங்கள் செய்தனுப்பினன். பிறகு விசுவாமித்திரர் பசி நீங்கப்பெற்று உலகம் இந்நிலைக்கு வந்ததன் காரணம் என்னவென்று ஞானதிருஷ்டியினால் நோக்கத் துவாதச வருஷ க்ஷாமம் என்பதை யறிந்தனர். உடனே கோபாவேசங்கொண்டு இந்திரனை வரவழைத்து உத்தரவிட்டதன்மேல் மழைபொழிந்து நாடுசெழித்தது. விசுவாமித்திரர் நாய் மாமிசம் உண்டது அவருக்கு எக்காலத்திலும் பழிச்சொல்லாக நின்றது.

## 70. நூல்பல கல்.

பலவகைப்பட்ட நூல்களையும் கற்றறியவேண்டும் என்பதிதனாற் கூறப்பட்டது. நூல்களைக் கற்கக்கற்க அறிவு வளருமாதலின் பல நூல்களைக் கற்றால் அறிவு விருத்தியாகும்.

ஸ்ரீபகவத் பாதரான சங்கராசரியர் பல நூல்களையுங் கற்று ஒவ்வொன்றிலுந் தமக்கு நிகரெவருமில்லையென்று விளங்கியதால் லோககுருவாயினர். பிறந்தது முதற் சந்நியாசியாகிய சங்கரர் உபயபாரதியாகிய் சரஸ்வதியோடு வாதஞ்செய்ய நேரிட்டகாலத்தில், பாரதி சிருங்கார விஷயமான காமநூற் பொருளைப்பற்றிச் சங்கரரைக் கேட்டனள். சந்நியாசியாகிய தான் அதற்கு மறுமொழிகொடுத்தல் எவ்விதத்திலும் இயலாதென்பதைபுணர்ந்து ஒரு மாதங்கழித்து விடை கூறுவதாகத் தவணை குறித்துவைத்துச் சென்று கூடுவிட்டுக் கூடுபாயுஞ்சக்தியால் அமருகன் என்னும் பெயருடைய அரசன் தேகத்திற் பாகாயப் பிரவேசஞ்செய்து காம சாஸ்திரானுபவமு முணர்ந்தவராய் இன்பநூலாகிய

அமருகம் என்னுங் காவியத்தை இயற்றி மீட்டுந் தன் சரீரத்திற் புகுந்து உபயபாரதியாரைக்கண்டு அமருக காவியத்தைக்காட்டச் சரஸ்வதியும் சங்கரரேவென்றதாக ஒப்புக்கொண்டனள்.

சங்கரர் காஷ்மீரதேசம் சென்றபொழுது, ஸ்ரீநகரத்திற் சருவஞ்ஞபீடம் இருப்பதாக அறிந்து அங்கே சென்றனர். எல்லாவித்தைகளுந் தெரிந்தவனே சருவஞ்ஞ பீடத்திலேற முடியும். அந்தப் பீடத்திற்கு அறுபத்து நான்கு படிகளுண்டு. ஒவ்வொரு படியிலும் ஒவ்வொரு கலைஞானத்தின் அதிதேவதை பதுமைபுருவாகப் பொருந்தியிருக்கும்; படியிற் கால்வைத்து ஏறுபவன் ஒவ்வொரு படியிலுமுள்ள பதுமை கேட்கும் அரிய வினுக்களுக்கு உரிய விடைகொடுத்தாலன்றி மேற்படியிலேற அஃது இடங்கொடாது. எல்லாமறிந்த சருவஞ்ஞராகிய சங்கரர் பதுமைகள் கேட்ட கேள்விகளுக்கெல்லாந் தக்க விடையளித்து ஏறிச் சாரதா பீடமாகிய சருவஞ்ஞ சிம்மாசனத்தில் வீற்றிருந்தருளினர். சங்கரரைக் காட்டிலும் நூல் பலகற்றுப் பெருமையடைந்தோ ரெவருமில்லை.

## 71. நெற்பயிர் விளை.

நமது நாட்டில் முக்கியமான உணவுப்பொருள் நெல்லாதலால் உணவிற்கு வேண்டியதை முதலில் ஈட்டி வைத்துக்கொள்ளவேண்டுமென்பது இதனுல் அறிவுறுத்தப்பட்டது.

ஆத்திசூடி இயற்றிய ஔவைமூதாட்டியார் சோழ ராஜனுடைய திருமணத்திற்குப் போயிருந்தபொழுது பலரும் பலவிதமாக ஆசீர்வதிக்கத் தான் ‘வரப்புயர’

என்று அரசனை வாழ்த்தினள். அங்கே கூடியிருந்த யாவரும் அங்ஙனம் வாழ்த்தியதன் கருத்தையறியாதவர்களாய் ஔவையைப் பணிந்து அதனை விளக்கிக்காட்ட வேண்டிக்கொண்டார்கள். அப்பொழுது ஔவை "வரப்புயர்ந்தால் நீருயரும், நீருயர நெல்லுயரும், நெல்லுயரக் குடியுயரும், குடியுயரக் கோனுயரும்; ஆதலால் வரப்புயர்ந்தால் அரசனும் க்ஷேமத்தையடைவான்" என்று எடுத்துக்காட்டினாள். அதைக்கேட்ட பலரும் உண்மையையறிந்து மகிழ்வடைந்தார்கள். ஆகவே தேசம் க்ஷேமத்தையடைய நெல்லே முதற் காரணம் என்பதிதனால் விளங்குகின்றது.

## 72. நேர்பட வொழுகு.

நேர்மைபொருந்திய வொழுக்கத்தை மேற்கொள்ளுவாயாக என்பதிதன் பொருள். மனம்வாக்குக்காயம் என்னும் முக்கரணங்களும் ஒருமைபெற்று மனச்சாக்ஷிக்கு விரோதமில்லாமல் நடுவு நிலைமைபொருந்த நிற்கும் நிலை நேர்மையாம். பகைவனென்றும் அயலானென்றும் நண்பனென்றும் கருதாமல் யாவருக்கும் ஒப்ப நடக்கும் குணம் மிகச்சிறந்ததாம்.

தருமபுத்திரன் மகாபராக்கிரமசாலிகளான தன் தம்பிமார்களைக்கொண்டு திக்கு விசயஞ்செய்து ஏராளமான செல்வத்தைக் கப்பமாகக்கொண்டு இராஜசூயமென்னும் மகாயாகம்செய்தனன். அப்பொழுது அந்த யாகத்திற்கு வந்தவர்களுள் இலக்ஷம்பேர் சாப்பிட்டால் யாகசாலையிற் கட்டியிருக்கும் மணி ஒன்று ஒருதரம் தானாகவே அடிக்கும். அப்படிப்பட்ட மணி அநேகமாயி

ரந்தடவை ஒருநாளைக்கு அடிக்குமென்றால் அங்கு வந்திருந்த ஜனங்களின் தொகையையாவரே கணக்கிட முடியும்? ஆதலின், உண்டுபோட்ட எச்சில்களை யெடுத்தெறிந்து பரிசுத்தஞ்செய்வது அசாத்தியமாயிருந்தது. தருமபுத்திரன் முதலியோர் இன்னது செய்வதென்றறியாராய்த் திகைக்கையிற் கண்ணன் அவர்களை நோக்கிப் புருஷாமிருகத்தைக் கொண்டுவந்தால் இடம் பரிசுத்தமாவதோடுகூட எப்பொழுதும் சுகந்த பரிமளம் வீசிக்கொண்டேயிருக்கும் என்று கூறினான். புருஷாமிருகம் கழுத்திற்குமேல் மனிதனுருவமும் கீழே கஸ்தூரிமானினுருவமும் பெற்று நான்கு கால் ஒருவாலுடன் விளங்குவது; தான் மிகுந்த சுத்தமான திருமேனியோடு திகழ்வதேயன்றித் தன்னைச் சுற்றிலும் காதவளவிற்கு எல்லாவற்றையுஞ் பரிசுத்தப்படுத்தும் அற்புத சக்தியுடையது; சுற்றிலும் ஒரு குரோச எல்லைக்கு மூவுலகிலும் நிகரற்ற அதிசய திவ்வியமணம் வீசும் சிறப்பினையுடையது; நற்குண நற்செய்கைகள் மிகுந்ததாய்ச் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டது; ஆயினும் அதைப்பிடிக்க எத்தகைய பராக்கிரமசாலியாலும் முடியாது; கண்ணொளி மழுக்கும் மின்னொளிவீசும் அதனுடைய வேகத்திற்கு மனோவேகமும் நிகராகாது. பதினாயிரம் யானை வலிமையுடைய பலர் தன்னைச்சூழ்ந்து எதிர்த்தாலும் சிறிதும் பொருட்படுத்தாமல் அனைவரையும் நொடியிற் கிழித்தெறியும் பலமுடையது. கண்ணபிரான் இதன் அருமை பெருமைகளை விஸ்தாரமாய் எடுத்து தருமபுத்திராதியர்களுக்குச் சொல்லினன். அப்பொழுது வாயுபுத்திரனாகிய வீமசேனன்

எழுந்து நின்று இமயமலைச்சாரலிலுள்ள அதனிருப்பிடத்தையடைந்து அதனைப்பற்றி வருவதாக ஒப்புக்கொண்டு கண்ணனை விடைகேட்டனன். ஸ்ரீ கிருஷ்ணன் வீமனைநோக்கி "வீமா! நீ நல்லபராக்கிரமசாலி; வாயுவினும் வேகமுடையாய்; என்றாலும் அம்மிருகமோ உன்னிலும் வலிமையும் வேகமுமுடையது; அஸ்திர சஸ்திரங்களால் இறவாதது. நீ புருஷாமிருகம் வாழும் காட்டிற்சென்று காலைவைத்த அளவில் அஃதுன்மேற் பாய்ந்துவரும்; அஃது உன்னை நெருங்குகிறகாலத்தில் இம் மயிர்களுளொன்றை உனக்கும் அதற்கும் நடுவே போட்டுக்கொண்டே இந்த அரண்மனைக்குள் வந்துவிடு; அரண்மனைக்கு வெளியே அஃது உன்னைப் பிடித்துக்கொண்டால் உடனே கிழித்தெறிந்துவிடும்; நீ அரண்மனையின் உள்ளே புகுந்துவிட்டாலோ அது நீ சொன்னபடியெல்லாங்கேட்டு உனக்கு அடிமையாயிருக்கும்" என்று கூறித் தன் தலைமயிர்களில் ஏழுமயிரையுங் கொடுத்தனுப்பினன். வீமன், கண்ணபிரான் கூறியபடியே இமயமலைச்சாரலை யடைந்து புருஷாமிருகம் வசிக்கும் காட்டிற் காலைவைத்தவுடனே அது மோப்பத்தால் நரன் தன்னுடைய காட்டிற்கு வந்ததை யுணர்ந்து மிகுந்த கோபத்துடன் வீமன்மேல் பாய்ந்து வந்தது. அது கிட்ட நெருங்கும் பொழுதெல்லாம் கண்ணபிரான் அளித்த மயிர்களுளொன்றை வீமன் நடுவேயிட்டு வந்தனன். ஏழு மயிரும் விழுந்த ஏழிடங்களிலும் முறையே ஆகாயமளாவியமலையும், பெருங்கடலும், முள்மிகுந்த தாழை வனமும், மூங்கில்வனமும், வேலங்காடும், சேற்றுநிலமும், நண்மணற்காடும் உண்டாயின. இவற்றையெல்

லாம் அம்மிருகங்கடந்து வருவதற்குள் வீமசேனன் வேகமாய் யோடிவந்து அரண்மனையை யணுகி வாயிற் படிக்குள்ளே ஒருகாலை வைத்து வெளியிலிருந்த காலை எடுப்பதற்குள் அக்காலைப் புருஷாமிருகம் பிடித்துக்கொண்டது. அப்பொழுது புருஷாமிருகத்திற்கும் வீமனுக்கும் வாக்குவாதமுண்டாயிற்று; வீமன் தான் உள்ளே ஒரு காலைவைத்தபிறகு புருஷாமிருகந் தன்னைப் பிடித்தது அதுகொண்ட கோட்பாட்டிற்கே விரோதமென்றனன்; புருஷாமிருகமோ ஒருகால் வெளியிலிருந்தமையால் தான் பிடித்தது நியாயமே என்றது. வீமனும் மிருகமும் நெடுநேரம் வாதாடியும் முடிவுக்கு வாராமையால் மிருகம் வீமனை நோக்கி "வீமராஜனே! நியாயந் தவறாத சத்தியவானாகிய உன்னுடைய தமையன் தருமபுத்திரன் இவ்விஷயத்தில் எங்ஙனம் நியாயத்தீர்ப்புச் சொல்லுகிறானோ அவ்விதம் யான் ஒப்புக்கொள்ளுகிறேன்" என்று கூறிற்று. உடனே இருவரும் தருமபுத்திரனிடத்தில் தங்கள் வழக்கைக்கூறினர். தருமன் நடுவு நிலைமையிற் சிறிதும் வழுவாதவனாப், வீமன் ஒரு கால் உள்ளேயும் மற்றொருகால் வெளியேயும் வைத்திருந்தபொழுது வெளியிலிருந்த காலைப் புருஷாமிருகம் பிடித்துக்கொண்டதால் வீமனுடைய உடலிற் பாதி மிருகத்திற்குச் சொந்தமே என்று நேர்மையோடு கூறினான். இதனைக்கேட்ட புருஷாமிருகம் தருமபுத்திரனுடைய நேர்மைக்கும் புத்திக்கும் மனமகிழ்ந்து தருமனை நோக்கி உனக்கு வேண்டிய வரங்கேள், தருகிறேன் என்றது. தருமனும் புருஷாமிருகத்தைப் பணிந்து "மிருகமே! நீ வீமசேனனை ஒன்றுஞ் செய்யாமல்

விட்டு இராஜசூய யாகத்திற்கு வேண்டிய உதவியைச் செய்வாய்'' என்றனன். மிருகம் பின்னும் பதின்மடங்கு களிப்படைந்து வேண்டிய உதவிசெய்தங்கிருந்தது.

## 73. நைவினை நணுகேல்.

துன்பத்தை யுண்டாக்கும் வினையைச் செய்யாதே என்பதிதன் கருத்து.

மந்தரை என்னுங் கூனியின் தந்திரத்தால் மனந்திரிந்த கைகேசி தனது நாயகன் தசரதன் தனக்கு முன்னொருகாலத்திற் கொடுப்பதாக வாக்களித்திருந்த இரண்டு வரங்களில், ஒன்றினால் தனது குமாரனான பரதன் உலகத்தை அரசாளவும் மற்றொன்றினால் சீதா நாயகனான இராமன் காட்டிற்குப் போகவும் அருள் செய்யவேண்டுமென்று தசரதனைப் பலவந்தப்படுத்தினாள். தசரதன் அவளைநோக்கி "நீ எந்த வரங்கேட்டாலுந் தருகிறேன்; இராமன் காட்டிற் போகும்படியான அவ்வரமொன்றை மாத்திரமே கேளாதே; இராமனைப் பிரிந்து உயிர்வாழேன்'' என்று பலபலவிதமாய் வேண்டிக்கொண்டும் கைகேசி தனக்கு உண்டாகுங் கேட்டையுஞ் சிந்தியாதவளாய் இராமன் வனத்திற்குப் போகவேண்டும் என்று பிடிவாதம் செய்தனள். பிறகு ராமன் காட்டிற்குபோனான் என்றசொல் காதில் விழுந்ததும் தசரதன் உயிரைத் துறந்தான்; கைகேசியும் தனது மங்கலவணியை யிழந்தனள். அவள் தனக்குத் துன்பத்தை யுண்டாக்கும் வினையைத் தானே செய்துகொண்டனள்.

## 74. நொய்ய வுரையேல்.

அற்பமான சொற்களைப் பேசாதே என்பதிதன் பொருள்.

பாண்டவர்கள் சூதாடி நாடிழந்து காட்டிற்குப் போனபொழுது அவர்களைக் கண்ட முனிவரொருவர் அவர்களுடைய நிலைமைக்கு வருந்தித் தாமே துரியோதனனுக்கு நற்புத்தி புகட்டி நாட்டைமீட்டும் வாங்கிப் பாண்டவர்களுக்கு அளிக்கவேண்டும் என்று நல்ல எண்ணத்துடன் புறப்பட்டுத் துரியோதனன் சபைக்குச் சென்றனர். துரியோதனன் அவரைக் கண்டதும் யாரோ முனிவரொருவர் தன்னைக் காணவந்தாரென்று எண்ணி அவருக்கு அருக்கியபாத்திய ஆசமன்னிய மளித்து வீற்றிருக்கப் பெரியதோ ராசனமுந் தந்து நல்வரவு சேட்டனன். வந்த முனிவர் இவற்றையெல்லாங் கண்டு இதுவே நல்லசமயமென்றெண்ணிப் பாண்டவர்களுடைய நாட்டை யபகரித்துக்கொண்டு அவர்களை காட்டிற்றுரத்தியதும் பாஞ்சாலியை நடுச்சபையிலிழுத்துத் துகிலுரிந்து மானபங்கஞ் செய்ததும் பெரும்பாவமென்று நீண்டதோ ருபந்நியாசஞ் செய்ததுமன்றி நாட்டை மறுபடியும் பாண்டவர்க் களிக்குமாறு நற்புத்தி புகட்டினூர். துரியோதனனோ செவிடன் காதிற் சங்கூதியதுபோ லொன்றுங் கேளாதவனாய் முனிவரை நோக்கி "முனியே! உமக்கு வேறு வேலையில்லை போலும். முனிவராகிய உமக்கு அரசாட்சி முறை யாதுதெரியும்? எங்கள் தொழிலில் நீரேன் தலையிடுகிறீர்? பாண்டவர்கள் வயிற்றுப் பிழைப்பற்ற

உம்மை யனுப்பினூர் போலும்'' என்று பலவிதமாய் ஏளனஞ்செய்து அற்பமானமொழி பேசினூன். இதைக் கேட்டதும் முனிவர்க்குக் கோபமூண்டு "என்னை ஏள னஞ்செய்த நீ குருக்ஷேத்திரத்திற் புத்திரமித்திராதிய ரோடு குருதிகக்கி யிறப்பாய்'' என்று கடுஞ்சாபமிட்டுப் போயினர்.

## 75. நோய்க் கிடங்கோடேல்.

நோயினுக்கிடங் கொடுத்தால் அதுவேரூன்றிக் கேட் டினைப்பயக்கும். ஆதலால் அதற்கிடங்கொடாம லப் பொழுதைக் கப்பொழுதே அதனைப் பரிகரிக்கவேண் டும். பலர் மருந்து கைப்பாயிருப்பதால் நோயினுக்குத் தக்க ஔஷதம் உட்கொள்ளாமல் அதற்கு இடங்கொடு ப்பதை நாம் பலமுறையும் காண்கிறோம்; அதுமுற்றி லுந்தவறே.

முற்காலத்தில் அரசனொருவன் தனக்கு ஏதோ அசா த்திய ரோகமிருப்பதாக வீண் எண்ணங்கொண்டு கவ லையிலாழ்ந்திருந்தனன். அவன் கவலையே அவனுக்கு நோயே தவிர வேறொன்றுமில்லை. யார் என்ன மரு ந்து கொடுத்தாலும் நோய் குணமாகாதென்ற எண் ணமே மேலிட்டிருந்ததால் அவனுக்குக் கவலையும் மேலிட்டு நாளுக்குநாள் தேகம் இளைத்துப் போயிற்று. அவனுடைய மனைவிமக்களும் மற்ற பந்துக்களும் மந் திரி முதலாயினோரும் இன்னது செய்வதென்றறியாமல் வருந்தினர்கள். எந்த வைத்தியனாவது அவனுக்கு வியாதி யொன்றுமில்லை யென்று சொன்னால், அவன் கடுங்கோபங்கொண்டு அவ்வைத்தியனை நன்றாக அடி

த்துத் தனது தேசத்தைவிட்டு வெருட்டிவிடுவான். நோய்க்கிடங்கொடுத்த அரசன் உலகத்தில் எவருங் கண்டறியாத ரோகங்களெல்லாந் தன்னிடத்திருப்பதாக எண்ணியதால் அவ்வியாதிகளும் அவனிடத்திலுண்டாயின; எவற்றிற்கும் காரணம் மனமன்றோ?

தென்தேயத்திலிருந்த புத்திமானான வைத்தியனொருவன் இவ்வரசன் விருத்தாந்தத்தைக் கேள்வியுற்று அவனைச் சொஸ்தஞ் செய்தால் தனக்கு நல்லபுகழுண்டென்று கருதி அவனிடஞ்சென்று அவனைச் சின்னாளிற் குணமடைவிப்பதாகக் கூறினதுமன்றி யவன் கண்முன் சில அரியநோய்களைச் சொஸ்தஞ் செய்து காட்டுவதாகவுங் கூறினான். அரசன் அதற்கு ஒப்புக்கொண்டு முதலில் அவ்வைத்தியனுடைய திறத்தைப் பரிசீலனை செய்யவெண்ணிச் சில அரிய நோயாளிகளைச் சொஸ்தஞ் செய்துகாட்டச் சொல்லினன். மறுநாள் பல பெரிய கடாரங்களிற் சுத்தமான தண்ணீரை நிறைக்கச் சொல்லிப் பெருத்த நோயாளிகளைப்போல் வேடம் போட்டுத் தன்னுடன் கொண்டுவந்த சிலரை அரசன் கண்முன் அக்கடாரங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவனை முழுகச்செய்து தான் ஏதோ மந்திரஞ் செபிப்பதுபோல் முணுமுணுத்துக் கொண்டிருந்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் நோயாளிகளனைவரும் அரோக திடகாத்திர முடையவர்களாய் வெளியேறி அரசனை வணங்கி வைத்தியனை வாழ்த்திப் போயினர்கள். ஆச்சரியமுற்ற அரசன் வைத்தியனுடைய சாமர்த்தியத்திற்கு மெச்சித் தன்னையும் சொஸ்தப்படுத்த அவனை மிகவும் வேண்டினன். உடனே வைத்தியன், “உங்களு

க்கு அநேக வியாதிகள் இருக்கிறபடியால் சில தினங்கள் அடுத்து அடுத்துக் கடாரநீரில் முழுகவேண்டும்'' என்று கூறி அரசனை நல்லநீரில் ஸ்நானஞ் செய்துவைத்து நல்லுடை யுடுக்கச்செய்து நல்ல சாத்துவிக ஆகாரத்தை யுண்ணச் செய்தனன். அரசன் வைத்தியத்தில் நம்பிக்கைகொண்டு நோய்க்கிடங்கொடாத காரணத்தினால் சின்னாளிற் சௌக்கிய மடைந்தனன்.

## 76. பழிப்பன பகரேல்.

பிறரைப் பழித்துரையாதே என்பதிதன் கருத்தாகும். இதற்குப் பிறரால் பழிக்கப்படுஞ் சொற்களைப் பேசாதே என்று பொருள் கூறுதலுமாம்.

முன்னொருகாலத்திற் காசிபரென்னு முனிவரர் புத்திரகாமேஷ்டி யென்னும் யாகஞ்செய்யத் தொடங்கினர். அந்த யாகத்தைச் சரியாகச்செய்து நிறைவேற்றும்படி மகா தவச்சிரேஷ்டர்களாகிய வாலகில்லியரென்னும் எண்ணாயிரம் முனிவர்களை அவர் பிரார்த்தித்துக் கேட்டுக்கொண்டனர். அந்த வாலகில்லியர்கள் யாவரும் அங்குஷ்டப் பிரமாணமுள்ளவர்கள். காசிபர் வேண்டுகோளுக்கிசைந்த வாலகில்லியர்கள் தங்கள் தங்களாற் சுமக்கக்கூடிய யாகத் திரவியங்களையெடுத்துக்கொண்டு யாகசாலைக்கு வந்தனர். வரும்வழியில் சுவர்க்காதிபதியான இந்திரன் அவர்களைப் பார்த்து அவர்களுடைய மிகச்சிறிய உருவத்தையும் கொஞ்சம் கொஞ்சமாக அவரெடுத்துச்செல்லும் யாகத்திரவியத்தையும் கண்டு பெருநகைகொண்டு இந்தச் சிறியோர்செய்யும் யாகம் என்ன பயனைத்தரும் என்று

அவமதித்துப் பேசினான். இதை யுணர்ந்த வாலகில்லியர்கள் யாகஞ் செய்கின்றகாலத்தில் இந்த யாகத்தில் உற்பவிக்கும் புதல்வன் இந்திரனுக்கு இந்திரனாகட்டும் என்ற பொருள் படும்படி மந்திரங்கூறி அவி சொரிந்தனர். இதை அறிந்த இந்திரன் மிக அச்சங்கொண்டு ஓடோடியும் வந்து வாலகில்லியர்களுடைய பாதத்தில் விழுந்துவணங்கித் தான் செய்த அவமதிப்பைப் பொறுத்தருளும்படிக் கேட்டுக்கொண்டனன். சான்றோராகிய வாலகில்லியரும் அவன் செய்த பிழையைப் பொறுத்தருளி இந்த யாகத்தில் உதிப்பவன் பட்சிகளுக்கு இந்திரனாகட்டும் என்று மந்திரத்தை மாற்றிக் கூறினார்கள். அந்த யாகத்திலேதான் கருடன் பிறந்தான்.

## 77. பாம்போடு பழகேல்.

பாம்போடு பழகுதல் கூடாது என்றதோடு பாம்பு போன்ற கொடியர்களோடு பழகாதே என்றும் பொருள் பட இது கூறப்பட்டது. பாம்புக்குப் பால் வார்த்து வளர்த்தாலும் அது படுவிஷத்தையே தரும் சுபாவமுடையது; அதுபோலச் செய்ந்நன்றி யற்ற துரோகிகள் ஒருவர்செய்த நன்றியை மறப்பதோடு அவருக்குத் தீங்குமியற்றுவார்கள். ஆதலால் அத்தகைய தீயோருறவு எக்காலத்தும் நாசத்திற் கேதுவாகும்.

கலி பகவானது வஞ்சனையால் நளன் புட்கரனோடு சூதாடித்தோற்று நாட்டையிழந்து மக்களைப்பிரிந்து மனைவியோடு காட்டிலலைந்துகொண்டிருக்கையில் ஒரு பாழ் மண்டபத்தைக் கண்ணுற்று அங்குத் துயில்கையில் தன் மனைவி தமயந்தியைத் தனியே நீத்தகன்ற

னன். தனியேசெல்லும் நளன் காட்டுத் தீயினிடையே தவிக்கும் கார்க்கோடகன் என்னும் நாகத்தைக் கண்டு பரிதாபங்கொண்டு, அக்கினிபகவான் தனக்குக் கொடுத்தவரத்தால் நெருப்புத் தன்னை சுடாதாதலின், அந்நெருப்பினிடையே போய்க் கார்க்கோடகனை எடுத்து வெளிக்கொணர்ந்து காப்பாற்றினான். கார்க்கோடகனோ சிறிதும் நன்றியற்றவனாய் நளனைநோக்கி "பத்தடி அளந்துசென்று என்னைக் கீழேவிடுவாயாக" என்று கேட்க, அவனும் அங்ஙனமே நடந்து தசவென்று சொல்லிக் கீழேவிடப் போகுமளவில் கார்க்கோடகன் அவனைக் கடித்துவிட்டனன். உடனே நளன் தன்னுருமாறி விகாரமாய்க் குறுகிய வாகுகனாயினான். தீயோருக்கு உபகாரஞ் செய்தாலும் அவர் தீமையையே இயற்றுவார்.

## 78. பிழைபடச் சொல்லேல்.

குற்றமுண்டாகப் பேசாதே என்பதிதன் பொருள். பாரதம் பதினைந்தாநாள் யுத்தத்தில் துரோணாசாரியர் மிகவும் பிரபலமான யுத்தத்தைப் புரிந்து வருகையில் ஸ்ரீ கிருஷ்ணன் அவரை வெல்லுதற்குவேண்டிய உபாயத்தைநாடித் தருமனையடைந்து "நீ துரோணர் எதிரிற்சென்று அசுவத்தாமா இறந்தான் என்று உன்வாயாற் சொன்னாலன்றித் துரோணரை வெல்லமுடியாது" என்றனன். பொய்பேசச் சம்மதியாதவனாய் தருமன் மாட்டேன் என்று மறுத்துவிட்டான். கிருஷ்ணன், "தருமபுத்திரா! நீ அங்ஙனங்கூறச் சம்மதியாவிடினும், அசுவத்தாமா என்னும் பட்டத்துயானையை வீமசேனன் கொன்றுள்ளானாகையால் நீ துரோணர் முன்சென்று

அசுவத்தாமா என்னும் பட்டத்துயானை இறந்தது. என்னும் பொருள்பட, 'அசுவத்தமா அதா குஞ்சர :' என்று கூறிவிடு" என்று சொல்லினன். தருமபுத்திரன் ஒருவாறு மனந்தேறி ஒப்புக்கொண்டு துரோணர் முன்போய் யாவருங்கேட்க 'அசுவத்தாமா அதா குஞ் சர' என்று உரத்தகுரலிற் கூறினன்; அப்பொழுது குஞ்சர : என்னுஞ் சொல் தருமபுத்திரர் வாயைவிட்டு வெளிப்படுமுன் கிருஷ்ணன் தனது பாஞ்சசன்னியம் என்னுஞ் சங்கத்தை யெடுத்து முழக்கினன். அத னல் குஞ்சர : என்றசொல் துரோணர்காதில் விழ வில்லை; அசுவத்தாமா அதா என்ற சொற்களைமாத் ரங் கேட்ட துரோணர், மகா சத்தியவனாகிய தரும புத்திரன் கூறியதால் உண்மையாகவே தன் புதல்வன் அசுவத்தாமன் இறந்தானென்று எண்ணிப் புத்திர சோகத்தால்மனமயங்கி வில்லையும் அம்பையும் எறிந்துவி ட்டுத்தேரின்மேல்சாய்ந்து யுத்தபூமியையும் தன்னையும் மறந்திருந்தனர். அச்சமயத்தில் திஷ்டத்துய்மன் என் னும் பெயருடைய பாண்டவ சேனதிபதி அவரைத் தலைதுணித்தான். தருமபுத்திரன் தனது ஆயுள்முடி வில் சொர்க்காரோகணமாகும் காலத்தில் நரகலோகத் தைக் கண்ணுற்றுச் செல்லநேர்ந்தது. அப்பொழுது தருமன் தன்னருகிலிருந்த யமனைநோக்கி யான் எப் பாவத்தால் இந்நரகத்தைத் தரிசிக்க நேர்ந்தது என்று கேட்க, அதற்கு யமன் தருமபுத்திரா, நீ அசுவத்தாமா அதாகுஞ்சரா : என்று பிழைபடக் கூறியதால் உண் டான பாவமே இதற்குக் காரணம் என்றனன்.

முன்னொருகாலத்தில் பல இருடியர்களும் முனிவர்

களும் கங்கைக்கரையில் ஒருங்குகூடி யிருந்தபொழுது வியாசமுனிவர் பரம்பொருளைத் துணிந்துகூறத் தொடங்கிக் கையிற் கங்கைநீர் எடுத்து உயர்த்திப் பொய்ச் சூளுரைத்தனர்; பிழைபடக்கூறிய குற்றத்தால் அவர் உயர்த்திய கைபிரண்டும் தம்பித்து நின்றன.

## 79. வீடு பேறகில்.

புகழுண்டாக உலகத்தில் வாழ்வாயாக என்பது பொருள்.

குலோத்துங்க சோழன் அரசாண்டகாலத்தில் அவனுடைய ஆசிரியனாகிய ஒட்டக்கூத்தன் என்ற பெயருடைய புலவன் சமஸ்தான வித்துவானுயிருந்தான். அவன் செங்குந்தர் மரபினைச் சேர்ந்தவன். தனக்கும் தன் மரபினோர்க்கும் புகழ் உண்டாகக்கருதிய அவன் செங்குந்தர் யாவரையும் அழைத்து 'உங்கள் பெயர் உலகில் நிலைபெற நிற்கவேண்டுமானால் உங்கள் வம்சத்தில் உள்ள தலைப்பிள்ளைகளின் தலைகளைக் காளிதேவியின் சந்நிதியில் பலியாகவெட்டித் தரவேண்டும் என்று கேட்டுக்கொண்டனன். செங்குந்தர் அனைவரும் அந்த அரிய செயற்கும் மனமொப்பித் தங்களுடைய தலைப்பிள்ளைகளின் தலையைக் கொடுத்தனர். ஒட்டக்கூத்தன் அந்தத் தலைகளை வீரசிம்மாசனமாக அமைத்துக் கொண்டு அதன்மேல் வீற்றிருந்து ஈட்டியெழுபது என்னும் நூலைப்பாடி முடித்துக் காளியைப் பிரார்த்தித்தும் காளிதேவி பிரத்தியக்ஷமாகாமலிருக்க அவன் தனது கையிலுள்ள ஈட்டியை நட்டு அதன்மேல் விழப் போகுமளவில் காளி அவனுடைய நெஞ்சுறுதிக்கு மெச்சிப்

பிரத்தியக்ஷமாகத் தோன்றினள். ஒட்டக்கூத்தன் காளி தேவியின் அனுக்கிரகத்தால் வெட்டுண்ட தலைகள் அத னதன் உடலோடு ஒட்டிக்கொண்டு உயிர்பெற்றெழச் செய்தனன். அதைக்கண்ட யாவரும் அதிசயித்து அவனைப் புகழ்ந்தார்கள். செங்குந்தர்கள் இறந்த குழந்தைகள் மீட்டும் உயிர்பெற்றதைக் கண்டு பேரா னந்தமடைந்தார்கள். வெட்டுண்ட தலையும் உடலும் ஒன்றுபட்டு ஒட்டும்படிப் பாடியதனால் அவனுக்கு ஒட் டக்கூத்தன் என்றபெயர் வாய்த்ததென்ப. தானழிந் தும் தன்பெயர் உலகிலழியாதிருத்தற் பொருட்டு ஒட் டக்கூத்தன் இவ்வரியசெயலைச் செய்து முடித்தனன்.

## 80. புகழ்ந்தாரைப் போற்றிவாழ்.

தம்மைப் புகழ்ந்தவரைத் தாம் காப்பாற்றி வாழ வேண்டும் என்பதிதனாற் கூறப்பட்டது.

தகடூர் என்னும் ஊரில் அதியமான் நெடுமானஞ்சி யென்ற பெயர்கொண்ட அரசன் முற்காலத்தில் அரசு புரிந்துவந்தனன்; அவன் மிகுந்த பராக்கிரமசாலி; கடையெழுவள்ளல்களு ளொருவனுகக் கொண்டாடப் படும் மிகுந்த ஈகைக்குணமுடையவன். ஔவையி னுடைய கல்வி கேள்வி யறிவொழுக்கங்களைக்கண்டு மெச்சி அவளை யாதரித்துவந்த அரசர்களுள் இவனே முதன்மையானவன். ஔவை இவனைப் பல அமயங் களிற் புகழ்ந்து பாடியுள்ளாள். இவனும் தன்னைப் புகழ்ந்த ஔவையைப் பாதுகாத்தல் தன்னுடைய கடமையென்று அவளை மிகவும் பரிவுடன் போற்றி வந் தனன். அவனுக்கு அநேகம் நூற்றாண்டுகளுக் கொரு முறை பழுக்கும் அருமையான கருநெல்லிக்கனி

யொன்று கிடைத்தது; அதனை யுண்டோர் நெடுங்காலஞ் சீவித்திருப்பார்கள். அப்படிப்பட்ட நெல்லிக்கனியைத் தானுண்ணுமல் ஔவைக்குக் கொடுத்தனன். இதனுல் அதியமான் நெடுமானஞ்சி ஔவையை எவ்வளவு உயர்வாகப் பாராட்டியிருந்தனன் என்பது விளங்குகின்றது. அதியமான் தன்னைக்காட்டிலும் ஔவையே உலகத்திற்கு மிகுதியும் பயன்படுபவள் என்றுகருதி அவள் சாதலினின்றும் நீங்கும்பொருட்டு அவ்வரிய கனியைக் கொடுத்தனன். புகழ்ந்தாரைப்போற்றி வாழ்ந்தவர்களுள் அதியமான் சிறந்தவன் என்பதற்குத் தடையுமுண்டோ?

## 81. பூமி திருத்தியுண்.

நிலத்தைப் பண்படுத்தி யுழுது பயிர்செய்து உண்ணுவாயாக என்பதிதன் பொருள். மற்றைப் பிழைப்புக்களினும் உழுதுண்டு வாழ்வார் வாழ்க்கையே மிகச் சிறப்புடையது. உழவுத்தொழில் செய்வோர் தம்மையும் பாதுகாத்துக்கொண்டு பிறரையும் பாதுகாக்கும் பெருமையுடையவர்கள். உழுதுண்டு வாழ்வாருடைய உயர்வினையும் உழவுத்தொழிலின் சிறப்பையும் மகாகவியாகிய கம்பன் தனது ஏரெழுபது என்னும் நூலிற் கற்பனை நயம்பொருந்த விளக்கிக்காட்டியதே பூமிதிருத்தியுண்ணுதலின் மேன்மையைத் தெளிவாகப் புலப்படுத்தும்.

## 82. பெரியாரைத் துணைக்கோள்.

பெரியாரைத் துணையாகக் கொண்டவனுக்குத் தீங்கு வராது; வந்தாலும் அவருதவியால் உடனே நீங்கும்.

முற்காலத்தில் மதுரைமா நகரில் பாணபத்திரனென்ற பெயர்கொண்ட சிவபக்தன் ஒருவனிருந்தான். அவன் சிறந்த சங்கீதவித்வான். மதுரை யம்பதியிற் கோயில்கொண்டருளிய சோமசுந்தரக் கடவுளை இரவும் பகலும் மனமுருகிப் பாடுதலேயன்றி வேறொரு தொழிலும் புரியான். இவனைப் பாண்டியனும் பெருமையாகப் பாராட்டி அன்புடன் தன்னுடைய சமஸ்தானத்தைச் சேர்ந்த சங்கீதவித்துவானாக அமைத்துப் பல சிறப்புஞ் செய்து போற்றிவந்தனன். எத்தகைய உயர்நிலையடைந்தும் பாணபத்திரன் சிவபெருமானுடைய திருவடிகளையே துணையெனக்கருதி அவரையே சிந்தித்து வாழ்ந்திருந்தனன். இப்படியிருக்குநாளில் வடதேசத்திலிருந்து ஏமநாத னென்னும் பெயரினையுடைய சங்கீதவித்துவானொருவன் பல இடங்களிலும் பெற்ற விருதுகளோடு பாண்டியன் சபையை யடைந்து தன்னுடைய அருமையான கல்வித்திறத்தைக் காட்டினதுமன்றித் தன்னை இசையில் வெல்பவர்கள் எவருமில்லையென்று பெருமைகூறிக் கூடுமானாற் சமஸ்தானகான பண்டிதனாகிய பாணபத்திரன் எனக்கிணையாகப் பாடமுடியுமோ என்று வாய்மதம்பேசிப் பாணபத்திரனை இசைவாதிற்கு அறைகூவி யழைத்தனன். ஏமநாதனுடைய நிகரற்ற சங்கீதத்தைக் கேட்ட பாணபத்திரன் இவனுடன் எங்ஙனம் இசைவாதிடுவதென்ற ஏக்கத்தைக் கொண்டவனாயினும் எல்லாஞ் சிவன் செயலென்றெண்ணி மறுநாள் அவனோடு வாதம் செய்வதாக அரசன் முன்னிலையில் ஒப்புக்கொண்டு சோமசுந்தரக் கடவுளின் ஆலயம்புகுந்து வாயாரக் கடவுளைத் துதித்து

விட்டு தன் வீட்டுக்குப் போயினான். ஏமநாதனோ அரசன்செய்த மரியாதைகளைப் பெற்றுத் தனக்கென்று அமைக்கப்பெற்ற விடுதியிற்போய்த் தங்கியிருந்தனன். அப்பொழுது அடியார்க்கெளியனாகிய சோமசுந்தரக் கடவுள் பக்தனாகிய பாணபத்திரனைக் காக்க வெண்ணித் தான் ஒரு விறகுதலையனைப்போலக் கோலங்கொண்டு விறகுகட்டைத் தலையிற் சுமந்து வீதிதோறும் அரு விலை பகர்ந்துகொண்டே ஏமநாதன் றங்கியிருந்த விடுதியை யடைந்து தலைவாயிற்றிண்ணையில் ஒருபுறம் விறகுகட்டை யிறக்கிவிட்டுத் தானும் களைப்பாறுவான் போல இருந்தனர். சிறிது பொழுதிற்கெல்லாம் அவர் சாதாரி என்ற இராகத்தைப் பாடத் தொடங்கினர்; இசையே யுருவெனக்கொண்ட பெருமானே பாடினால் அந்த இசைக்கு இசைந்த இசையுமுண்டோ? அந்தக் கானத்தாற் கல்லுமுருகின, பட்டமரமும் விட்டுத் தளிர்த்தன, சராசரப்பொருள்கள் யாவும் தம் வயமற்று இசைமயமாய் நின்றன. இந்த அற்புத தேவகானத்தைக்கேட்ட ஏமநாதன் வெளியேவந்து விறகுதலையனைக்கண்டு "இவ்விதமான ஆச்சரிய கானஞ்செய்யும் நீ யாவனோ?" என்று கேட்டனன். அதற்கு விறகுதலையன், "ஐயா! யான் இவ்வூரில் வாழ்பவன், சோமசுந்தரப் பெயரினேன், பாண்டியனவைக்களத்து இசைப்புலவனாகிய பாணபத்திரனுக்கு அடிமை, எனக்கு வயது மூத்தமையால் பாணபத்திரன் இனி நீ இசை பாடுதற்குத் தகுதியில்லையென்று என்னைத் தள்ளிவிட்டான். அதுமுதல் விறகுவெட்டிச் சுமந்து வாழ்ந்து வருகிறேன்" என்று விடைகூறிவிட்டு விறகினையும் எடுத்

துப்போயினன். இதைக்கேட்ட ஏமநாதன் “ இசைக்குத் தகுதியற்றவன் என்று தள்ளுண்டவன் பாடுங் கானமே இத்தகையதாதலின், பாணபத்திரனை இசையால் வெல்லவல்லவர் யாவரோ?'' என்று கவலைகொண்டு அன்றிரவே ஒருவருக்கும் சொல்லாமல் மதுரையைவிட்டு ஓடிப்போனான். பெரியாரைத் துணைக்கொண்ட பாணபத்திரன் ஒரு குறைவுமின்றி வாழ்ந்திருந்தனன்.

## 83. பேதைமை யகற்று.

அஞ்ஞானத்தை நீக்கு என்பதிதன் பொருள். பேதைமை என்பது அறிவின்மையாம்.

ஆற்றங்கரை யோரமாக இருந்த நாவன்மரமொன்றில் சுமுகனென்னும் பெயருடைய வானரமொன்று வாழ்ந்திருந்தது. ஆற்றிலுள்ள பெரிய முதலையொன்றிற்கும் அவ்வானரத்திற்கும் மிகுந்த நட்புண்டாயிருந்தமையால் முதலை அம் மரத்தடியில் வரும்பொழுதெல்லாம் வானரம் அதற்கு மிகுந்த இனிமையான நாவற்பழங்களைப் பறித்துப் போடுவதுண்டு. ஒருநாள் முதலை அங்ஙனம் வானரமளித்த பழங்களுள் தான் தின்றவைபோக மிகுந்தவற்றைத் தன் வீட்டிலிருக்கும் மனையாளாகிய பெண் முதலைக்குக் கொண்டுபோய்க் கொடுத்தது. பெண் முதலை அவற்றைத் தின்று மனமகிழ்ந்து பழங்களைக் கொண்டாடியதுமன்றி இவற்றை யெங்ஙனம் பெற்றனை யென்றுகேட்க, முதலை “ பெண்ணே ! சுமுகனென்ற பெயருடைய வானரமொன்று எனக்குத் தோழனாக அமைந்துள்ளது. அது குடியிருக்கும் நாவன் மரத்தின் பழங்களிவை. நண்பனாகையால் எனக்களித்

தனன் ; யானுனக்குக் கொணர்ந்தேன்'' என்றது. கேட்ட பெண்முதலை "இப்பழங்களே இவ்வளவு சுவையுள்ளவையாயிருந்தால் அவற்றை யுண்டுவாழ்பவனுடைய ஈரல் எவ்வளவோ மிகுந்த சுவையோடிருக்கும். அதனைக் கட்டாயம் யான் தின்னவேண்டும்'' என்றது. ஆண்முதலை நண்பனுக்கு விரோதஞ்செய்தல் கூடாதென்று பல தருமங்களை யெடுத்துக்காட்டியும் அதன் மனைவி யொன்றையுங் கேளாமல் சுமுகவானரத்தின் ஈரலைத் தின்றாலொழிய உயிர்வாழேன் என்று பிடிவாதம் பண்ணிற்று. ஆண்முதலை நெடுநேரம் யோசித்தும் வகையொன்றுங் காணாமல் சுமுகனைத் தன் மனைவியின்பாற் கொண்டுவந்துவிடத் தீர்மானித்து நாவன் மரத்தினடியை யடைந்து சுமுகனைக் கூவியழைத்து "நண்பா! நீ யளித்த பழங்களை என் மனைவிக்களித்தேன். அவள் அவற்றை யுண்டுமகிழ்ந்து உன்னைப் பார்க்கவேண்டுமென்று பிடிவாதம் செய்கிறாள். நீ அவசியம் வந்து அவளைத் திருப்தி செய்யவேண்டும்'' என்று வேண்டிக்கொண்டது. குரங்கு தனக்குத் தண்ணீரிற் சிறிதும் பழக்கமில்லை யாதலால் தான் வரமுடியாதென்று மறுத்தும் முதலை அதனைத் தன் முதுகின் மேலேற்றிப் போவதாக ஒப்புக்கொண்டது. அப்பொழுது வானரம் வேறு சொல்ல வகையின்றி, அதன் மேலேறி யுட்கார்ந்தது ; முதலை யதனைச் சுமந்து நீந்திச்சென்றது. பாதிதூரம் போனதும் முதலை வானரத்தை நோக்கி "சுமுகா! உன்னைப் பார்க்க எனக்கு வருத்தமாயிருக்கிறது. நீ யுயிரோடிருக்க இன்னும் சில நிமிஷங்களே உள்ளன. உனது இஷ்டதேவதை

யைப் பிரார்த்தித்துக்கொள்'' என்றது. வானரம் "முதலையே! எனக்கு என்ன ஆபத்து" என்று கேட்க, முதலை, "நண்பா! என் மனைவியை உனக்கு யமனாகக் கருதுவாய். அவள் உன்னுடைய ஈரலைத் தின்னும் பொருட்டு உன்னைக் கொண்டுவரச் சொல்லினள். நான் நண்பனுக்குத் துரோகஞ்செய்யமாட்டேன் என்று பல முறை கூறியும் அவள் பிடிவாதஞ்செய்ததால் உன்னைக் கொண்டுபோகிறேன்'' என்றது. அதுகேட்ட குரங்கு முதலையை நோக்கி, "சிநேகா! இவ்வளவு தானா? இதை முன்னமே சொல்லக்கூடாதா? என்னுடைய ஈரலைப் பத்திரமாய் மரத்தில்வைத்து வந்துவிட்டேனே. முதலிலேயே சொன்னால் ஈரலை உடனே உன்னிடம் கொடுத்திருப்பேன். ஈரலின்றிப்போனால் உன் மனைவி என்னைக் கோபிப்பாள். இனியாவது உடனே மரத்தினடியில் என்னைக் கொண்டுபோ. ஒரு நொடியில் ஈரலையெடுத்து வருகிறேன். இனிச்சிறிதுந் தாமதியாதே. உன் மனைவி காத்திருப்பாள்'' என்றது. அதுகேட்ட முதலை, காரியஞ் சுலபமாய் முடிகிறதே யென்ற களிப்புடன் வானரத்தைச் சுமந்துகொண்டு நாவன் மரத்தடியில் வந்தது. வானரம் ஒரேபாய்ச்சலாய் நமன் கையிலிருந்து தப்பிப் பிழைத்தோம் என்ற களிப்புடன் மரத்திற்றாவி உயாக்கிளையிலுட்கார்ந்து கொண்டது. முதலை நெடுநேரங்காத்தும் குரங்கு வாராததால் "சுமுகா! ஏன் இத்தனை நாழி? நீ வருவதற்கு முடியாவிட்டால் ஈரலையாயினும் கொடு'' என்று கேட்டது. குரங்கு முதலையை நோக்கி "மூடா! என்னுடைய நல்லகாலத்தால் உயிர் தப்பினேன். பெண்

புத்திகேட்டு நண்பனுகிய என்னைக் கொல்லநினைத்த உன்னிலும் கொடியோனுண்டோ? ஈரல் உடம்பை விட்டு வெளியேயிருக்குமா? பேதாய்! உன்னுடைய அறிவின்மை என்னைக் காப்பாற்றிற்று. இனி இவ் விடம் நில்லாதே போ" என்றது. முதலை, கைக் கெட்டியது வாய்க்கெட்டவில்லையேயென்று வருந்தி ஏமாந்து போனதற்காக வெட்கத்துடன் திரும்பி மனை வியிடம்வந்து நடந்த விருத்தாந்தங்களைச் சொல்லிற்று. அது கணவன்மேல் மிகுந்த கோபங்கொண்டு பட்டினி கிடந்து உயிரையிழந்தது. மனைவியை யிழந்த துயரால் முதலையும் உயிரைவிட்டது. சுமுகவானரம் சுகமாய் வாழ்ந்தது.

## 84. பையலோ டிணங்கேல்.

சிறு பிள்ளைகளோடு சேரக்கூடாது என்பதிதன் பொருள். முதிரா அறிவினையுடைய சிறுவர்கள் பெருந்தன்மையற்ற செயல்களைச் செய்தல் கூடும்; தக்கது இன்ன தகாதன இன்ன என்று பகுத்தறியும் தன்மை அவர்களுக்கு இலதாதலின் அவர்களோடு கூடுமொருவனுக்கு அவமானமும் சில வேளைகளிற் றுன்பமும் உண்டாகும். சில சமயங்களில் அவர்கள் பெரிய இரகசியங்களின் அருமை தெரியாமல் அவ ற்றை வெளியிட்டு ஆபத்தினை யுண்டாக்குவார்கள்.

முற்காலத்திற் பண்டாரமொருவன் தான் நெடுங்கால மாகப் பலரிடத்திலும் யாசகமாகப்பெற்ற பொருள்களை யெல்லாம் பொற்காசுகளாகமாற்றி அவற்றை ஒரு கந்தையில் முடிந்து மிகுந்த இரகசியமாக வைத்திருந் தனன். பண்டாரத்திடத்தில் பொற்காசுகளிருப்பதை

எப்படியோ அறிந்துகொண்ட ஆஷாடபூதி என்னும் பையனொருவன் பண்டாரத்தை யணுகி அவன் காலில்விழுந்து தன்னைச் சீடனாக அங்கீகரித்துக் காப்பாற்றும்படி மிகவும் வேண்டிக்கொண்டனன். அதற்கு அவனும் ஒப்புக்கொண்டான். குருவுஞ் சீடனுமாகப் பல ஊர்தோறும் யாத்திரைசெய்து வருகையில் ஒரு கிருகஸ்தன் இவர்களை உபசரித்து விருந்து செய்தனுப்பினான். சிறிதுதூரஞ் சென்றதும் ஆஷாடபூதி தலையில் ஒரு துரும்பைவைத்துக்கொண்டு பண்டாரத்தின் காலில்விழுந்து "ஐயா! நாம் உணவுகொண்ட கிருகஸ்தன் வீட்டுத்துரும்பு என் தலையில் ஒட்டிக்கொண்டு வந்துவிட்டது. உண்டவீட்டிற் கிரண்டகஞ் செய்தவனானேன். அன்னமிட்டவன் வீட்டிற் கன்னமிட்ட தோஷம் எனக்குச் சம்பவித்துவிட்டது. இந்தத் துரும்பை அவன் வீட்டிற் கொண்டுபோய்ப் போட்டுவிட்டு உடனே ஓடோடியும் வந்துவிடுகிறேன். தயவுசெய்து உத்தரவுகொடுங்கள்" என்று அழுது கேட்டனன். குருவும் தன்னுடைய அருமையான சீடனுடைய உத்தமகுணத்திற்கு வியந்து உத்தரவளித்தனன். ஆஷாடபூதியும் தன் குதிகால் பிடரியிற்படவோடிப்போய்த் துரும்பை யெறிந்துவிட்டுச் சிறிது நேரங்கழித்து மீண்டு தன் குருவையடைந்தான். குரு அதுமுதல் பாசொத்துக்கு ஆசைப்படாத பரம புருஷனாகிய தன்னுடைய சீடனிடத்து முழுநம்பிக்கை வைத்துவிட்டனன்.

ஒரு நாள் பண்டாரம் தன்னுடைய உயிருக்குயிராய் வைத்துக் காப்பாற்றும் பொன் முடிப்பை ஆஷாடபூதி

கையிற் கொடுத்துவிட்டுக் காலேக்கடன் முடிக்கச் சிறிது தூரம் போயினன். ஆஷாடபூதி இதுதான் நல்லசமய மென்று பொன் முடிப்புடன் ஓட்டமெடுத்தான். சிறிது பொழுதிற்கெல்லாம் பண்டாரம் வந்துபார்க்கத் தன் னருமைச் சீடப்பையனைக் காணமல் திகைத்தனன். அப்பொழுதுதான் அவனுக்கு ஆஷாடபூதியின் உண் மை வெளியாயிற்று.

## 85. பொருடனைப் போற்றிவாழ்.

பொருளைத் துர்விநியோகப்படுத்தாமற் காப்பாற்றித் தானுமுண்டு சற்பாத்திரத்திற் செலவிட்டு வாழவே ண்டுமென்பது இதன் கருத்து. தருமஞ்செய்வதற்கும் பொருள்வேண்டியது அத்தியாவசியம்; ஆதலாற் பொ ருளைக் காப்பாற்றவேண்டியதும் அவசியமாயிற்று. பொ ருளுள்ளவனுக்கு இவ்வுலகத்தில் சாதிக்கமுடியாத விஷ யமொன்றுமில்லை என்று பெரியார்கள் கூறியுள்ளார்கள். பொருளுள்ளகாலத்தில் வலிமை மிக்கவராயிருந்தவர் கள் பொருளையிழந்தகாலத்திற் றம் வலிமையற்றுப் போவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

பண்டாரமொருவன் தான் ஊரிற் பிச்சையெடுத்த சோற்றில் உண்டு மிகுந்ததை யொரு கப்பரையிற் போ ட்டு ஓர் உறியில் தொங்கவிட்டுவைப்பது வழக்கம். அதனை எலியொன்று உறியிற்றாவிக் குதித்துத் தின்று போய்க்கொண்டிருந்தது. இதைக்கண்ட வொருவன் "இந்த எலி மிகுந்த பணக்கொழுப்புடையதுபோலத் தோன்றுகிறது. இல்லாவிட்டால் இவ்வள வுயரம் இஃது எழும்பிக் குதிக்காது" என்று பண்டாரத்தினி

டஞ் சொன்னான். பண்டாரம் இதனைப் பரிசோதிக்க வெண்ணி எலியின் வளையைவெட்டிப் பார்க்கப் பெரும் புதையலகப்பட்டது ; பண்டாரம் அதனை யெடுத்துக் கொண்ட பிறகு எலி தன் வலிமையெல்லாமிழந்து சோர்வடைந்தது. பணமுள்ளவன் பலவான் என்பதற் குக் சந்தேகமில்லை.

## 86. போர்த்தொழில் புரியேல்.

சண்டையைத் தொழிலாக மேற்கொள்ளாதே என் பதிதன் கருத்து.

சுந்தன் என்னுங் கந்தருவன் ஒருவன் சண்டைசெய் வதையே தன்னுடைய தொழிலாகக்கொண்டு தன் மனைவி மக்களோடு ஒருநாள் அகஸ்தியமுனிவர் தவஞ் செய்யும் ஆச்சிரமத்தையடைந்து கற்களையும் மரங்களை யும்வாரி அவர்மேல் எறிந்து சண்டைசெய்தனன். கோ பங்கொண்ட அகஸ்தியர் சுந்தனைச் சாம்பராக எரித்து விட்டு அவன் மனைவி மக்களை அரக்கர்களாகும்படிச் சபித்தனர். சுந்தன் மனைவியாகிய தாடகையும் அவன் மக்களாகிய மாரீசன் சுவாகு என்பவர்களும் போர்த் தொழிலை மேற்கொண்டு முனிவர் பலருக்கும் இடை யூறியற்றி வந்தனர். விசுவாமித்திரர் வேண்டுகோளால் இராமன் தாடகை சுவாகுவை முதலிலேகொன்று பிறகு மாயமானாகவந்த மாரீசனையும் கொன்றனன். போர்த்தொழில் புரிந்து வாழ்ந்தா ரொருவருமில்லை.

## 87. மனந்தடுமாறேல்.

ஒரு தொழிலைச்செய்யத் தீர்மானித்து அவ்வினை

மேற்செல்லுங் காலத்தில் மனந் தடுமாறக்கூடாது என்பதிதன் பொருள்.

பாண்டவர்களுள் நடுப்பிறந்தானாகிய அருச்சுனன் பாரதயுத்தத்திற் பகைவர் அனைவரையுந் தொலைக்கத் தீர்மானித்துப் பரமேசுவரனைக் குறித்துக் கடுந்தவமியற்றிப் பாசுபதாஸ்திரம் பெற்றனன். மேலும் கிருஷ்ண பகவானைத் தனக்குத் தேர்ப்பாகனாகவும் அமைத்துக் கொண்டனன்; தன் அருமைப் புதல்வனாகிய அரவான் என்னும் மகாவீரனைக் களப்பலியாகக் கொடுக்கவும் துணிந்து நின்றனன். இவ்விதமாகப் பாரத யுத்தத்தை நடத்த முனைந்துநின்ற மகாவீர சிகாமணியான அருச்சுனன் குருக்ஷேத்திர பூமியில் பாண்டவ சேனையும் கௌரவசேனையும் அணிவகுத்து நின்றகாலத்தில் அவற்றைப்பார்த்து யாண்டுநோக்கினும் தன்னைச்சார்ந்த ஆசாரியன் மூதாதையாதிய பெரியோர்களும், அண்ணன் தம்பி மாமன் மைத்துனனாதிய உறவினர்களும் நண்பர்களுமாகவேகண்டு, இவர்களைக்கொன்றோ இம் மண்ணைப்பெறுவது, பெற்றும் யாதுபயன் என்று மனந் தடுமாறித் தன் கையிலுள்ள காண்டீபம் என்னும் ஒப்புயர்வற்ற வில்லையும் என்றும் குறைவுபடாத அம்பறாத் தூணியையும் எறிந்துவிட்டுக் காட்டிற்குச்சென்று தவஞ் செய்யத் தீர்மானித்தனன். இவ்விதமாக நல்லசமயத்தில் மனந்தடுமாறிநின்ற அருச்சுனனைப் பூபாரந்தீர்க்க உலகிலவதரித்த கண்ணபிரான் கண்டு அவன் மனத்தைத் தேற்றி உண்மை விளங்கும் பொருட்டுப் பகவத்கீதை என்னும் அரிய நூலை அவனுக்கு உபதேசித்து அவன்

மனந்தடுமாறுவதைப் போக்கினன். அருச்சுனன் மனந் தடுமாறியது பேதைமையின்பாலதே.

## 88. மாற்றானுக் கிடங்கொடேல்.

சத்துருவுக்கு இடங்கொடுக்கக் கூடாது என்பதிதன் கருத்து.

முற்காலத்திற் காகங்களுக்கும் கோட்டான்களுக்கும் பெருஞ்சண்டை நடந்தது. காகங்கள் பகற்காலத்தில் கோட்டான்களை யடித்துக்கொன்றன; கோட்டான்கள் இரவிற் காகங்களைக் கொன்றழித்தன. ஒருநாள் காகங்கள் கோட்டான்களை வஞ்சனையாகவெல்லக் கருதித் தம்முள் மிகுந்த அறிவுடையதும் அனுபவமுடையது மாகிய சிரஞ்சீவியென்னும் காகத்தைப் பொய்யாக அடித்து மேலே இரத்தத்தைப்பூசித் தாங்கள் வழக்கமாகவாழும் ஆலமரத்தின் கீழே போட்டுவிட்டு வேற்றிடம்போயின. அன்றிரவு கோட்டான்கள் அங்குவந்து பார்க்கக் காகங்கள் ஒன்றையுங்காணுமற் சிரஞ்சீவியென்னும் காகத்தைமாத்திரங் கண்டு அதனை விசாரித்தன. சிரஞ்சீவி கோட்டான்களிடம் "நான் மிக்க பராக்கிரமசாலிகளாகிய கோட்டான்களோடு சண்டையிடக் கூடாது என்று பலவிதமாகக் காரணங்காட்டிக் காகங்களுக்குப் புத்திசொன்னதனுல் எனக்கு இக்கதிநேர்ந்தது என்னைக் குற்றுயிராக அடித்துப்போட்டு யான் இறந்ததாகக் கருதிக் காகங்கள் வேற்றிடம் போயின. இனி எனக்குக் காகங்கள் சத்துருவாயின. உங்களையே அடைக்கலமென்று சேர்ந்தேன். என்னைக்காப்பாற்றுவதுங்கள் கடமை. சிறிதுகாலத்தில் காகங்களையெல்லாம்

கூட்டத்தோடு உங்கள் கையிற்பிடித்துத் தருகிறேன். உளவுசொல்ல நானிருக்கும்பொழுது ஜயம் உங்களுடையதே என்பதற்கு என்ன ஆக்ஷேபனை" என்று நம்பிக்கையுண்டாகப் பேசிற்று. கோட்டான்கள் சிரஞ்சீவி தங்களுக்கு வசமானது பெரும்பாக்கியமென்று தீர்மானித்து அதனைத் தங்கள் மலைத்துருக்கத்திற்குக் கொண்டுபோய்த் தாங்கள் வசிக்கும் குகைக்கு வாயில் காப்போனாக அமைத்து வைத்தன. சிரஞ்சீவி தினம் சிறிது சிறிதாய் விறகுகளைச் சேர்த்து குகைவாயிலில் மலைபோலடுக்கி ஒருநாள் கோட்டான்கள் யாவும் உள்ளிருக்குஞ் சமயம்பார்த்து அவ்விறகுக் குவைக்கு நெருப்பு வைத்துக் கோட்டான்கள் எல்லாவற்றையும் கொன்றது. சிரஞ்சீவியென்னும் காகம் பகையாளிகுடியை உறவாடிக் கெடுத்தது.

## 89. மிகைபடச் சொல்லேல்.

வரம்புகடந்து பேசப்படாது என்பதிதன் பொருள்.

சேதி தேசாதிபதியாகிய தமகோஷன் என்பவனுக்கு மூன்று கண் நான்கு கைகளோடு குழந்தையொன்று பிறந்தது. இந்த விசித்திரமான குழந்தையைக் கண்டு அரசன் கவலைப்பட்டு வருந்தினான். அப்பொழுது ஆகாயவாணி "எவன் இந்தக் குழந்தையை எடுத்தவுடன் அதிகமான கண்ணும் கைகளும் மறைகின்றனவோ அவனே இப்புதல்வனுக்குச் சத்துரு" என்று சொல்லிற்று. தமகோஷன் பற்பல தேசத்தரசர்களுக்கும் விருந்து குறித்துக் கடிதம் போக்கித் தருவித்து ஒவ்வொருவர் மடியிலும் குழந்தையை வைத்தனன்.

முடிவில் கிருஷ்ணனுடைய மடியிற் குழந்தையை வைத்ததும் அதிகமான கண் கைகள் மறைந்தன. உடனே தமகோஷன் மனைவி கண்ணனை வணங்கி "என் புதல்வனுக்கு நீ சத்துருவாக ஏற்படுவாய்; உனக்கு அவன் பலகுற்றங்கள் செய்தாலும் பொறுத்துக்கொள்ள வாக்களிக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டனள். கண்ணனும் அதற்கொப்பி, "உன் புதல்வன் எனக்குச் செய்யும் பிழைகளுள் நூறு பொறுத்துக்கொள்ளுகிறேன்" என்று சொல்லிப்போயினன்.

தமகோஷன் தன் புதல்வனுக்குச் சிசுபாலன் என்று பெயரிட்டு வளர்த்து அரசர்க்குரிய வில்வித்தை முதலியவற்றையும் கற்பித்தனன். சிசுபாலன் விரும்பிய ருக்மணியென்னும் பெண்ணைக் கண்ணன் மணம்புரிய அதுமுதல் அவ்விருவருக்கும் பகைமை முதிர்ந்து மூண்டது. பிறகு தருமபுத்திரன் இராஜசூய யாகஞ்செய்த காலத்தில் அங்கு வந்திருந்தவர்களுள் யாருக்கு முதற் றாம்பூலம் அளிப்பது என்று பெரியாரை வினவிய காலத்தில் யாவரும் கண்ணனுக்கு அளிக்கச் சொன்னார்கள். தருமபுத்திரனும் கிருஷ்ணனுக்கே அக்கிரதாம்பூலமளித்தனர். அங்கு வந்திருந்த சிசுபாலன் கண்ணனுக்குச்செய்த மரியாதையைக்கண்டு பொறுனாய் அவனை வரம்புகடந்து வைதனன்; கண்ணனுக்குத் தாம்பூலமளிக்கச்சொன்ன வேதவியாசரையும் மீன் வாணிச்சிமகனென்று மிகைபடப்பேசினன். பெரியார்கள் யாவரையும் வாய்க்குவந்தபடித் தாறுமாறாக வைதான். சிசுபாலன் நூறு வசவுக்குமேல் கண்ணனை வைததால் கண்ணனுக்கும் சிசுபாலனுக்கும் பெரும்

போர் நிகழ்ந்தது. முடிவிற் கிருஷ்ணன் தனது சக்கிராயுதத்தைப் பிரயோகித்துச் சிசுபாலன் தலையையறுத்துத் தள்ளினான்.

## 90. மீதூண் விரும்பேல்.

அதிகமான உணவினை விரும்பியுண்ணாதே என்பதிதன் பொருள். அதிகமான உணவு நோயினையுண்டாக்கும். நமது நாட்டிற் பெரியோர்கள் மீதூண் கொள்ளுதலைப் பாவமாகவும் கூறியுள்ளார்.

பாண்டவர்கள் தங்களுடைய ஆயுண்முடிவில் தங்கள் தேவி திரௌபதியோடு சுவர்க்கம் புகும்பொருட்டு வடதிசை நோக்கிப் போயினர். போகும்பொழுது திரௌபதி சகாதேவன் நகுலன் அருச்சுனன் இவர்கள் முறையே ஒவ்வொருவராய் உயிர்நீங்கிக் கீழேவிழுந்தார்கள். அதைக்கண்ட வீமன் தனது அண்ணனை நோக்கி யிவர்கள் விழுந்துவிட்டதற்குக் காரணம் வினவத் தருமன் அவரவர்செய்த பாவச்செயல்களையெடுத்துக் கூறிவந்தனன். சிறிதுதூரஞ் சென்றதும் வீமசேனன் தானும் மயங்கிக் கீழேவிழுந் துயிர்விடப் போகும்சமயத்தில் தான்செய்த பாவம் என்ன என்று தருமனைக்கேட்க அவன் "நீ யாவரோடும் கடுஞ்சொற் சொல்லுவாய்; நெடுநேரம் தூங்குவாய்; மீதூண் விரும்புவாய்; இவையே நீ செய்த பாவச்செயல்கள்" என்று கூறிப்போயினர்.

## 91. முனைமுகத்து நில்லேல்.

சண்டை நடக்கும் இடத்திலிருக்கக்கூடாது என்பதி

தன் கருத்து. இருந்தால் உயிரையிழக்கும்படியான ஆபத்துநேரிடும் என்பதை யாவருமுணர்வார்கள்.

இரண்டு ஆட்டுக்கடாக்கள் ஒன்றோடொன்று முட்டிப் போர்புரிந்தன. அச்சமயத்தில் நரியொன்று அவைகளுடைய தலையிலிருந்து வழியும் இரத்தத்திற்கு ஆசைப்பட்டு அங்கேசென்று கடாக்கள் இரண்டும் பின்னுக்குப் போனபொழுது கீழே ஒழுகிக்கிடந்த இரத்தத்தை நக்கப்போயிற்று. பின்னுக்குப்போன ஆடுகள் திடீரென்று பாய்ந்து ஒன்றோடொன்றுமோத அவ்விரண்டுக்கும் நடுவில் நரி யகப்பட்டிறந்தது.

## 92. மூர்க்கரோடிணங்கேல்.

காட்டில் வழிதப்பிப்போன ஒட்டகமொன்று அங்கே திரிந்துகொண்டிருக்கையில் அந்தக் காட்டில் அரசுபுரிந்திருந்த சிங்கத்தையும் அதன் மந்திரிகளாகிய நரியையும் புலியையுங் கண்டு தோழமைபூண்டு அவர்களோடு அளவளாவிக் களித்து வாழ்ந்துவந்தது. மிருகேந்திரனாகிய சிங்கத்திற்குத் தினந்தோறும் ஆகாரஞ் சம்பாதித்து தரவேண்டியது பிரதானிகளாகிய நரி புலி ஒட்டகங்களின் கடமை. ஒருநாள் காடுமுழுவதும் தேடியும் ஒன்றுங் கிடையாமற்போகவே சிங்கத்திற்கு என்னசொல்வோம் என்று கவலையோடு யோசனை செய்துகொண்டு மூன்று பிரதானிகளும் சிங்கத்தை யணுகின. அப்பொழுது நரி சிங்கத்தைநோக்கி "சுவாமி! மிருகராஜனே! இன்றையதினம் காடெங்குந்தேடியு உணவு கிடையாமையால் அடியேனை உணவாக அங்கீகரித்துக் கொள்ளவேண்டும்" என்றது.

அதற்குச் சிங்கம் "நீ எம்மாத்திரம்? யானைப் பசிக்குச் சோளப்பொரிபோல என்னுடைய அளவற்றபசிக்கு நீ கடைவாய்க்குக்கூடப் பற்றுயே" என்றது. உடனே புலி "ஐயா நானிருக்கிறேன்; என்னையுண்டு உங்கள் பசியைத் தீருங்கள்" என்றது. அதைக்கேட்ட சிங்கம் "நீயுமென்ன பெரியவனோ? உன்னைத்தின்றால் என்பசி தீருமா?" என்று மறுத்தது. அப்பொழுது ஒட்டகம் வேறுவகையன்றி மற்றவற்றை மறுத்ததுபோல தன்னையும் சிங்கம் மறுக்கக்கூடுமென்று கருதி யதனைநோக்கி "மிருகேந்திரா! அடியேன் பெரிய வுருவுடனிருக்கிறேன். திருப்தியானால் என்னை யுணவாக்கக் கொள்ளுங்கள்" என்றது. உடனே மூன்றும் அதன்மேற்பாய்ந்து அதனைக் கொன்றுதின்றன. மூர்க்கரோடிணங்கிய ஒட்டகம் முடிந்தது.

## 93. மெல்லினல்லாடோள் சேர்.

மேன்மைத் தன்மையுடைய நற்குணம்பொருந்திய மனைவியைச்சேர்ந்து களிப்பாயாக என்பது பொருள். இல்நல்லாள் என்று கூறியது இல்லாளாகிய மனைவியை. தாம் விரும்பிய மகளிருடையதோள் அமிழ்தம்போ லினிமையைத்தரும் என்று பெரியார் கூறுவதுண்டாகையால் தோள்சேர் என்று மற்றைய வுறுப்புக்களினும் தோளையெடுத்துக் கூறினர். பிறன்மனை நயவாாய் ஏகபத்நீ விருதம்பூண்டு யாவரும் தன்னைப் பின்பற்றி யொழுகுமாறு உலகில் நடந்து காட்டியவன் இராமபிரானே. பிறமாதரைச் சிந்தையாலுந் தொடேன் என்ற வைராக்கியத்தோடு இருந்த இராமனிலும் இதற்

குரிய உதாரணமாக எடுத்துக்காட்டப் பெறுபவர் எவருமில்லை. இராமன் சீதா லக்ஷ்மண சமேதனுய் வனவாசஞ் செய்கையில் இராவணன் றங்கையான சூர்ப்பநகை அங்கேவந்து தவக்கோலம் பூண்டிருந்த இராமனுடைய பேரழகைக் கண்டுவியந்து அவன்பாற் காமுற்று அவனை யடையவிரும்பித் தான் மூவுலகத்திலும் நிகரற்ற பேரழகுடைய தெய்வமகள்போல உருக்கொண்டு அன்னம்போல நடந்து இராமனெதிரில் வந்தனள். வந்தவளை இராமன் நீ யாவளென்று வினவத் தான் இன்னுளென்று அவற்குப் புலப்படக் கூறியதுமன்றித் தான் இராமனுக்கு மூவுலகரசாட்சி யளிக்கும் வல்லமையுடையவளென்றும் இராமன் வேண்டியதை நொடியிற்கொடுக்கும் கற்பகப் பூங்கொம்புபோன்றவளென்றும் மேலும் தான் அவனை விரும்பிவந்த கன்னிகையென்றும் கருத்தை மறுத்தல் பாவமென்றும் பலவிதமாய்ச் சமத்காரம் பொருந்தப் பேசினுள். இராமனே ஒன்றிலும் மயங்காத திடச்சித்தனுயிருந்தான். அவன் அவளைநோக்கிச் சீதையிருக்க உன்னை மணவேன். ஒருறையில் இருவாளிட இயலாது என்று மறுத்தனன்.

அதனுல் வெகுண்ட சூர்ப்பநகை சீதைக்குத் தீங்கியற்ற முயல, இலக்குமணனுல் மூக்குமுதலிய இழந்து மானபங்கமுற்று ஓடிப்போயினள்.

## 94. மேன்மக்கள் சொற்கேள்.

**மேன்மக்கள் சொல்லைக்கேளாமல் மீளாத்துயருக்காளாயினேர் பலருளர்.**

துரியோதனன் பாண்டவர்களோடு சூதாடி வென்று நாடுநகரங்களைப் பிடுங்கிக் கொண்டதுமன்றி இவருக்குமுரிய பத்தினியாகிய திரௌபதியை நடுச்சபையேற்றித் துகிலுரிந்து மானபங்கஞ்செய்யப் புகுந்தகாலத்தில், பீஷ்மர் விதுரர் ஆதியபெரியவர்களும் துரோணர் கிருபர் முதலிய ஆசாரியர்களும் அவனைநோக்கி "நந்தியாவர்த்தமாலை யணிந்த நராதிபனே, நீ மூவுலகாளும் பராக்கிரமம் பெறினும் பாஞ்சாலியை நடுச்சபையி விழுத்துவந்து தூசுகளைந்தால் நாசமுறுவை" யென்று பன்முறை கூறியும் கேளாமையால் வம்சமறத் தொலைந்தான்.

தாய்ப்புலி தனது குட்டிக்கு நீ தண்ணீருண்ணப் புகுங்கால் மிகுந்த ஜாக்கிரதையோடிரு இல்லாவிட்டால் நீ முதலைவாய்ப் படுவாய் என்று கூறியதைக் கேளாமற் செருக்குடன் சென்றதால் முதலையாற் கொல்லப் பட்டது.

தசரத சக்கிரவர்த்தி, தன்னுடைய அருமைப் புதல்வன் இராமனை விசுவாமித்திரர் தம் வேள்வியைப் பாதுகாத்தற்பொருட்டுவேண்ட, முதலில் அனுப்ப மனமில்லாமல் மறுத்தானாயினும் தன்னுடைய குலகுருவாகிய வசிஷ்டர் அவனைநோக்கி "தசரதா! உன்னுடைய மகனுக்கு அளவில்லாத நன்மைகள் உண்டாகுங்காலம் வந்துளது. நீ அதனைத் தடுக்காதே. விசுவாமித்திரரால் உன் மகனுக்கு நன்மை மிகுதியும் உண்டாம்" என்று கூறியவுடன் அவர் சொற்படித் தன் மகனை விசுவாமித்திரரோடு அனுப்பினான். அதனால் இராமனுக்குப் பல

நன்மைகளுண்டாயின. இதுபற்றியன்றோ மூத்தோர் சொல் வார்த்தையமிர்தம் என்று மேலுங் கூறுவார்.

## 95. மைவிழியார் மனையகல்.

கண்ணில் மையிட்டுக் கண்டோரை மயக்கும் இயல் புள்ள பரத்தையர் மனையை நெஞ்சிலும் நினையாதே என்பதிதன் பொருள். பரத்தை யென்பவள் பொது மகள். உள்ளன்பு சிறிதுமின்றி வெளிவேஷத்தால் ஆடவரைமயக்கி அவர் கைப்பொருளைப் பறித்துக் கொண்டு அவர்களையும் ஆனைவாய்க் கரும்புபோல் ஆட்டிவிடுகின்ற பொது மகளிரைக் கனவிலுங் கருதக் கூடாது என்பதுண்மையே.

சோழராஜனாகிய ஜயதுங்கன் என்பவன் மனைவியை யிழந்தபிறகு ஒரு கணிகையை விரும்பி அவள் வசப் பட்டுத் தன்னருமை மகளாகிய கலாவதி யென்னும் பெண்மணிக்கும் கேடு சூழ்ந்தனன். கிளியை வளர்த்துப் பூனைவாய்க் கொடுப்பதுபோலத் தன்னருமைமகளைக் கணிகையின் பேச்சைக்கேட்டு ஒரு மானுடப்பதரு குக் கொடுக்கவு மனமியைந்தான். முடிவில் நல்வினைப் பயனால் கலாவதி தன்னன்பன் சிதாநந்தனை மணக்கவும் கணிகை ஆற்றில்விழுந்து மாளவும் நேரிட்டன. கணி கை படுத்திய பாட்டிற்குக் கணக்கில்லை.

## 96. மொழிவ தறமொழி.

பேசும் வார்த்தைகளைச் சந்தேகமில்லாமல் தெளி வாய்ப் பேசவேண்டும் என்பதிதனால் பெறப்பட்டது. கிரேக்கு தேசத்திலுள்ள டெல்பி என்ற இடத்தில் அரு

மையான திரிகால ஞானமுள்ள சிலர் இருந்தனர்; அவர்களிடத்திற் சந்தேகங்கேட்கப் போனவர்களுக்கு அவர் சந்தர்ப்பத்திற்கு ஏற்பக் கவர்படுபொருள் கொண்ட விடைகளையே தருவது வழக்கம். நமது நாட்டிலும் சோதிடர் பலர் உண்மையுணராராய் யாவரையும் ஏய்க்கும்பொருட்டு "உனது நாயகன் உந்தை வென்று வாகைசூடி வருவன்" என்றாற்போன்ற பல விடைகள் தருவதுமுண்டு. இங்ஙனம் அதுவோ இதுவோ என்று ஐயப்படச் சொல்வதால் உண்டாகும் கேடுகள் பல. இனி, தெளிவாய்ப் பேசாததாலும் குற்றம் உண்டானதற்குப் பின்வருங் கதையே தக்க உதாரணமாகும்.

கும்பகர்ணன் நெடுநாள் கடவுளைநோக்கித் தவஞ் செய்து அவர் பிரத்தியக்ஷமாய்த் தோன்றி உனக்கு என்னவரம் வேண்டுமென்று கேட்க, "ஸ்வாமி! எனக்கு நித்ரைத்வம் வேண்டும்" என்றனன். கும்பகர்ணன் மிகுந்த காலமாய் 'நித்யத்வம்' அதாவது அழிவின்மை யடையவேண்டு மென்று தவஞ் செய்தவன், கடவுளை வரம் வேண்டுங்காலத்தில் வாய்குழறி 'நித்ரைத்வம்' அதாவது எப்பொழுதும் தூங்கிக்கொண்டிருக்குந் தன்மை வேண்டும் என்று கேட்டுவிட்டான். கடவுளும் அப்படியே தந்தேன் என்று கூறிப்போனார். அதனாலேதான் கும்பகர்ணன் மாதக்கணக்காய் உறங்கும் வழக்கத்தை யுடையனாயினான்.

## 97. மோகத்தைமுனி.

ஆசையை வெறுத்து நீக்கு என்பது பொருள்.

எவனொருவன் ஆசையென்னும் முத்துமாலையைக் கழற்றி யெறிகின்றானோ அவனே யமனானுகான், என்று பெரியார் கூறியிருக்கிறார்கள். ஆசை, மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை என்று மூவகைப்பட்டதாயினும் இங்கே மோகம் என்பது மாதர்மேல் உண்டாகும் விருப்பமேயாம். மாதர்மேல் வைக்கும் ஆசை உலகத்திற்குத் தூமகேது தோன்றியதுபோற் கெடுதியை விளைக்கும்.

திருப்பாற்கடலிற் பிறந்தவளும் கௌதமரென்னும் மகா முனிவரின் பாரியையுமான அகலியை என்னும் மாதின்மேல் அக்கிரமமான விருப்பங்கொண்ட இந்திரன் கௌதமரில்லாத சமயத்தில் அவருடைய ஆச்சிரமத்திற் புகுந்து அகலியையைக் கற்பழித்தனன். அதனால் வெகுண்ட கௌதமர் சாபத்தால் அவன் எக்காலத்தும் நீங்காத ஆயிரங் கண்களைத் தன்னுடம்பெங்கும் பெற்றனன்.

## 98. வல்லமை பேசேல்.

தன்னுடைய வல்லமையைப்பற்றித் தான் பெருமையாயெடுத்துப் பேசக்கூடாது என்பதிதன் பொருள்.

முற்காலத்தில் இந்திரனுடைய சபையில் பலமுனிவர்களும் தேவர்களும் கூடியிருந்தபொழுது இந்திரன் சபையிலுள்ளோரை நோக்கி "மண்ணுலகத்தில் யாரேனும் பொய் என்பதைக் கனவிலு நினையாமற் சத்திய நிலையிலிருக்கிறார்களா" என்று கேட்டனன். அப்பொழுது வசிஷ்டர் எழுந்து "சூரியகுலமன்னனாகிய அரிச்சந்திரன் என்ற பெயருடைய மன்னனொருவன் உளன்;

அவன் எப்படிபட்ட துயரம் நேர்ந்தாலும் உண்மையைக் கைவிடான்; விளையாட்டிற்கும் பொய் பேசாதவன்'' என்றனர். இச்சொல்லைக்கேட்ட விசுவாமித்திரர் எழுந்து நின்று "வசிஷ்டரால் புகழ்ந்துரைக்கப்பட்ட அரிச்சந்திரனைப் பொய்சொல்லச் செய்கிறேன்; இல்லாவிடில் என் தவத்தை யிழக்கிறேன்; என் வல்லமையை பாருங்கள்'' என்று தன் வல்லமையைத் தானே எடுத்துப் பேசினுர். இவ்விதமாக இந்திரன் முன்னிலையிற் சபதம் பேசிச்சென்ற விசுவாமித்திரர் அரிச்சந்திரனுக்குப் பலதுன்பமியற்றினர். அவன் அரசாட்சியைப் பிடுங்கிக்கொண்டு நாட்டைவிட்டு அவனையும் அவன் மனைவி சந்திரமதியையும் மகன் லோஹிதாசனையும் வெளியிற்றுரத்தினர்; நக்ஷத்திரகன் என்னும் தன் சீடனைக்கொண்டு அவர்களைப் படாதபாடு படுத்தினர்; சந்திரமதியையும் லோகிதாசனையும் கல்லினுங் கடிய சித்தமுடைய பார்ப்பானுகிய காலகண்டனுக்கு அடிமையாகச் செய்தனர்; அரிச்சந்திரனை வீரவாகு என்னும் புலையனுக்கு ஆளாய் மயானங்காக்க வைத்தனர். லோகிதாசனைப் பாம்புகடிக்கச் செய்தனர்; சந்திரமதிமேல் கொலைக்குற்றஞ்சாட்டி அவளைக் கொலைக்களம் கொணர்ந்து அரிச்சந்திரனைக்கொண்டு அவளை வெட்டவுஞ் செய்தனர். அரிச்சந்திரனே இத்தனைக்கும் மனங்கலங்காமல் சத்தியமேஜபம் என்று நம்பி உண்மை பேசுவதை விடாமற் காத்துநின்றனன். விசுவாமித்திரர் தன் வாயிழந்து அருந்தவத்தையுமிழந்து போனுர்.

## 99. வாதுமுற்கூறேல்.

முற்பட்டு யாவரோடும் வாதுபுரிந்து நில்லாதே என்பது பொருள்.

வில்லிபுத்தூரார் என்னுங் கவிஞர்பெருமான் தனது கவித்திறத்தை உலகில் நிலைநாட்டக் கருதித் தமிழ் நாடெங்குஞ்சென்று அங்கங்குள்ள வித்வான்களோடு வாதிட்டு யாவரையும் வென்று அவர்கள் தோற்றதற் கடையாளமாய் அவருடைய காதுகளைத் தன் கையிலுள்ள துறட்டினாற்பற்றி யிழுத்து அறுத்து வந்தனர். ஒருநாள் இவர் திருவண்ணாமலைக்கு வந்தபொழுது அங்குள்ள அருணகிரிநாதர் என்னும் பெரும் புலவரோடு வாதுக்குச்சென்றனர். அப்பொழுது அருணகிரிநாதர், "யாம்பாடும் கந்தரந்தாதிக்குப் பொருள் கூறுவீராயின் நீரே வென்றவராவீர்" எனலும் அவரும் ஒப்புக்கொண்டனர். அருணகிரிநாதர் பாடிய கந்தரந்தாதிக்கு இடையே பொருள் கூறமுடியாமற் போகவே வில்லிபுத்தூரார் தமது துறட்டை யெறிந்துவிட்டு இனியெவரோடும் வாதுபுரிவதில்லை யென்று சபதஞ்செய்து போயினர். இவரே பாரதம் பாடியவர்.

ஞான சம்பந்தர் மதுரைக்குப் போயிருந்த காலத்தில் அவர் தங்கியிருந்த மடத்திற் சமணர்கள் நெருப்பை வைத்தனர். சம்பந்தர் அத்தீயினைப் பாண்டியன் உடம்பிற் சுரநோயாய்ச் சென்று சேரச் செய்தனர். பாண்டியன் சுரநோய் தாங்கமுடியாமற் றன்னைச்சார்ந்த சமணர் பலரையும் சம்பந்தரையுமழைத்து நோயைத் தீர்க்கச்சொல்லினன். சமணர்கள் சம்

பந்தரைக்கண்டு பொறுமைகொண்டவர்களாய் வெகுண்டு பாண்டியன் உடம்பில் ஒரு பாதியிலுள்ள நோயைத் தாம் தீர்ப்பதாகவும் மற்றொரு பாதியிலுள்ள நோயைச் சம்பந்தர் தீர்க்கவேண்டுமென்றும் தீர்க்க முடியாதவரே தோற்றார் என்றும் வாது கூறினர்கள். சம்பந்தரோ அதற்கு ஒப்புக்கொண்டு பாண்டியன் உடம்பின் ஒரு பாதியிலுள்ள நோயை விபூதியாலகற்றி மாற்றினர்; மற்றொரு பாதியிலிந்த வெப்பும் சென்று சேர அரசனுற்றுணபினன். சமணர்கள் தாமறிந்த மணிமந்திர ஔஷதங்களாற் பலவாறு முயன்றும் மற்றொரு பாதியிலுள்ள நோயைநீக்க முடியவில்லை. பிறகு பாண்டியன் வேண்டுகோளால் ஞானசம்பந்தர் அம் மற்றொரு பாதியிலிருந்த வெப்புநோயையும் விபூதியால் நீக்கியருளினர். வலிய வாதிட்ட சமணர் தோற்றழிந்தனர்.

## 100. வித்தைவிரும்பு.

வித்தையால் அறிவு வளருமாதலின் வித்தையை விரும்பவேண்டுவ தவசியமே.

சங்கராசாரியர் எல்லா வித்தைகளிலும் வல்லவராய்ச் சருவஞ்ஞபீடமேறி லோககுருவாய் விளங்கிய வரலாறு முன் எழுபதாவது கதையிற் கூறிப்போந்தாம்.

உஜ்ஜயினி நகரத்தில் அரசாண்டிருந்த விக்கிரமாதித்தியன் என்ற கீர்த்தி மிக்க மன்னனொருவன் காளிதேவியின் அனுக்கிரகத்தால் பல வரங்களைப்பெற்று மிகுந்தபராக்கிரமசாலியாய் வாழ்ந்துவந்தனன். அவன் அறுபத்துநான்கு கலைகளிலும் தேர்ச்சிபெற்றவன். 'களவும்கற்று மற' என்ற பழமொழிக்கிணங்க அத்யற்புத

மாகக் களவுசெய்யவுங் கற்றுக்கொண்டனன். திருட்டைக்கண்டு பிடிக்கத் திருட்டுத்தொழிலும் தெரிந்திருக்க வேண்டிய அவசியத்தானும் எல்லா வித்தைகளையும் அறியவேண்டுமென்ற விருப்பத்தானுமே அவன் களவுத் தொழிலுஞ் செய்தான்.

## 101. வீடுபேறுநில்.

முத்தியை யடையவேண்டுமென்ற விருப்பத்துடனிருப்பாயாக என்பதுபொருள். மற்றைய எல்லாம் அழியக்கூடியனவாய்க் கழியுமாதலான் எக்காலத்தும் அழியாத நிரதிசயாநந்தம் பயக்கும் மோக்ஷத்தை யடைய விரும்புவாயாக என்றனர்.

வேதவியாசருடைய அருமைப்புதல்வராகிய சுகர் என்னும் முனிவரர் முத்தியின்மேல் விருப்புக்கொண்டவராய்ப் பெருந் தவமியற்றி நின்றனர். அவருடைய அரிய தவத்தைக்கண்ட இந்திரன் அவர்தம் மனநிலையைப் பரிசோதிக்க அவரெதிரிற்றோன்றி இந்திரலோகச் சிறப்பை யெடுத்துக்கூறி அங்குண்டாகும் போகத்தின் பெருமையையும் வியந்துபேசினான். முத்தியின்மேல் எண்ணங்கொண்ட சுகருக்குச் சாமானியமான பொருள்களின்மேல் மனஞ்செல்லவில்லை. இதைக்கண்ட இந்திரன் அழகுமிக்க அரம்பையர் பலரை அவரெதிரிலனுப்பி ஆடல்பாடல்களால் மயக்கச்செய்தனன். மாயையினின்றும் நீங்கிய சுகமுனிவருக்கு மாதரா லுண்டாகும் சிற்றின்பத்தில் மனஞ் செல்லுமோ? செல்லவில்லை. இந்திரன் அவர் மனவுறுதிக்கு மிகவும் மெச்சிப்போயினன். சுகர் பிரமத்தின் உண்மை நிலை

யைச் சனகமகாராஜன் உணர்த்த உணர்ந்து தன்னை யறிந்து மாயை நீங்கப்பெற்று எல்லாந் தானய் நிற்கு நிலையையடைந்தனர். முடிவில் ஒருநாள் வியாசரிடஞ் சென்ற சுகர் அவர்பால் விடைபெற்று இனித் தன் பாலுள்ள ஆசையை யொழிக்குமாறு அவரை வேண்டி ஆகாயமார்க்கமாய்ப் போயினர். வியாசர் தன் மக னைப்பிரிய மனமில்லாதவராய் "சுகனே சுகனே" என்றுகூவி யழைத்தனர். அப்பொழுது சராசரப் பொருள்கள் யாவும், "ஏன் ஏன்" என்றதைக் கண்ட வியாசர் சுகப்பிரமத்தின் பெருமையை வியந்து நின்ற னர்.

## 102. உத்தமனுயிரு.

யாவராலும் உத்தமன் என்று கொண்டாடும்படி இரு ப்பாயாக என்பதுபொருள். சாந்தம், சத்தியம், ஈகை, அன்பு, கண்ணோட்டம், ஒப்புரவு முதலிய நற்குணங் கள் எல்லாம் உடையவன் எவனே அவனே உத்தம னுவான்.

எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமாய் விளங் கினவன் இராமன். பரசுராமர் கடுஞ்சொற்கூறி அவ மதித்தகாலத்தும் இராமன் சாந்தகுண பூஷணனுய் விளங்கினன்; விசுவாமித்திரர் தாடகையைக் கொல்லச் சொன்னபொழுது, இவள் பெண்ணல்லவோ, ஸ்திரீ யைக் கொல்வதுதருமமோ என்று கூறினன்; இதனல் இவனது தருமசிந்தைவிளங்கும்; தனக்குத் தீங்கிழை க்கக் காகாசுரனுகவந்த ஜயந்தன் தன்னைச் சரணமடை ந்தகாலத்தில் அவன் பிழையைப்பொறுத்து அருள் செய்ததால் இவனுடைய கண்ணோட்டமும் அன்பும்

விளங்கும் ; பிதுர்வாக்கிய பரிபாலனஞ்செய்ய வனத்திற்கு மகிழ்வுட னேகியதால் இவன் சத்தியவான் என்பது தெரியவரும் ; கரதூஷணுதியரைத் தொலைத்தலால் அளவற்ற பராக்கிரமமும் சூர்ப்பனகையை நிராகரித்ததால் ஏகபத்நீ விருதமும், விபீஷணுபயப் பிரதானத்தால் அடைக்கலம் புகுந்தோரைக் காக்கு முறைமையும், தன்னுயிரினுஞ் சிறந்த சீதையை அக்கினியில் விழச்செய்து உலகிற்குத் தூயளென்று காட்டிப் பின்னர் அங்கீகரித்ததால் நடுவு நிலைமையும் ஒப்புரவும், இன்னுசெய்த கைகேயிக்கும் இனியவற்றையே நாடியதாற் சான்ருண்மையும், நிராயுதபாணியாய்ப் போர்க்களத்திலெதிரில் நின்ற இராவணனை இன்று போய் நாளைவா வென்றதால் இராஜதருமமும் அளவற்ற அருளும் இன்னும் இவைபோன்ற பல உத்தமகுணங்களும் இராமனிடத்தில் விளங்கின என்பது நமது தேசத்திற்கே பெரும்பூஷணமாய் விளங்கும் இதிகாஸ ரத்தினமாகிய இராமாயணத்தை ஆழ்ந்து நோக்குவார்களுக்குப் புலப்படும்.

## 103. ஊருடன் கூடிவாழ்.

ஊராருடைய கருத்துக்கு விரோதமில்லாமல் அவர்களோடு கலந்து வாழவேண்டும். இல்லாவிடின் ஊருடன்பகைக்கின் வேருடன் கெடுவது நிச்சயம். இதனுலேதான் ‘ஊரோட ஒக்கவோடு’ என்னும் பழமொழியும் விளங்குகின்றது.

பாண்டவர்கள் அரக்குமாளிகையினின்றும் தப்பி இடிம்பவனமடைந்து இடிம்பனைக்கொன்று பிறகு வேத்

திரகீயமென்னும் ஊரில் பிராமணர்போல வசித்து வந்த னர். மகா கொடியனுகிய பகன் என்னும் அசுரனுக்குப் பயந்து அவ்வூரார் தினமும் ஒருவண்டி சோறும் ஒரு நரபலியும் முறைபோட்டுக் கொடுத்து வந்தனர். பாண்டவர்களை யாதரித்துவந்த வீட்டுக்காரன் முறை வரவே, குந்திதேவி யவர்களுக்காக வீமனை யொரு வண்டிசோற்றுடன் அனுப்பினுள். வீமசேனன் ஊரை விட்டு வெளியேகினதும் சோற்றுவண்டியிற் கட்டியிரு ந்த மாட்டை யவிழ்த்து ஊருக்குள்ளே வெருட்டிவிட்டு வண்டியிற் கொண்டுவந்த சோற்றைத் தானெருவனே யுண்டு தன்னையெதிர்த்த பகாசுரனையுங் கொன்று மீண் டனன். அதற்குள் ஊருக்குள் மாடுகள் மீண்டுவந் ததை யறிந்த அவ்வூரார் "கூலிக்குப்போன ஆள் எங் கேயோ ஓடிப்போனுன். இனிப் பகாசுரன் வந்துவிடு வான்" என்றுபயந்து ஓடினுர்கள். அப்பொழுது தரும புத்திரனும் அவர்களோடு கலந்து வேகமாய் ஓடினுன். அதைக்கண்ட குந்திதேவி தன் மகன் தருமனைப்பார் த்து "தருமபுத்திரா! வீமனுடைய பராக்கிரமந் தெரி யாத ஊரார் ஓடுவது நியாயமே. அவனை நன்றாக அறிந்துள்ள நீ ஓடலாமோ?" என்று கேட்டனள். தருமன் அதைக்கேட்டு "அம்மா! ஊரோட ஒக்க வோடுகிறேன். ஊருந்தாயுஞ் சரியாதலால் தாய்மொழி போல் ஊர்மொழியைக் கொள்ளுதல் நியாயமே" என் றனன்.

## 104. வேட்டெனப் பேசேல்.

வேடுவெடுப்பான சொற்களைப்பேசாதே என்பதி தன்பொருள்.

முற்காலத்தில் பாண்டியனொருவன் தன்மனத்திலுள்ள விஷயமொன்றை யார் சொல்லுகிறார்களோ அவர்களுக்கு ஆயிரம்பொன் கொடுப்பதாகப் பிரசுரஞ்செய்தான். தேசத்திலுள்ள அறிவுடையவர்களும் வித்துவான்களும் அரசன்கருத்தைக் கண்டுபிடிக்கப் பலவிதமாக முயன்றும் அவர்களால் முடியவில்லை. அப்பொழுது அந்த ஊரிலுள்ள ஏழைப் பிராமணனாகிய தருமி என்பவன் பக்தனானமையால் சிவபெருமான் அவனுக்கு அருள்செய்ய எண்ணி, அரசனுடைய மனத்திலுள்ள விஷயத்தை யொரு பாட்டில் அமைத்து எழுதி அதை யவனுக்குக் கொடுத்தனர். அரசன் தன் மனக்கருத்து அதிலிருப்பது கண்டு சந்தோஷமடைந்து பாடலைச் சங்கப்புலவருக்குக் காட்டச்சொன்னான். புலவருட் சிறந்தவனாகிய நக்கீரன் என்பவன் அந்த பாட்டிற் குற்றமிருப்பதாகச் சொன்னான். உடனே தருமி ஈசனிடத்தில் முறையிட்டுக்கொள்ள, சுவாமி தான் ஒரு புலவனைப்போல வேஷம்பூண்டு நக்கீரனெதிரிற் போய்க் குற்றமென்னவென்று வினவினார். நக்கீரன் "கூந்தலுக்கு இயற்கை வாசனையுண்டு என்று இப்பாட்டிற் சொல்லப்பட்டிருக்கிறது. அதுதான் குற்றம்" என்றனன். புலவனாய் வந்தகடவுள் "நக்கீரனே! தேவமகளிர் கூந்தலுக்கும் இயற்கை மணமில்லையோ? சிவனுடைய இடப்பாகத்திலிருக்கும் ஞானப் பூங்கோதையின் கூந்தலுக்கும் இயற்கைவாசனை யில்லையோ?" என்று கேட்டனர். நக்கீரன் எந்தக் கூந்தலுக்கும் இயற்கைவாசனை யில்லையென்று வாதிட்டனன். வந்த புலவன் தன்னையின்னானென்று அவனுக்குக்காட்ட விரும்பித் தன்

னுடைய நெற்றிக்கண்ணைச் சிறிது காட்டினபொழுதும் "நெற்றிக்கண்ணைக் காட்டினாலும் குற்றங் குற்றமே" என்று வெடுவெடுப்பாய்ப் பேசினான். உடனே அக் குற்றத்தால் நக்கீரன் குட்டநோய் பிடித்தவனாயினான். நெடுநாள் அந்நோயாற் றுன்புற்றுப் பிறகு கைலைபாதி காளத்திபாதி யென்னுநூலாற் சிவபெருமானைத் துதித்து அவன் அந்நோய் நீங்கப்பெற்றனன் என்று புராணங்கள் கூறுகின்றன.

## 105. வேண்டி வினைசெயேல்.

பலன்கருதி ஒரு காரியத்தை செய்யாதே என்பது இதன் கருத்து. சிலர் வெளிக்குத் தானதருமங்கள் செய்தாலும் மனத்தில் தங்களுக்குப் பெருமை வரவேண்டுமென்பதே எண்ணம். அப்படிச் செய்பவர்களை உலகத்தில் சிலர் ஏமாந்து அவரைப் புகழ்ந்தாலும் எங்கும் வியாபித்திருக்கிற கடவுள் அவரைப் பொருட்படுத்தமாட்டார்.

இங்கிலாந்தில் லியரென்னுமொரு அரசனிருந்தான். அவன் தனது விருத்தாப்பியகாலத்தில் தன் இராஜ்யத்தைத் தன் மூன்று பெண்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்து விடுவதாக உத்தேசித்தான். மூத்த இரண்டு பெண்கள் பொய்யாகத் தன்னை முகஸ்துதி பண்ணியதை நம்பி அவர்களுக்குத் தன் இராஜ்யத்தைத் பங்கிட்டுக் கொடுத்தான். தன் மூன்றாவது பெண் மனப்பூர்வமாகச் சொன்னதை அவன் பிழைபடப்பொருள்கொண்டு அவளுக் கொன்றுங் கொடுக்காமலிருந்துவிட்டான். அவள் பக்கம் பேசின கெண்ட் பிரபுவையும் தன் இராஜ்யத்தைவிட்டு

துரத்திவிட்டான். கெண்ட்பிரபு ஒரு சேவகன்போல் வேஷம் போட்டுக்கொண்டு லியருக்குச் சேவகனாக அமர்ந்தான். லியர் ஒவ்வொருமாதம் மாறி மாறித் தன்னிரண்டு பெண்களோடு இருக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்து கொண்டனன். சிறிதுகாலஞ் சென்றதும் அவ்விரு இராஜகுமாரத்திகளும் தன் தகப்பனாரை அவமதிக்க ஆரம்பித்தனர். லியருடைய ஏவலாளர்கள்கூட அவன் சொன்னதைக் கேட்பதில்லை. கெண்ட் பிரபுமட்டும் அரசனுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்துவந்தனன். பிறகு லியரைத் தன் பெண்கள் இராஜ்யத்தை விட்டுத் துரத்திவிட்டனர். அக்காலத்திலும் லியரோடு கூட இருந்தது கெண்ட் பிரபு ஒருவன்தான். இவ்விதமாக கெண்ட் பிரபு அரசனுக்கு உபகாரஞ்செய்தது ஒரு பலனைத் உத்தேசித்தன்று.

## 106. வைகறைத் துயிலெழு.

விடியற்காலத்திலேயே தூங்குவதினின்றும் எழுந்திருப்பாயாக என்பதிதன் பொருள். சீக்கிரம் படுத்துச் சீக்கிரம்தூங்கி யெழுபவனுக்கு நீண்ட ஆயுளும் ஆரோக்கியமும் அறிவும் ஐசுவரியமும் உண்டாம் என்று யாவரும் கூறுவார்கள். விடியற்காலையில் எழுந்திராமற் சோம்பலோடு பாயிற் கிடப்பவர்கள் அன்றையதினஞ் செய்யவேண்டிய தொழில்களைச்செய்யச் சாவகாசம் போதாமல் அவஸ்தைப் படுவார்கள். இரவிற் கண் விழித்துப் பகலில் உறங்கலாமென்றாலோ இயற்கை விரோதமாய் முடிந்து கண்கள் கெட்டுப்போம்.

ஜெர்மனிதேசச் சக்கிரவர்த்தியாயிருந்த இரண்டா

வது ப்ரெடரிக் என்ற பெயருடைய அரசன் விடியற் காலத்திலெழுந்திருக்கும் பழக்கத்தை மேற்கொண்டிருந்ததால் நிகரற்ற பராக்கிரமசாலியாயும் அரோகதிடகாத்திர முடையவனுயும் விளங்கினுன் என்று சரித்திரங் கூறுகின்றது.

துரையொருவர் எப்பொழுதும் விடியற்காலத்தில் தாம் தூங்கிப்போவதால் பல தீமைகள் உண்டாவதை யறிந்து விடிந்து தூங்குவதை நிறுத்துவது எப்படி என்று யோசித்தார். தன்னுடைய வேலைக்காரனை யழைத்து “ என்னை ஒவ்வொருநாளும் விடிந்த உடனே எழுப்பிவிட்டால் உனக்கு நாளொன்றுக்கு ஒருரூபாய் வெகுமதி தருகிறேன்” என்றனர். மறுநாள் வேலைக்காரன் காலையில் துரையை யெழுப்பப்போனதும் அவரிடத்தில் உதையும் அடியும் வசவும் பெற்றுக்கொண்டு சும்மா வந்துவிட்டான். பிறகு துரை அன்றையதினம் வேலைக்காரனைநோக்கி “நான் உன்னை என்னவிதமாக இம்சைசெய்தாலும் பொறுத்துக்கொண்டு என்னைக் கட்டாயம் எழுப்பக் கேட்டுக்கொள்ளுகிறேன்” என்று மிகப்பரிதாபமாய் வேண்டிக்கொண்டனர். வேலைக்காரன் அதுமுதல் அவர் என்ன உபத்திரவஞ் செய்தாலும் பொறுத்துக்கொண்டு அவரை விடியற்காலத்தில் எழுப்பிவிட்டான். சிலநாள் கழித்தபிறகு அவருக்கே விடியற்காலத்தில் எழுந்திருக்கும் பழக்கமுண்டாய்விட்டது. துரை யந்த வேலைக்காரனை யதுமுதல் தன்னுடைய சிநேகனைப்போல நடத்தி வாழ்நாள் முழுவதும்காப்பாற்றினுர்.

## 107. ஒன்னாரைச் சேரேல்.

பகைவரை நம்பாதே என்பதிதன் கருத்து.

மகராட்டியர் தலைவனான சிவாஜியை ஜெயித்து அவனைக் கைப்பிடியாகப் பிடித்துவரும்படி அப்சூல்கான் என்ற சேனாதிபதியை மிகப் பெரிய சேனையோடு பீஜபுர நாவாபாகிய அடில்ஷா அனுப்பினான். அப்சூல்கானுடைய பெரியசேனையை வெற்றிகொள்ளுவது சிவாஜிக்கு அசாத்தியமான காரியம். ஆகையால் சிவாஜி அவனைத் தந்திரமாய் வெல்ல எண்ணிப் பின்வருமாறு அவனுக்குத் தெரியப்படுத்தினான். "மகா பராக்கிரம சாலியான சுத்தவீர சிகாமணி அப்சூல்கானுக்குச் சிறிய மலைஎலியாகிய சிவாஜி அநேகவந்தனம். மகா பலவானாகிய தங்களைச் சயிக்க என்னால்முடியாது. தங்கள் பெயரைக் கேட்டமாத்திரத்திலேயே பெரிய வீரர்கள் யாவரும் முதுகுகாட்டி யோடுவார்கள் என்றால் ஒன்றுக்கும் பற்றாத மராட்டியனான நானா உங்களை எதிர்த்து நிற்பேன்? மேலும் உங்கள் கடல்போன்ற சேனையை நான் என்னுடைய சில ஆட்களைக்கொண்டு எப்படிச் சயிப்பது? ஆகையால் உங்களுக்குப் பயந்து நான் வணங்குகிறேன். இதுமுதல் என்னை உங்கள் சிநேகனாகப் பாவித்துக் கொள்ளவேண்டியது. அதற்கு அடையாளமாக நாமிருவரும் இன்று சாயங்காலம் வசந்தமண்டபத்தில் நிராயுதபாணிகளாய்ச் சந்தித்து ஏகாந்தமாய்ப் பேசிக் களித்து உறவு செய்துகொள்ளப் பெரிதும் விரும்புகிறேன்" என்று அப்சூல்கானுக்குச் சிவாஜி நிருபம் எழுதியனுப்பினான். பகைவனை நம்பக்கூடாது என்ற உண்மையறியாத அப்சூல்கான்

சிவாஜி யெழுதியதை நிஜமாக எண்ணி அன்றுமாலே குறித்த வசந்த மண்டபத்திற்கு நிராயுதபாணியாய்ப் போனான். சிவாஜியோ கைவிரலிற் புலிநகங்களை மாட்டிக்கொண்டுபோய் இருவரும் ஒருவரை யொருவர் சிநேகத்திற்காகத் தழுவுகிற சமயத்திற் சிவாஜி புலிநகங்களால் அப்சூல்கானைக் கிழித்துக் கொன்றுவிட்டான். அப்சூல்கான் பகைவனை நம்பிப் பட்டான்.

## 108. ஓரஞ் சோல்லேல்.

பட்சபாதமான வார்த்தை சொல்லாதே என்பது இதன் பொருள். நியாயசபையில் பட்சபாதமாகப் பேசினவர்கள் வீட்டிற் பேயடையும்; வெள்ளெருக்கஞ் செடி முளைத்துப் பூக்கும்; புற்றடைந்து வீடுநாசமாம்; மூதேவி அவர்கள் வீட்டில் நிரந்தரமாய் வாழ்ந்து கொண்டிருப்பாள்; பாம்புகள் அங்கே குடியிருக்கும், என்று ஆத்திசூடி எழுதின ஔவையே வேறோரிடத்திற் சொல்லியிருக்கிறாள்.

ஒருகாலத்தில் சிவபெருமானும் பார்வதியும் திருமாலை மத்தியஸ்தராக வைத்துக்கொண்டு சூதாடினார்கள். அந்த ஆட்டத்தில் பார்வதிதேவியே செயிக்கவும் பரமசிவன் தானே வென்றதாக வாதாடினார். நெடுநேரம் வாதிட்டு மத்தியஸ்தரான திருமாலை இருவரும் கேட்டனர். திருமால் பார்வதிதேவி வென்றதை யறிந்தவராயினும் பட்சபாதமாய்ப் பரமசிவனே வென்றதாகக் கூறினார். பார்வதி உடனே கோபித்துத் திருமாலைக் குருட்டுப் பாம்பாகும்படிச் சபித்தனள்.

காவிரிப்பூம் பட்டினத்துச் செட்டியாகிய கோவலன்

தன்னுடைய மனைவி கண்ணகியின் பொற்சிலம்புகளு ளொன்றை மதுரையில் விற்கப்போனபொழுது, தட்டானொருவன்செய்த வஞ்சனையால், பாண்டியன் கோவலனைக் கள்வனென்று பட்சபாதமாய் தீர்மானித்துக் கொலைத் தண்டனைசெய்ய விதித்தனன். அதனால் வெகுண்டெழுந்த கண்ணகியால் உண்மையறிந்த அரசன் தன்னுடைய கொடுங் கோன்மையை அஞ்சி உயிர் துறந்தான். கண்ணகியால் மதுரைமாநகரம் முழுவதும் எரிந்து அழிந்தது. கண்ணகி தன் கற்பின் வலிமையால் இறந்த கோவலனை யெழுப்பி அவனுடன் விமானமேறிப் புண்ணியலோகமடைந்தனள். கண்ணகி யாவராலும் பத்தினிக் கடவுளென்று சிறப்புடன் கொண்டாடப்பெற்றனள்.







THOMPSON & CO., MADRAS.